# சங்கத் தமிழக நகரங்கள்

முனைவர் (பி.எச்.டி) பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு



ஆய்வாளர்
திருமதி. **கி. துர்காதேவி,** எம்.ஏ., எம்ஃபில்.,

மேற்பார்வையாளர்
முனைவர் **பொன். கோதண்டராமன்**
முன்னைத் துணைவேந்தர்
சென்னைப் பல்கலைக் கழகம்

இணைமேற்பார்வையாளர்
முனைவர் **வீ. அரசு**
பேராசிரியர் – தலைவர்.
சென்னைப் பல்கலைக் கழகம்

**தமிழ் இலக்கியத்துறை**
சென்னைப் பல்கலைக்கழகம்
மெரினா வளாகம்
சென்னை – 600 005,
சனவரி – 2006.

முனைவர் **பொன். கோதண்டராமன்** (பொற்கோ)
முன்னைத் துணைவேந்தர்
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை – 600 005,

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

"**சங்கத் தமிழக நகரங்கள்**" என்னும் தலைப்பில் உள்ள இந்த ஆய்வேடு **திருமதி. கி. துர்காதேவி** என்பவர் **முனைவர் (பி.எச்.டி)** பட்டப்பேற்றிற்காக 1999 சனவரி முதல் 2006 சனவரி வரை சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத் துறையில் முழுநேர ஆய்வாளராக ஆய்வு நிகழ்த்தி உருவாக்கியதாகும். இந்த ஆய்வேடு அவருடைய சொந்த முயற்சியில் உருவானது என்பதற்கும் இது வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இதற்குமுன் அளிக்கப்பெறவில்லை என்பதற்கும் சான்று வழங்குகிறேன்.

**(பொன். கோதண்டராமன்)**
மேற்பார்வையாளர்

இடம் : சென்னை – 600 005,
நாள் : 03–01–2006

**(வீ. அரசு)**
இணைமேற்பார்வையாளர்

[redacted] **கி. துர்காதேவி,** எம்.ஏ., எம்.ஃபில்.,
ஆய்வாளர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை – 600 005,

## ஆய்வாளர் உறுதிமொழி

“**சங்கத் தமிழக நகரங்கள்**“ என்னும் தலைப்பில் முனைவர் (பி. எச். டி) பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்தின் முன்னைத் துணைவேந்தர் பேராசிரியர் **முனைவர் பொன். கோதண்டராமன் (பொற்கோ)** அவர்கள் மேற்பார்வையில் முழுநேர ஆய்வாளராக இருந்து 1999 சனவரி முதல் 2006 சனவரி வரை நிகழ்த்தப்பட்ட இந்த ஆய்வு என் சொந்த முயற்சியில் உருவானதே என்றும் இதற்கு முன் இந்த ஆய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் வழங்கப் பெறவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

இடம் : சென்னை – 600 005,
நாள் : 03–01–2006

**(கி. துர்காதேவி)**
ஆய்வாளர்

# நன்றியுரை

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத் துறையில் ஆய்வு நிகழ்த்தி **'சங்கத் தமிழக நகரங்கள்'** என்னும் இவ்வாய்வேட்டை உருவாக்கியுள்ளேன். எனது ஆய்வுக்கு உறுதுணையாக இருந்தோர் பலர். அவர்கள் அனைவருக்கும் நான் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுக்கு ஆதரவும் ஊக்கமும் அளித்த என் பெற்றோர்களுக்கும் உடன்பிறந்தோர்க்கும் என் மனம் நிறைந்த நன்றி. உடனிருந்து ஆய்வு முழுமைபெற உறுதுணைப்புரிந்த என் கணவருக்கு மனமார்ந்த நன்றி கூறி கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுத்தலைப்பினைத் தேர்வு செய்துத்தந்து, ஆய்வை நெறிப்படுத்தியும், ஆராய்ச்சி நெறிமுறைகளை விளக்கிச் சொல்லியும், ஆய்வின் அனைத்துப்படி நிலைகளிலும் உதவிய ஆய்வு மேற்பார்வையாளர் **முன்னாள் துணைவேந்தர், பேராசிரியர் முனைவர். பொன்.கோதண்டராமன்** (பொற்கோ) அவர்களுக்கு என் பணிவார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்காலத்தில் அவ்வப்போது கருத்துரைத்து, ஊக்குவித்த, தமிழ் இலக்கியத் துறைத் தலைவர், **பேராசிரியர் முனைவர். வீ. அரசு** அவர்களுக்கும், பேராசிரியர் முனைவர். **ய. மணிகண்டன்** அவர்களுக்கும், **பேராசிரியர் முனைவர். பெ. அர்த்தநாரீஸ்வரன்** (மாநிலக் கல்லூரி) பேராசிரியர் முனைவர். **பூ. இராமச்சந்திரன்** (எஸ்.ஐ,வி.இ.டி) அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னைப் பல்கலைக் கழக நூலகம், மறைமலையடிகள் நூலகம், கன்னிமாரா நூலகம், உ.வே. சாமிநாதய்யர் நூலகம், தொல் பொருள் ஆய்வுத்துறை (தரமணி, எழும்பூர்) நூலகம் போன்ற நூலகங்களில் ஆய்வுக்குத் தேவையான நூல்களைத் தந்துதவிய அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர் சரஸ்வதிமஹால் நூலகத்தாருக்கும், தஞ்சைப் பல்கலைக் கழகத்தின் முன்னைத் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர். **இ. சுந்தரமூர்த்தி** அவர்களுக்கும், பேராசிரியர் முனைவர். **பெ. மாதையன்** அவர்களுக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இவ்வாய்வேடு முழுமைபெற உதவிய **திரு. கௌரிசங்கர்** அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான உதவிகளை அக்கரையோடு உரியநேரத்தில் செய்து கொடுத்த திருவாளர் மணி அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்கு உதவிபுரிந்த நண்பர்கள் **திரு. தாமஸ்** அவர்களுக்கும் **திரு. சுந்தர்** அவர்களுக்கும் **திரு. ப. சரவணன்** அவர்களுக்கும் தோழிகள் முனைவர் திருமதி. **முத்துமாலைக்கும், திருமதி. பாமாவிற்கும், திருமதி. பூங்கோதை** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டை சிறந்த முறையில் தட்டச்சு செய்த **திரு. க. மனோகரன்** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# சுருக்க விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | அகம். | – | அகநானூறு |
| 2. | ஐங். | – | ஐங்குறுநூறு |
| 3. | கலி. | – | கலித்தொகை |
| 4. | கு.கலி | – | குறிஞ்சிக்கலி |
| 5. | குறுந் | – | குறுந்தொகை |
| 6. | சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| 7. | திருமுருகு. | – | திருமுகாற்றுப்படை |
| 8. | தொல் | – | தொல்காப்பியம் |
| 9. | தொல்.பொ. | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| 10. | நற். | – | நற்றிணை |
| 11. | ப. பத்து. | – | பதிற்றுப் பத்து |
| 12. | பரி.பா. | – | பரிபாடல் |
| 13. | பரி.திரட்டு | – | பரிபாடல் திரட்டு |
| 14. | ப. பாலை | – | பட்டினப்பாலை |
| 15. | ப. பா. | – | பத்துப்பாட்டு |
| 16. | பா.கலி. | – | பாலைக்கலி |
| 17. | புறம் | – | புறநானூறு |
| 18. | பொரும்பாண் | – | பெரும்பாணாற்றுப்படை |
| 19. | பொருநர் | – | பொருநர் ஆற்றுப்படை |
| 20. | ம.கா. | – | மதுரைக்காஞ்சி |
| 21. | ம.கலி. | – | மருதக்கலி |
| 22. | மு.கலி. | – | முல்லைக்கலி |
| 23. | மு.பா. | – | முல்லைப்பாட்டு |
| 24. | நெடுநல் | – | நெடுநல்வாடை |
| 25. | நெ.கலி. | – | நெய்தற்கலி |
| 26. | ப. | – | பக்கம் |
| 27. | பக். | – | பக்கங்கள் |
| 28. | பா. | – | பாடல். |

# பொருளடக்கம்

# இயல் ஒன்று

தமிழகத்தில் வரலாற்றுப் பெருமைமிக்க பல மாநகரங்களின் உண்மையான வரலாறும் பெருமையும் இன்றளவும் முழுமையாக அறிந்து கொள்ள முடியவில்லை. சங்ககாலமே தமிழர் நாகரிகத்தின் பொற்காலம். கடல் கோளால் சீரழிக்கபட்ட பல நாட்டகப்பட்டணங்கள் இன்றளவும் வரலாற்றினை நிலைநிறுத்தி நமக்கு வரலாற்று உண்மைகளை உணர்த்தி நிற்கின்றது.

வரலாற்றறிஞர்கள், தமிழ்ச் சான்றோர் போன்றோரின் அரும்பெரும் முயற்சியினால், தொல் பொருள் ஆய்வுத்துறையினரின் இடையறாத பணிகளாலும் பெருமை வாய்ந்த மாநகரங்கள் பற்றிய குறிப்புகளை உலகறியச் செய்து வருகின்றனர்.

பழம்பெருமையையும் வரலாற்று நிகழ்வுகளையும் தோண்டித்துருவி ஆராய்ந்து, அரிய உண்மைகளை வெளிப்படுத்தியவர்களுள் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, ஔவை துரைசாமிபிள்ளை, தி. வை. சதாசிவ பண்டாரத்தார், மா. இராசமாணிக்கனார், கே.கே. பிள்ளை ஆகியோர் குறிப்பிடத்தக்க வரலாற்றறிஞர்கள் ஆவர். கடல்கோளும், அந்நியர் படையெடுப்புகளும் தமிழக மன்னர்களுக்கிடையேயும், வேற்று நாட்டு மன்னர்களுக்கிடையேயும் ஏற்பட்ட போர் போன்ற பேரழிவுகளால் தமிழகப் பட்டணங்களும், துறைமுகங்களும் அழகையும், நுண்சிறப்பையும் இழந்தன.

தமிழர் நாகரிகத்தின் தொன்மைக்காலமான சங்ககாலத்தில் தமிழக நகரங்கள் எவ்வாறு இருந்தன என்பது பற்றியும், சங்ககால மக்களின் வாழ்வியல் நிகழ்வுகள், நாகரிகம், பண்பாடு முதலியன எவ்வண்ணம் வெளிப்பட்டன என்பதுபற்றியும் ஆராயும் நோக்கில் விளக்கவியல் ஆய்வாக சங்கத் தமிழக நகரங்கள் என்னும் தலைப்பில் ஆய்வு நிகழ்த்தப் பெற்றுள்ளது.

## ஆய்வுத் தலைப்புத் தேர்வு

சங்கத் தமிழக நகரங்கள் என்னும் தலைப்பில் சங்க காலத்தில் மூவேந்தர்களின் தலைநகராகவும், துறைமுகப்பட்டினமாகவும் விளங்கிய நகரங்களைப் பற்றி மட்டுமே

விரிவாக ஆராயப் பெறுகின்றது. இவ்வாய்வில் கொங்கு, பல்லவ நாடுகளும், நகரங்களும் இங்கு ஆராயப் பெறவில்லை.

சங்கத்தமிழக நகரங்களை நாட்டகப்பட்டணம் என்றும் துறைமுகப்பட்டினம் என்றும் பகுத்துக் கொண்டு ஆய்வு நிகழ்த்தப் பெறுகின்றது. மூவேந்தர்களின் தலைநகரங்களாக விளங்கிய வஞ்சி, உறையூர், மதுரை முதலிய நகரங்களையும் துறைமுகப்பட்டினங்கள் என்ற அளவில் துறைமுகப்பட்டினங்களாக பண்டைய நாளில் சிறப்புற்று விளங்கிய முசிறி, தொண்டி, மாந்தை, காவிரிப் பூம்பட்டினம், கொற்கை, காயல் முதலிய பட்டினங்கள் பற்றிய கருத்துகள் வகை தொகை செய்யப்பட்டு விளக்கவியல் நெறிபிடித்து ஆராய முயல்கின்றது.

சங்கத் தமிழக நகரங்கள் என்னும் இவ்வாய்விற்கு காவிரிபூம்பட்டினம், மதுரை, கொற்கை, வஞ்சி, உறையூர் போன்ற நகரங்களிலும் அந்நகரங்களின் சுற்றுப்புறங்களிலுள்ள ஊர்ப் புறங்களிலும் வாழ்ந்த மக்களின் நாகரிகம் பண்பாடு பற்றிக் காணவேண்டிய தேவை ஏற்பட்டதால், சங்ககால மக்களின் நாகரிகமும் பண்பாடும் என்ற இயலும், சங்க கால மக்களின் நகரரிய ஊரக மக்களின் பண்பாட்டினை வெளிப்படுத்துகையில் நகரிய வாழ்க்கை முறைக்கும் ஊரக வாழ்க்கை முறைக்கும் உள்ள வேறுபாட்டினை விளக்கி நகரிய நாகரிகத்தைவிட ஊரகப்பண்பாடு எங்ஙனம் சிறந்து வளங்கியது என்பதை விளக்கும் பொருட்டு ஊரக வாழ்வும் நகரிய வாழ்வும் என்ற இயலும் இணைக்கப்பட்டுள்ளன.

## ஆய்வின் நோக்கம்

1. வரலாற்றிற்கு முற்பட்ட காலத்திலிருந்தே சிறப்புற்று விளங்கிய வஞ்சி, உறையூர், மதுரை போன்ற நகரங்கள் பண்டைக் காலத்தே பெற்றிருந்த சிறப்புகளை ஆய்ந்தறிதல்.

2. பிளைனி, தாலமி போன்ற வெளிநாட்டார் குறிப்புகள், சங்கப்பாடல்கள் வழியாக பண்டைய பழம் பெருமையையும், வரலாற்று உண்மைகளையும் வெளிக் கொணர்தல்.

3. துறைமுகப்பட்டினங்களின் அன்றைய வளர்ச்சிப் போக்கையும், இன்றைய சிற்றூர்களாக விளங்கும் துறைமுகங்களைப் பற்றியும் ஒப்பிட்டு நோக்குதல்.

4. சங்ககால மக்களின் நாகரிகமும், பண்பாடும் எவ்வாறு நிலவின என்பதனை இலக்கியங்கள் வழி காணுதல்.

5. நகரங்களின் வளர்ச்சி நிலைகளையும் அந்நகரங்கள் எவ்வாறு வரலாற்றிற்குத் துணைபுரிந்தது என்பதனையும் கண்டறிதல்.

6. துறைமுகப்பட்டினங்களின் சிறப்புகளைக் காணுதல்.

7. நாகரிகமும், பண்பாடும் பண்டைத் தமிழ் மக்களின் வாழ்வோடு வளம் பெற்றத் தன்மைகளைக் கண்டு அறிதல்.

8. ஊரக வாழ்க்கையும், நகரிய வாழ்க்கையும் மக்கள் வாழ்வியலோடு தொடர்பு கொண்டுள்ள தன்மைகளை விளக்கி அறிய முயலுதல்.

## ஆய்வு ஆதாரங்கள்

சங்க இலக்கியங்களும், வெளிநாட்டினர் பயணக்குறிப்புகளும், அகழாய்வுச் செய்திகளும் முதன்மை ஆதாரமாகக் கொள்ளப்பட்டன.

சங்ககாலம் பற்றிய கட்டுரைகளும், ஆய்வேடுகளும், மலர்களும், முனைவர் பட்ட ஆய்வுகளும், கருத்தரங்க ஆய்வுக்கட்டுரைகளும் துணைமை மூலங்களாகக் கொள்ளப்பட்டன.

## ஆய்வுமுறை

இவ்வாய்வு வரலாற்று ஆய்வாகவும், பகுத்து ஆயும் பகுப்புமுறை ஆய்வாகவும், அனைத்தையும் விரித்து எழுதும் விளக்கவியல் ஆய்வாகவும் விளங்குகின்றது.

## ஆய்வுத்திட்டம்

ஆய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டுள்ளது.

## ஆய்வுப்பயன்

சங்கத் தமிழக நகரங்கள் என்னும் தலைப்பின் கீழ் ஆய்வினை மேற்கொண்டதன் மூலம் சங்க காலத்தில் தமிழக நகரங்கள் எவ்வாறு இருந்தன என்பது பற்றியும் நகர வாழ்க்கைக்கும் ஊரக வாழ்க்கைக்கும் உள்ள வேறுபாடுகள் பற்றியும் சங்க கால நகர வளர்ச்சிப்பற்றியும், வாணிகச் சிறப்புப் பற்றியும் சங்க கால மக்களிடம் நாகரிகமும், பண்பாடும் எவ்வகையில் வெளிப்பட்டன என்பது பற்றியும் தெரிந்து கொள்வது ஆய்வுப் பயனாக அமைந்துள்ளது.

## இயல் ஒன்று: முன்னுரை

இவ்வியலில் ஆய்விற்கான தலைப்புவிளக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு நோக்கம், ஆய்வுத்திட்டம் முதலியன விளக்கப்பட்டுள்ளன.

## இயல் இரண்டு: நாட்டகப்பட்டணங்கள்

இவ்வியலில் சங்கத் தமிழக நகரங்களில் சேர, சோழ பாண்டியர்களின் நாட்டகப் பட்டணங்களான வஞ்சி, உறையூர், மதுரை முதலிய நகரங்களைப் பற்றியும், அந்நகரங்களின் அமைப்புமுறை, சங்க இலக்கியங்களில் அந்நகரங்கள் பெற்றிருந்த இடம், அந்நகரங்களில் வாழ்ந்த புலவர்கள் பற்றிய குறிப்புகள் போன்றவை விரிவாகவும் விளக்கமாகவும் ஆராயப்பெற்றுள்ளன.

## இயல் மூன்று: துறைமுகப்பட்டினங்கள்

மூவேந்தர்களின் துறைமுகப்பட்டணங்கள் ஆய்வுக்கு மேற்கொள்ளபட்ட நிலையில் சேரர்களின் துறைமுகப்பட்டினங்களுள் முசிறி, மாந்தை, தொண்டி முதலியனவும் சோழர்களின் துறைமுகப்பட்டினங்களுள் காவிரிப்பூம்பட்டினமும்,

பாண்டியர்களின் துறைமுகப்பட்டினங்களுள் கொற்கையும் காயலும் சுட்டிக் காட்டப்பெறுகின்றன.

## இயல் நான்கு: ஊரகவாழ்வும் நகரிய வாழ்வும்

இவ்வியலில் ஊரகமக்களின் வாழ்க்கை முறையும், நகரிய மக்களின் வாழ்க்கைமுறையும் குறிப்பிடப்படுகின்றன. வாழ்க்கைமுறை, தொழில், திருமணம் முதலியவை ஊரக வாழ்விலும், நகரிய வாழ்விலும் பெற்றுள்ள இடத்தினையும் அவற்றிற்கிடையே உள்ள வேறுபாட்டினையும் பகுத்தாய்கின்றது.

## இயல் ஐந்து: சங்ககால மக்களின் நாகரிகமும் பண்பாடும்

சங்ககால மக்களின் நாகரிகமும் பண்பாடும் என்னும் இவ்வியல் பண்பாடு, நாகரிகம் பற்றிய கருத்துகளை விரிவாக ஆய்கின்றது. சங்ககால மக்களின் அன்றாட பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், விழாக்கள், பண்டிகைகள், பொழுது போக்குகள், மக்களின் நம்பிக்கைகள் போன்றவைகள் விரிவாகவும் விளக்கமாகவும் பகுத்தாய்யப்படுகின்றன.

ஊரக வாழ்வில் சொல்லப்பட்டுள்ள சில செய்திகளும், நகரிய வாழ்வில் சொல்லப்பட்டுள்ள சில செய்திகளும் தொடர்பு நோக்கி சங்ககால மக்களின் நாகரிகமும் பண்பாடும் என்று இயலிலும் பேசப்பட்டுள்ளன.

## இயல் ஆறு: முடிவுரை

ஒவ்வொரு இயலிலும் கண்டறியப்பட்ட மெய்மைகள் யாவும் தொகுத்துக் காட்டப்பெறுகின்றன. பின்னிணைப்பில் உசாத்துணைக்குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. அத்துடன் நிழற்படங்கள், வரைபடங்கள் அட்டவணைகள் போன்றனவும் இடம்பெற்றுள்ளன.

# இயல் இரண்டு

## நாட்டகப்பட்டணங்கள்

1. சேரர்களின் அகப்பட்டணம்
   வஞ்சி

2. சோழர்களின் அகப்பட்டணம்
   உறையூர்

3. பாண்டியர்களின் அகப்பட்டணம்
   மதுரை

## நாட்டகப்பட்டணங்கள்

வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ் கூறும் நல்லுலகம்[1]

எனும் தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம் பழந்தமிழ்நாட்டின் எல்லைகளை வரையறுக்கின்றது. தொல்காப்பியர்க் காலத்தே வடக்கே வேங்கடமலையும் தெற்கே குமரிமுனையும் இருபுறமும் கடல்களும் எல்லைகளாக அமைந்திருந்தன.

சங்கஇலக்கிய நூலாகிய எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான புறநானூற்றில்

தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலா எல்லை
குன்று மலை காடு நாடு
ஒன்று பட்டு வழிமொழியக்
கொடிது கடிந்து கோல் திருத்திப்
படுவதுண்டு பக லாற்றி
இனிதுஉருண்ட சுடர் நேமி
முழுது ஆண்டோர் வழி காவல[2]

எனக் குறுங்கோழியூர் கிழாரும்

வடா அது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்
குடாஅது தொன்று முதிர் பெளவத்தின் குடக்கும்[3]

எனக் காரிக்கிழாரும்

தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலா எல்லைத்
தொன்று மொழிந்து தொழில் கேட்ப[4]

என **மதுரைக் காஞ்சியும்** குறிப்பிட்டுள்ளவற்றிலிருந்து தமிழகத்தின் பரந்துபட்ட எல்லை வெளிப்படும்.

தொல்காப்பியர் காலத்தில் தமிழகம் சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தர்களால் ஆளப்பட்டு சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என அழைக்கப்பட்டுள்ளது. கொங்குநாடு தொண்டைநாடு என்னும் பகுதி தோன்றவில்லை. கன்னடநாடும் துளுநாடும் பிற்காலத்தில் தோன்றியவையே. மலையாள மொழிவழங்கும் கேரள எல்லைப்பகுதியும் சேரநாடாகவே தொல்காப்பியர் காலத்தில் விளங்கியது.

சங்ககாலத் தமிழக நாடுகளுக்குத் தெளிவான எல்லைவரையறை இல்லை. தமிழகத்தின் மேற்குப் பகுதியைச் சேரநாடாகவும், தென்பகுதியைப் பாண்டியநாடு எனவும், கிழக்குப்பகுதியைச் சோழநாடாகவும் கொண்டனர். அவை குடபுலம், தென்புலம், குணபுலம் என்றும் அழைக்கப்பெற்றன.

சேரநாட்டில், வேணாடு, குட்டநாடு, சீதநாடு, கற்காநாடு, குடநாடு, பூழிநாடு, மலையமான்நாடு ஆகியவையும் அடங்கும்.

பாண்டிநாட்டில் செந்தமிழ்நாடும், தென்பாண்டி நாடும் அடங்குவன. சோழநாடு, பன்றிநாடு, புனல் நாடு, அருவாநாடு, அருவா வடதலைநாடு ஆகியவை அடங்கிய பகுதியாகத் திகழ்ந்தது. சங்ககாலத் தமிழக நகரங்களை இருபிரிவாகக் கொள்ளலாம்.

அவை,

1. நாட்டகப்பட்டணங்கள்
2. துறைமுகப்பட்டினங்கள் ஆகும்.

நாட்டகப்பட்டணங்கள்

போக்குவரத்து, சாலைவசதிகள், கைத்தொழில் மேன்மை, விளைபொருள் உற்பத்தி இவற்றின் அடிப்படையில் அமைந்த வாணிகப் பெருக்கம் கொண்ட

பேரூராக விளங்கிய பகுதி தலைநகராகக் கொள்ளப்பட்டது. பெரிய மாடமாளிகைகள் நிரம்பிய இடங்கள் நகரங்களாய்த் திகழ்ந்தது.

தமிழகத்தின் தலைநகரங்கள் கோயில் அல்லது அரண்மனையை மையமாகக்கொண்டு, அகழிகள் போன்றவற்றோடு திகழ்ந்தன.

**மண்உற ஆழ்ந்த மணிநீர்க் கிடங்கின்**
**விண்உற ஓங்கிய பல் படைப் புரிசை**
**தொல்வலி நிலைஇய அணங்குடை நெடு நிலை**
**நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்**
**மழை ஆடும் மலையின் நிவந்த மாடமொடு[5]**

என்னும் மதுரைக்காஞ்சி அடிகள் மதுரைநகரின் சிறப்பினை விளக்குகிறது. ஒரு நாட்டின் தலைநகர் அளவிற்குச் சிறப்புற்ற நகரினை நாட்டகப்பட்டணம் எனவும் கொள்ளலாம்.

பரிபாடல் திரட்டில் நாட்டகம் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இதனை,

**தண்டமிழ் வேலித் தமிழ் நாட்டகமெல்லாம்**
**நின்று நிலை இப்புகழ் பூத்தல்லது[6]**

என்ற பாடலில் நாட்டகம் என்ற வொல்லாட்சி இடம்பெற்றுள்ளது. சேரநாட்டிற்கு வஞ்சியும், சோழநாட்டுக்கு உறையூரும், பாண்டியநாட்டுக்கு மதுரையும் நாட்டகப் பட்டணமாகத் திகழ்ந்துள்ளன.

தமிழ்நாட்டில் மூவேந்தர்களின் தலைநகரங்களாக விளங்கிய நகரங்கள் ஆற்றோரங்களில் அமைந்திருக்கின்றன. வஞ்சிமாநகர் பேரியாற்றங்கரையிலும், உறந்தைமாநகர் காவிரியாற்றங்கரையிலும், கூடல்மாநகர் வைகையாற்றங்கரையிலும் தோன்றியுள்ளன.

உலகப் அளவில் பெருநகரங்கள் யாவும் ஆற்றோரங்களில் தோன்றியுள்ளமை, உலகநாகரிகம் ஆற்றங்கரை நாகரிகம் என்பதை எடுத்துரைக்கின்றது. வஞ்சி, உறையூர், மதுரை என்னும் மூவேந்தர்களின் முக்கிய தலைநகரங்களாகவும் நாட்டகப்பட்டணங்களாகவும் விளங்கிய ஊர்களே இவ்வியலில் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

## சேரர்களின் அகப்பட்டணம்: வஞ்சி

சங்ககால தமிழகத்தில் வஞ்சி சேரர்களின் மிகச்சிறந்த தலைநகரமாக விளங்கியது. வான் அளவிய புகழையும் வெற்றியையும் கொண்டதாக வஞ்சி மாநகரம் விளங்கியுள்ளது.

## வேறுபெயர்கள்

பூவாவஞ்சி, வாடாவஞ்சி, ஆதிபுரம், வஞ்சுளாரணியம், கர்ப்பப்புரி, கருவூர், பாற்கரபுரம், கண்மங்கலசேத்திரம், முடிவழங்கு சோழபுரம் முதலான பெயர்களால் வஞ்சிமாநகரம் அழைக்கப்பட்டுள்ளது.

**“கரூர்ப்புராணம் எழுதியுள்ள சா. கிருட்டிணசாமி என்பவர் சேரநாட்டில் பெரியாறு என்னும் ஆற்றின் அருகில் உள்ள கரூரே சேரர்களின் வஞ்சிமாநகர் என்று குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தையே கனகசபை பிள்ளையவர்களும், கே.ஜி. ஷேய்யரும் ஒப்புக்கொண்டு உள்ளனர். கொங்குநாட்டிலுள்ள கரூர் பகுதியையும் ஆனிலை என்னும் நகரையும், அதனைச் சுற்றியுள்ள இடங்களையும் பிற்காலச் சோழர்கள் வென்று தங்கள் நாட்டுடன் சேர்த்துக் கொண்டபிறகு அதற்குச் சேரர் கொங்கு என்று பெயர்சூட்டினர். சேழநாட்டிலுள்ள கரூர்ப்பட்டினமே சங்கநூல்களில் காணப்பெறும் வஞ்சிமாநகர் எனக் கொள்ளல் வேண்டும்.”**[7] என்று மயிலை. சீனி வேங்கடசாமி குறுப்பிட்டுள்ளார்.

**“சேரநாட்டிலுள்ள திருவஞ்சைக்களமே வஞ்சிமாநகர் எனப்படும். வஞ்சி என்னும் ஊர்ப்பெயர் தாவரத்தால் பெற்ற பெயராகும். திருச்சிராப்பள்ளி**

மாவட்டத்திலுள்ளதும் கொங்கு நாட்டதுமான கரூரே வஞ்சி மாநகர் என்பாரும், மலைநாட்டு மேற்குத் தொடர்ச்சி மலையடிவாரத்தில் பேரியாற்றங்கரையிலுள்ள கரூரே வஞ்சி மாநகர் என்பாரும் எனப் பலவேறு ஆராய்ச்சியாளர் உள்ளனர்."[8] என்று கலைக்களஞ்சியம் குறிப்பிட்டுள்ளது.

சங்க இலக்கியங்களில் வஞ்சி மாநகர் பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன.

**சங்க இலக்கியங்களில் வஞ்சி**

**சிறுபாணாற்றுப்படையில்,**

வடபுல இமயத்து, வாங்குவில் பொறித்த
எழுவுறழ், திணிதோள், இயல் தேர்க்குட்டுவன்
வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே[9]

அகநானூற்றில்,

தொன்று முதிர்வடவரை வணங்கு வில்பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி அன்ன, என் நலம் தந்து சென்மே[10] என்றும்

வஞ்சிப் பற்றியக் குறிப்பு தரப்பட்டுள்ளன.

தலைவியின் சிறப்பைக் குறிப்பிடும் அகநானூற்றுப் பாடலில் பெரும் புகழை உடைய வஞ்சி நகரத்தைப் போன்றவள் தலைவி என்று வஞ்சிமாநகரம் பெண்ணுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

இதனை,

கடும் பகட்டுயானை நெடுந்தேர்க் கோதை
திருமா வியனகர்க் கருவூர் முன்துறை[11]

என்று சிறப்பிக்கின்றது.

சேரமன்னனின் யானையானது வரி பொருந்திய நெற்றியை உடையது. மதநீர் கொண்ட வாயோடு கூற்றுவனைப் போன்று வலிமையுடன், ஆட்களை நிலத்தில் அறைந்து கொள்ளும் தன்மை உடையது. அத்தகைய வலிமை பொருந்திய யானைகளை உடைய சேரமன்னனின் ஆன்பொருநை ஆற்றினை உடையது கருவூர். என்று புறநானூறும் சிறப்பிக்கின்றது.

**தண்பொரு நைப்புனல் பாயும்**
**விண்பொரு புகழ் விறல் வஞ்சிப்**
**பாடல் சான்ற விறல் வேந்தனுமே[12]**

குளிர்ந்த நீர் பரப்பினையுடைய ஆன்பொருநை ஆற்றினையுடைய கருவூர், வான்அளாவிய புகழையும் வெற்றியையும் உடையதாக விளங்கியது. இதனை,

**வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று**
**வஞ்சி மூதூர்த்தந்து பிறர்க்கு உதவி[13]**

இளஞ்சேரல் இரும்பொறை, போரின் மூலம் கைப்பற்றப்பட்ட செல்வங்களையெல்லாம் தன் தலைநகர் வஞ்சி நகர்க்குக் கொணர்ந்து அவற்றை இரவலர்களுக்கு கொடுத்து உதவினான். என்று பதிற்றுப்பத்து குறிப்பிட்டுள்ளது.

**பூவினுட் பிறந்தோன் நாவினுள் பிறந்த**
**நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப**
**ஏம இன்துயில் எழுதல் அல்லதை**
**வாழிய வஞ்சியும் கோழியும் போலக்**
**கோழியின் எழாது எம்பேர் ரூர் துயிலே[14]**

என்று பரிபாடல்திரட்டும் வஞ்சி மாநகர் பற்றியும், உறையூர் பற்றியும் குறிப்பிட்டுள்ளது.

## கோவில்கள்

வஞ்சி எனப்படும் கரூர் நகரில் அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் ஆலயம், பெருமாள் கோயில், மாரியம்மன் கோயில், காமாட்சியம்மன் கோயில், வாசவி பரமேசுவரி ஆலயம், மாதா கோயில்கள், மசூதிகள் ஆகியன உள்ளன.

இக்கோவில்களில் கல்யாண பசுபதீசுவரர் திருக்கோயில் பழைமைச் சிறப்பு வாய்ந்த கோயில்லாகும். சிற்பங்களும் இக்கோயிலில் இடம்பெற்றுள்ளன.

கரூரின் தெற்கில் அமைந்துள்ள தான்தோன்றி மலையில் உள்ள கல்யாண வேங்கடரமணசாமி கோயிலும், வடக்கில் அமைந்துள்ள வெண்ணெய் மலையில் உள்ள முருகன் கோயிலும் புகழ்மிக்க கோயில்களாகும்.

## மன்னர்கள்

### சேர மன்னர்கள்

சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை, சேரமான் யானைகட்சேய் மாந்தரஞ்சேரல் முதலான சேரமன்னர்கள் வஞ்சியை ஆட்சி புரிந்தனர். கோஇரவி கோதை என்னும் இடைக்காலச் சேர வேந்தனும் கரூரை ஆட்சிபுரிந்தான். ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறையே முதன்முதலில் கருவூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தான் என்பது அம்மன்னனின் பெயர்க்கு முன்னே அமைந்த கருவூரேறிய என்ற அடைமொழியால் அறியப்படும்.

### சோழ மன்னர்கள்

சோழமன்னர்களான குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், மூன்றாம் குலோத்துங்கன், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன், விக்கிரம சோழன் முதலான அரசர்கள் கரூரை ஆட்சி புரிந்துள்ளனர்.

## பாண்டியர் ஆட்சி

முதாலம் இராசசிம்மன், கோச்சடையன் இரணதீரன், பராந்தக நெடுஞ்சடையன் முதலான முற்காலப் பாண்டியர்களும், முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், வீரபாண்டியன், முதலான பிற்காலப் பாண்டியமன்னர்களும் கரூரை ஆட்சிபுரிந்துள்ளனர். கிழக்கிந்தியக் கம்பெனியாரும் ஆங்கிலேயர்களும் கரூரைத் தம் ஆட்சிக்கு உட்படுத்தியுள்ளனர்.

## புலவர்கள்

கருவூர்க்கதப்பிள்ளை, கருவூர் கதப்பிள்ளைச் சாத்தனார், கருவூர்க்கிழார், கருவூர்கலிங்கத்தார், கருவூர்க் கோசனார் போன்றோர்கள் சங்ககாலக் கருவூர்ப் புலவர்கள் ஆவார்கள். கருவூர்த் தேவர், கருவூரார் போன்றவர்களும், நாயன்மார்களுள் சிவகாமி யாண்டவரும், புகழ்ச்சோழ நாயனாரும் கரூர்ப்பகுதியில் வாழ்ந்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

## இன்றைய கரூர்

கரூரைச் சுற்றியுள்ள சிற்றூர்களில் மிளகாய், கடலை, மஞ்சள், எள், பருப்பு, பயறு வகைகள் முதலியன கரூர் தானிய மண்டிகளின் மூலம் விற்பனை ஆகின்றன. இங்கு விளையும் விளைப்பொருட்கள் வெளிமாநிலங்களுக்கும் அனுப்பப்படுகின்றன. உந்து வண்டிகளுக்கு மேற்பகுதிகள் அமைக்கும் தொழிலில் இன்றையகரூர் சிறப்புற்றுத் திகழ்கின்றது.

கரூரில், நகராட்சியினர் நடத்தும் பல தொடக்கப் பள்ளிகளும், தனியார் பள்ளிகளும், தொழில் நுட்பக் கல்விக்கூடமும் அரசுக் கலைக் கூடங்களும் அரசினர் கலைக்கல்லூரியும் வட்டாட்ச்சியர் அலுவலகம், மற்றும் மாவட்ட உரிமையியல் நீதிமன்றம் முதலானவைகளும் கரூரில் அமைந்துள்ளன.

## அகழாய்வு

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினர் கரூரில் ஐந்து இடங்களில் அகழாய்வு செய்துள்ளனர். அவ்வகழ்வாய்வில் சங்ககாலத்து எழுத்துகள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள், உரோமானிய மதுக்குடங்கள், உயர்ந்த மணிகள், சாயத் தொட்டிகள், சுடுமண் பொம்மைகள், இரும்புக் கத்திகள், கட்டடச் சிதைவுகள் ஆகியவை கிடைத்துள்ளன.

கரூரில் உரோமப் பேரரசர்களால் வெளியிடப்பட்ட ஆயிரத்துக்கும் மேற்பட்ட உரோமானியக் காசுகளும் கிடைத்துள்ளன. சங்ககாலத்தில் கரூர் உரோமானிய நாட்டுடன் கொண்டிருந்த வணிகத் தொடர்பும் நாகரிகச் சிறப்பும் அகழாய்வு மூலம் தெரியவந்துள்ளது.

## சோழர்களின் அகப்பட்டணம் : உறையூர்

ஊர் என்றாலே உறையூர் என்ற பாராட்டினைப் பெற்ற உறையூர் இன்று திருச்சிராப்பள்ளி நகரின் ஒரு சிறு பகுதியாக உள்ளது. சங்ககாலச் சோழ மன்னர்களின் தலைநகராகத் திகழ்ந்த உறையூர் சோழ நாட்டின் மேற்கில் காவிரியின் தென்கரையில் அமைந்திருந்தது.

உறையூர் பண்டைய நாளில் உறந்தை என்ற பெயரிலேயே பண்டைக்காலத்தில் வழங்கப்பட்டது. சங்க இலக்கியங்களில் உறந்தை என்ற சொல்லே மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. சிலப்பதிகாரத்தில் உறையூர் என்று இளங்கோவடிகள் பயன்படுத்தியுள்ளார். புலவர்கள் தங்களின் பெயர்களுக்கு முன்பு உறையூரை இணைத்துக் கூறுவதை பெருமையாகக் கருதினர்.

## வேறுபெயர்கள்

உறந்தை, கோழியூர், வாரணம், உசகபுரம் என்ற பெயர்களாலும் உறையூர் அழைக்கப்பட்டது. எல்லாவகையான செல்வச்செழிப்புகளும், வளங்களும் உறையும் நகரமாதலின் உறையூர் என வழங்கப்பட்டது.

இதனை,

**மலர்புகழ்வண் தமிழ்ச்சோழர் வளநாட்டு மாமூதூர்**
**உலகில் வளர் அணிக்கெல்லாம் உள்ளுறையூராம் உறையூர்**

என்று சேக்கிழார், குறிப்பிட்டுள்ளார்

**மதுரைத் தமிழகராதி உறையூர் பற்றிக் "உறையூர் – திருச்சிராப்பள்ளிக் கருகிலுள்ள சோழனூர் மருதநிலத்தூர், உறைந்தை, கோழி"**[15] என்று குறிப்பிட்டுள்ளது.

கோழி ஒன்று யானையை எதிர்த்துப் போரிட்டமையால் வீரமிக்க இந்த ஊர் கோழியூர் எனப்பட்டது. சோழ மன்னன் 'கோழியான்' எனவும் அழைக்கப்பட்டான். உறையூரிலுள்ள பஞ்சவர்ணசாமி கோயிலில், கோழியும், யானையும் போரிடுவது போன்ற காட்சி சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது.

**உறையூர்க் கூற்றம்** வடக்கே காவிரியும், தெற்கே உய்யக் கொண்டான் ஆற்றுடன் கற்குடி மலையும், கிழக்கே சிராப்பள்ளி குன்றும், மேற்கே குளிர் தண்டலையும் (குளித்தலை) எல்லைகளாக அமையப் பெற்றிருந்தது.

உறையூர் கூற்றத்துள் நாவலூர், தலைவாய்ப்பாடி, நாகலூர், கொடியாலத்தூர், கருப்பூர், பருத்திக் குடியான், தம்பிக்கினயான் நல்லூர், அமண்குடி, அல்லூர், சாத்தூர், திருவடகுடி, மேக்குடி, கற்குடி, புலிவலம், உறையூர், ஆகிய ஊர்கள் அடங்கியிருந்தன.

தமிழக வரலாற்றினை எடுத்துரைக்கும் கல்வெட்டுச் சான்றுகளில் உறையூர் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இரண்டாம் பராந்தகன் என்று அழைக்கப்படும் சுந்தர சோழனுடைய ஆட்சிக் காலத்தில் கூற்றத்து உறையூர் என்னுமளவில் உறையூர் இடம்பெற்றுள்ளது.

முதல் இராசராசன் காலத்தில், கேரளாந்தக வளநாட்டு உறையூர் கூற்றத்து உறையூர் என்றும், வீரராஜேந்திரன் காலத்தில், இராச கெம்பீர வளநாட்டு உறையூர்

கூற்றத்து உறையூர் என்றும் குலோத்துங்கன் காலத்தில், இராச மகேந்தர வளநாட்டு உறையூர் கூற்றத்து உறையூர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. சிவபாத சேகரபுரத்து உறையூர், மழைநாட்டு உறையூர், தென்கரை உறையூர் என்றும் தமிழகக் கல்வெட்டுகளில் உறையூர்ப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

சங்க இலக்கியங்களில் உறையூர்

சங்ககால நூல்கள் உறையூரையும் அந்நகரில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறைகளையும் படம்பிடித்துக் காட்டுகின்றன.

நற்றிணையில்,

**மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து**
**அறம் கெட அறியாதாங்கு**[16]

என்றவர்கள் உறையூரில் வீரமும், அறமும் நிலைபெற்றிருந்தமையை உணரலாம்.

குறுந்தொகையில்,

**யான்நயந்து உறைவோள் தேம் பாய்கூந்தல்**
**வளம் கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை**
**நுண் மணல் அறல் வார்ந்தன்ன**
**நல் நெறியவ்வே நறுந் தண்ணியவே**[17]

நல்நெறியவ்வே நறுந்தண்ணியவே என்று உறையூர் நீர்த்துறையாகச் சிறப்பிக்கப்பட்டுள்ளது உறையூரின் நீர்த்துறைச் சிறப்பினைத் தலைவன் தலைவியன் கூந்தலுக்கு உவமையாகச் சொல்கின்றான்.

அகநானூற்றில்,

**கறங்கு இசை விழவின் உறந்தைக் குணாது**
**நெடும் பெருங்குன்றத்து அமன்ற காந்தள்**[18]

நறுமணம் வீசும் தலைவியின் கூந்தல் வனப்பம் பொருந்திய சோழரது உறையூரிலுள்ள பெரிய நீர்த்துறையில் நுண்ணிய கருமணல் படிந்து கிடப்பதைப் போன்று நறுமணமமும், குளிர்ச்சியும் பெற்றுத் திகழ்வதாகத் தலைவன் குறிப்பிடுகிறான்.

மழைபோல் கொடுக்கும் வள்ளல் தன்மையுடைய தித்தனின் உறையூர், நெற்குவியல்களைக் கொண்டு திகழ்ந்தது.

**மழை வளம் தரூஉம் மா வண் தித்தன்**
**பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண்**[19]

சோழநாடு சோறுடைத்து என்றகருத்து இப்பாடல்வழி உறுதியாகிறது.

கட்டி என்பவன், உறையூரின் அவையிலே உண்டான கிணைப்பறவையின் ஒலியைக் கேட்டுத் தித்தனின் பெருமையை உணர்ந்து அஞ்சிப் போரிடாமல் ஓடினான்.

இதனை,

**தித்தன் வெளியன் உறந்தை நாள் அவைப்**
**பாடுஇன் தெண்கிணைப் பாடு கேட்டு அஞ்சிப்**
**போர்அடு தானைக் கட்டி**
**பொரா அது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே”**[20]

என்று உறந்தை நகரினை அகநானூறு சிறப்பிக்கின்றது.

உறையூர் சிறப்பினை விளக்கும் மற்றொரு பாடலில்,

**இருங்கதிர் அலமரும் கழனிக் கரும்பின்**
**விளைகழை பிழிந்த அம்தீம் சேற்றோடு**
**பால்பெய் செந்நெற் பாசவல் பகுக்கும்**
**புனல்பொரு புதவின் உறந்தை எய்தினும்**[21]

தீயிலிட்டு வதக்கிய நிணத்தின் கொழுவிய துண்டுகளைத் தினை அரிசிச்சோற்றுடன் முற்றிய கரும்பின் சாறு சுட்டபாகுடன் பாலைச் சேர்த்து அவலுடன் கலந்து பாணர் முதலியவர்களுக்குத் தரும் இயல்புடையவர்கள் வாழும் ஊர் உறையூர் என்றும் சிறப்பிக்கப் பட்டுள்ளது.

கடல் போன்ற படையையும் வன்மையையும் நீங்காத புகழையும் உடையது உறையூர்

இதனை,

**கெடல் அரு நல் இசை உறந்தை அன்ன**

**நிதியுடை நல் நகர்ப் புதுவது புனைந்து**[22]

என்றும்,

**கை வல் யானைக் கடுந்தேர்ச் சோழர்**

**காவிரிப் படப்பை உறந்தை அன்ன**

**பொன்னுடை நெடு நகர்**[23]

என்றும் சிறப்பிப்பதனால் உறையூரின் செல்வவளமும், வீரத்தன்மையும் அகநானூற்றுப் பாடல்கள் வழி தெளிவாகின்றன.

**புறநானூற்றில்,**

அறம் நின்று நிலைபெற்ற ஊராதலின் உறையூர் என்று பெயர் பெற்றது.

இதனை,

**மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து**

**அறம் நின்று நிலையிற் றாகலின்**[24]

என்ற வரிகள் உறையூரில் அறம் நிலைபெற்றிருந்ததைத் தெரிவிக்கின்றது.

DIGITISED

உறையூர் கோழி என்றும் கோழியூர் என்றும் அழைக்கப்பட்டது.

**நுங்கோ யார் என வினவின் எங்கோக்**
**களமர்க்கு அரித்த விளையல் வெங்கள்**
**யாமைப் புழுக்கின் காமம் வீடஆரா**
**ஆரற் கொழுஞ்சூடு அங்கவுள் அடாஅ**
**வைகுதொழின் மடியும் மடியாவிழவின்**
**யாணர் நல்நாட்டுள்ளும் பாணர்**
**பைதல் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்**
**கோழி யோனே கோப்பெருஞ்சோழன்**
**பொத்தில் நண்பின் பொத்தியொடு கெழீஇ**
**வாயார் பெருநகை வைகலும் நமக்கே[25]**

என்ற பாடல் கோப்பெருஞ்சோழனை கோழியோன் என்றும், உழவர்க்கென வடித்தெடுக்கப்பட்ட கள்ளினை ஆமையின் இறைச்சியோடு உண்டு அதனுடன் நில்லாமல் புது வருவாய் நீங்காததுமான புகழையுடைய சோழ நாட்டில், பொத்தியாருடன் கூடி மகிழ்ந்த கோப்பெருஞ்சோழனின் உறையூர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

குமரி, ஆற்றிற்கும், இமயமலைக்கும் இடைப்பட்ட சோழநாட்டில், உயர்ந்த மாளிகைகள் நிறைந்த ஊராக உறையூர் விளங்கியது என்பதை,

**குமரிஅம் பெருந்துறை அயிரை மாந்தி**
**வடமலைப் பெயர்குவை ஆயின் இடையது**
**சோழன் நன் னாட்டுப் படினே கோழி[26]**

என்ற பாடல் வழி அறியலாம்.

பாணனை ஆற்றப்படுத்தும் வகையில் புறநதனூற்றின் மற்றொருபாடல்,

**நெடுநகர் வனப்பின் படுமுழா ஓர்க்கும்**
**உறந்தை யோனே குருசில**
**பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே[27]**

உறையூரில் உள்ள தலைவனிடம் சென்றால் எண்ணிப் பார்க்க முடியாதபடி பரிசில்கள் தருவான் என ஆற்றப்படுத்துகிறது.

உறையூர் நல்ல விளைப்பொருட்கள் நிறைந்து செல்வச் செழிப்புடன் விளங்கியதையும் உறந்தைக்குக் கிழக்கே பிடவூர் என்றும் ஊர் உள்ளதையும்,

**புலாக் களம் செய்தகலாஅத் தானையன்**
**பிறங்குநிலை மாடத்து உறந்தை யோனே[28]**
**சிறுகன் யானைப் பெயலருள் தித்தன்**
**செல்லா நல்லிசை உறந்தைக் குணாது**
**நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர்[29]**

என்ற புறநானூற்றுப் பாடல்கள் விளக்கியுள்ளன. உறையூர் விளைப்பொருட்கள் விளைந்து சிறப்புற்றுத் திகழ்ந்தது,.

பரிபாடல் திரட்டில்,

**பூவினுள் பிறந்தோன் நாவினுள் பிறந்த**
**நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப**
**ஏம இன்துயில் எழுதல் அல்லதை**
**வாழிய வஞ்சியும் கோழியும் போலக்**
**கோழியின் எழாது, எம் பேரூர் துயிலே[30]**

என்று பரிபாடலில், உறையூர் கோழி என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது.

சிறுபாணாற்றுப்படையில்,

நாடா நல் இசை, நல்தேர்ச் செம்பியன்
ஓடாப் பூட்கை உறந்தையும் வறிதே[31] என்று

சிறுபாணாற்றுப்படையாலும்,

பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி[32]

என்று பட்டினப்பாலையிலும் உறையூர் குறிப்பிடப்பட்டுள்ளது.

**மன்னர்கள்**

உறையூரில் கரிகாற்சோழன், கோப்பெருஞ்சோழன், நலங்கிள்ளி, கிள்ளிவளவன் வெளியன் தித்தன் போன்ற மன்னர்கள் ஆட்சிப் புரிந்தனர். வெளியன் தித்தன் உறையூரைக் கைப்பற்றி அரண்களை அமைத்து வலுவுள்ளதாக மாற்றினான்.

புலவர்கள்

முத்துவீரியம் இலக்கணநுலாசிரியர் உபாத்தியார் உறையூரைச் சேர்ந்தவரே ஆவார் சங்க இலக்கிய நூல்களை இயற்றியவர்களுள்,

1. இளம்பொன் வாணிகனார் (புறம் – 264)
2. ஏணிச்சேரி முடமோசியார் (புறம் – 13, 127, 135, 241, 374, 375)
3. கதுவாய்ச் சாத்தனார் (நற்றிணை – 310)
4. சல்லியங்குமரனார் (குறுந் – 309)
5. சிறுகந்தனார் (குறுந் – 257)
6. பல்காயனார் (குறுந் – 374)
7. மருத்துவன் தாமோதரனார் (புறம். 60, 170, 321 அகம். 133, 257)
8. முதுகண்ணன் சாத்தனார் (புறம் 27, 30, 325, குறுந். 133)
9. முதுகூத்தனார் (அகம் 137, 329, புறம் 331)
10. முது கொற்றனார் (குறுந். 221, 390)

போன்ற புலவர்களும் உறையூரைச் சார்ந்தவர்கள்.

உறையூர் நியமம்

சான்றோர்களால் நியமிக்கப்பட்ட தெய்வ நீராடுதுறைகள் "நியமம்" எனப்பட்டது. இத்தகைய நியமங்கள் சோழநாட்டில் பல இருந்தன. உறையூரின் வடக்கு எல்லையாக ஓடிய காவிரியின் தென்கரையில் உறையூரின் படப்பைப் பகுதியில் இருந்த தெய்வ வழிபாட்டுக்குரிய பகுதியே "குற்றம் நீங்கிய நியமம்" என அழைக்கப்பட்டது

உறையூரின் அழிவு

பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்த மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழநாட்டை அடிமைப்படுத்தப் படையெடுத்தான். வெற்றி பெற்ற நிலையில் உறந்தையை தீக்கிரையாக்கினான். முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் உறையூரையும் தஞ்சையையும் தீக்கிரையாக்கியதைத் திருக்கோயிலூர்க் கல்வெட்டுக் கூறுகின்றது. உறந்தை தீக்கிரையாக்கப்பட்டு நீர் நிலைகளும் மாடமாளிகைகளும், மாமதிலும், தரைமட்டமாக்கியதை சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்திப் பகுதியில் கூறப்பட்டுள்ளது. பாண்டியநாட்டின் மீது படையெடுத்த அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவனான மாலிக்கபூர் உறையூரையும் அழித்தான். இவ்வாறு பகைவர்களால் அவ்வப்போது உறந்தை அழிக்கப்பட்டது. காவிரியின் வெள்ளப் பெருக்கினால் அல்லூரும் உறையூரும் அழிந்ததை உறையூரில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுச் செய்திகள் குறிப்பிட்டுள்ளன.

உறையூர் இன்றைய நிலை:

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டநிலையில் வரலாற்று சிறப்புமிக்கதாகத் திகழ்ந்த உறையூர் இன்று பழைய சிறப்பினை இழந்து நிற்கிறது. முன்பு உறையூரைச் சுட்டியே சிராப்பள்ளிக்குன்றினை அறிய முடிந்தது. இன்று சிராப்பள்ளி நகரைச் சுட்டியே உறையூரைத் தேடியறிய முடிகின்றது. இன்றைய உறையூரில் நாச்சியார் கோயில், பஞ்சவர்ணசாமி வெக்காளியம்மன் கோயில் ஆகியவை உள்ளன. உறையூரில் கோயில் கொண்ட இலக்குமி உறையூர்வல்லி என்றழைக்கப்பட்டாள். உறையூர்க் கோட்டை, அரண்மனை ஆகியவற்றின் சிதைவுகள் இன்றும் காணப்படுகின்றன.

உறையூரில் சாயத்தைப் பிரித்தெடுக்கும் தொட்டி இருந்ததாக அகழாய்வுச் செய்திகள் குறிப்பிடுவதிலிருந்து நெசவுத் தொழிலில் உறையூர் சிறந்த விளங்கியமையை அறியலாம். இன்றைக்கும் உறையூர் கைத்தறி சேலைகளுக்குச் சிறந்த இடமாகத் திகழ்கின்றது.

பாண்டியநாட்டு அகப்பட்டணம்: மதுரை

உலக அறநூலாகிய தெய்வத் திருக்குறளை உவந்தளித்த நகரம் மதுரை. நெற்றிக் கண்களைத் திறப்பினும் குற்றம் குற்றமே" என்று வீறுகொண்டு பேசிய நக்கீரர் வாழ்ந்த நகரம். கோவலனைக் கொன்ற பழிதீரத் தன் உயிரையே கொடுத்து, வளைந்த கோலைச் செங்கோலாக்கிய பாண்டிய நெடுஞ்செழியன் அரசோச்சிய நகரம். நாவுக்கரசர் நம்பெருமானை நாவாரப் புகழ்ந்த நகரம். மணிவாசகனாரின் மாணடிபட்ட நகரம். சுருக்கமாகக் காண்பின் தமிழரின் பெருமையைத் தமிழ்ச் சங்க வாயிலாகத் தரணிக்கு உணர்த்திய சிறப்பு இம்மாநகர் மதுரைக்கே உண்டு. இரண்டாயிரம் ஆண்டுக் காலத்திற்கும் மேலாக இடைவெளி இல்லாத தொன்மையைக் கொண்டது மதுரை மாநகர்.

பண்டைத் தமிழகத்தில் புகழுடன் திகழ்ந்த தலைநகர்கள் மூன்று. அவை மதுரை, உறையூர், வஞ்சி என்பதை மாட மதுரையும் பீடாா் உறந்தையும் கலிகெழு வஞ்சியும் என்று சிலப்பதிகாரம் குறிப்பிட்டுள்ளது. அம்மூன்று தலைநகரங்களுக்குள் சேரரின் தலைநகராகிய வஞ்சி சிறப்பின்றிப் போயிற்று. சோழரின் தலைநகராகிய உறையூரோ நலிந்து சிற்றூராகக் காணப்படுகிறது. பாண்டியரின தலைநகராகத் திகழ்ந்த மதுரையே இன்றும் பொலிவுடன் விளங்கியது என்பது மறுத்தற்கியலாததாகும். பதினெட்டு நூற்றாண்டு காலத்திற்கும் மேலாக ஒரு நாட்டின் தலைநகரமாக விளங்கிய பெருமை இந்தியாவில் மதுரை நகருக்கும் மட்டுமே உண்டு.

"திராவிட நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கும் மேலாக உறைவிடமாகத் திகழ்வது மதுரை. புத்தரை நினைவில்

கொள்ளும்போது பாட்னா நினைவிற்கு வருவது போன்று, திருவள்ளுவரை நினைக்கும் போது மதுரை மனக் கண்முன் காட்சியளிக்கும், என்பர் மேனாட்டின.[33]

தமிழ் நாகரிகத்திற்கும் தமிழுக்கும் உறைவிடமாகத் திகழும் மதுரை மாநகர் தென்னிந்தியாவின் ஏதென்சு என்று சிறப்பிக்கப்படுகிறது.

மதுரையின் சிறப்பை மதுரைத் தென்றல் பலரும் அறியச் செய்கிறது. பொதிய மலையில் பிறந்து இத்தென்றலானது பாண்டியனின் தலைநகரமான மதுரை நகர்க்கண் வளர்ந்து கல்வியறிவாளர் நாவின்கண் பொருந்துகின்றது எனச் சிலம்பும் சிறப்பிக்கின்றது.

பெயர்க்காரணம்

மதுரை, நான்மாடக்கூடல், கடம்பவனம், ஆலவாய், கூடல், சிவராஜதானி போன்ற பெயர்களால் மதுரை மாநகர் சிறப்பிக்கப்பட்டது.

கூடல்

சங்க இலக்கியங்களில் கூடல், என்ற பெயரே பல இடங்களில் காணப்படுகிறது். சங்கத் தமிழர்கள் கூடி இருந்து தமிழாராய்ந்தமை காரணமாகக் கூடல் எனப்பட்டது.

நான்மாடக் கூடல்

மாடங்களுடன் கூடியது என்ற பொருளில் நான்கு எனும் அடைமொழியுடன் நான்மாடக்கூடலாயிற்று என்பர். இதனைத் திருவாலவாய், திருநள்ளாறு, திருமடங்கல், திருநடுவூர் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார்.

ஆலவாய்

கோயில்கள் இந்நகரில் மிகுந்திருந்தமையால் ஆலவாய் என்றும் பெயர் பெற்றது.

கடம்பவனம்:

கடம்ப மரங்கள் மிகுதியாக இருந்தமையால் கடம்பவனம் எனும் பெயரையும் இந்நகர் பெற்றது.

மதுரை

மருதை என்ற சொல்வழக்கே மதுரை எனப்பட்டது. மருதநில வனப்பம் பெற்றிருந்தமையாலும், மருத மரங்கள் நிரம்பியிருந்தாலும் மருதை எனப்பட்டது. இன்றைய நிலையிலும் நாட்டுப்புற மக்களிடையே மருதை என்னும் சொல் வழக்கில் உள்ளது.

**"பாண்டிய நாட்டின் தலைநகரமாகிய மதுரைக்கு உள்ள இடைவெளியில்லாத பெருமை மிக்க வரலாறு சேர, சோழ, பல்லவப் பேரரசுகளின் தலைநகரங்களுக்குக் கிடையாது"**[34]

மதுரை நகரமைப்பு

பாண்டி நாட்டின் நடுவில் மதுரை சிறப்புற்றிருந்த செய்தியைப் பரிபாடல் திரட்டு விளக்குகின்றது.

இதனை,

**மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**
**பூவொடு புரையும் சீரூர்; பூவின்**
**இதழகத் தனைய தெருவம்; இதழகத்து**
**அரும் பொகுட்டனைத்தே அண்ணல் கோயில்**
**தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்**
**தாதுண் பறவை அனையர் பரிசில் வாழ்நர்**[35]

என்றபாடல் மதுரைநகரின் அமைப்பையும் சிறப்பையும் விளக்குகின்றது.

மதுரைக்காஞ்சி மதுரை நகரின் அமைப்பினை,

**கங்கையம் பேரியாறு கடற்படர்ந் தாஅங்கு**
**அளந்து கடை யறியா வளங்கெழு தாரமொடு**
**புத்தே ளுலகங் கவினிக் காண்வர**
**மிக்குப் புக ழெய்திய பெரும்பெயர் மதுரை[36]**

மதுரை மாநகரம் அத்தலைநகரத்திற்குரிய தன்மைகள் அனைத்தையும் ஒருங்கே பெற்றிருந்தது. கோட்டை மதில்கள் நகருக்கு வெளியே நாற்புறமும் அரண் செய்தன. மதில்களைச் சூழ்ந்து அகழிகள் இருந்தன கோட்டை மதில்களில் பலவகைப்பட்ட பொறிகள் அமைக்கப்படடிருந்தன என்று விளக்கியுள்ளது.

மதுரையின் சிறப்பினை,

**மிலையுங் கிடங்கும் வளைவிற் பொறியும்**
**கருவிர லூகமும் கல்லுமிழ் கவணும்**
**பரிவுறு வெள்ளெயும் பாகடு குழிசியும்**
**காய்பொன் உலையும் கல்லிடு கூடையும்**
**தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை அடுப்பும்**
**கவையும் கழவும் புதையும் புழையும்**
**ஐயவித் துலாமும் கைபெயர் ஊசியும்**
**சென்றெறி சிறலும் பன்றியும் பணையும்**
**எழுவுஞ் சீப்பும் முழுவிற்ற கணையமும்**
**கோலுங் குந்தமும் வேலும் பிறவும்**
**ஞாயிலும் சிறந்த[37]**

என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.

வியக்கத்தக்க வேலைப்பாடுகள் அமைந்த பொறிகள் அமைக்கப்பட்ட வாயில்கள் மதிலின்கண் அமைக்கப்பட்டிருந்தன. மதில் வாயில்களில் பாண்டியர்க்குரிய மீன்கொடிகள் பறந்து கொண்டிருக்கும்.

இதனை,

**மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்**
**விண்ணுற வோங்கிய பல்புடைப் புரிசைத்**
**தொல்வலி நிலைஇய வணங்குடை நெடுநிலை**
**நெய்படக்கரிந்த திண்போர்க் கதவின்**[38]

என்று மதுரைக்காஞ்சியில் கோட்டைமதில்களின் வாயில்கள் சிறப்பிக்கப்பட்டுள்ளன.

**கடிமதில் வாயில் காவலிற் சிறந்த**
**அடல்வாள் யவனர்**[39]

என்று சிலப்பதிகாரம் கோட்டை மதில் வாயில்களை யவனர்கள் காவல் புரிந்ததைக் குறிப்பிடுகிறது.

மதுரை நகரின் உள்ளே பரந்துபட்ட தெருக்கள் இருக்கும். அங்காடி வீதி, இரத்தினக்கடை, பொற்கடைவீதி, அறுவைவீதி, கூலக்கடைவீதி, அறவோர்வீதி, அரசர்வீதி, வணிகர்வீதி, வேளாளர்வீதி, போன்ற வீதிகள் அமைந்திருந்த நகர் மதுரையாகும்.

நாளங்காடி, அல்லங்காடி

பகற்பொழுதில் மட்டும் வாணிகம் செய்யும் கடைகள் 'நாளங்காடி' என்றும், இரவுப் பொழுதில் மட்டும் வாணிகம் நடைபெறும் கடைகள் 'அல்லங்காடி' என்றும் அழைக்கப்பட்டன.

நாளங்காடியில் பலதரப்பட்ட மக்கள் வந்து போவார்கள் அவர்கள் பல்வேறு மொழிகளைப் பேசுபவர்களாகவும் இருப்பார்கள். பூவினர், கோதையர், சுண்ணத்தர், இலையினர், நூற்றினர், ஆகியோர் நாளங்காடியில் வாணிகம் செய்யக் கூடியிருப்பர்.

அல்லங்காடியில் மணிகள், முத்துக்கள், பல்வகை உணவு வகைகள், பண்டங்கள் முதலியவற்றை விற்கும் வாணிகர்கள் நிறைந்திருப்பர். கடைத் தெருக்களில் சோறிடுஞ் சாலைகள் இருக்கும். மரக்கறி உணவுச்சாலைகள்

இறைச்சி உணவுச்சாலைகள், என்னும் இருபிரிவுகளும் உண்டு நாளங்காடி அல்லங்காடியில் எழும் ஓசையானது மதுரை நகரத்தில் இடைவிடாமல் ஒலித்துக் கெண்டே இருக்கும்.

சங்கஇலக்கியங்களில் மதுரை

மதுரையை நிலைக்களனாகக் கொண்டு தமிழ் வளர்ந்தது என்பதை சங்க இலக்கியங்களும் பின்னர்த் தோன்றிய இலக்கியங்களும் தெரிவிக்கின்றன. சங்க இலக்கியங்களில் கூடல் என்னும் சொல்லாட்சி கூடுதலாகவும் மதுரை என்ற சொல்லாட்சி குறைவாகவும் காணப்படுகிறது.

அகநானூற்றில்,

**வாடா வேம்பின் வழுதி கூடல்**
**நாள் அங்காடி நாறும் நறு நுதல்[40] எனவும்**

**பொய்யா விழவின் கூடற் பறந்தலை[41] எனவும்**

**கொடிநுடங்கு மறுகிற் கூடற்குடா அது[42] எனவும்**

**பொன் மலநெடு நகர் கூடல்"[43] என்றும்**

**கூடல் அன்ன அருங்கடி வியன் நகர்[44] என்றும்**

**மாடமலி மறுகில் கூடல் ஆங்கண்[45]**

என்றும் மதுரை, கூடல் என்ற பெயர்ரில் அகநானூற்றில் இடம்பெற்றுள்ளது.

புறநானூற்றில்,

**தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே[46] என்றும்**
**ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென**
**மாட மதுரையும் தருகுவேன்[47] என்றும்**

மதுரை புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது.

நற்றிணையில்,

ஓம்பு அரண் கடந்த அடு போர்ச் செழியன்
பெயரும் பெயர்க் கூடல் அன்னநின்
கரும்புடைத் தோளும் உடையவால் அணங்கே.[48]

என்று நற்றிணையில் கூடல் இடம்பெற்றுள்ளது.

பரிபாடலில்

குன்றம் உடைத்த ஒளிக வேலோய்! கூடல்
மன்றம் கலந்த மணி முரசின் ஆர்ப்பு எழ[49]

என்றும் கூடல் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

கலித்தொகையில்,

கலித்தொகையில், 'கலிகெழு கூடல்', 'தென்னவர் உயர்கூடல்', என்று மதுரைச் சிறப்பிக்கப்படுகிறது.

சிறுபாணாற்றுப்படையில்,

தமிழ்நிலை பெற்ற தாங்கரும் மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே[50] என்றும்

திருமுருகாற்றுப்படையில்,

திரு வீற்றிருந்த தீதுதீர் நியமத்து
மாடம் மலி மறுகிற் கூடல் குடவயின்[51] என்றும்

மதுரைக்காஞ்சியில்,

தமிழ் நிலைபெற்ற தாங்கரு
மரபின் மதுரை[52]

என்று மதுரைக் காஞ்சி, மதுரை மாநகர் பல்வேறு சிறப்புகளுடன் தமிழன்னையின் அரசுக் கட்டிலாகத் திகழ்ந்த சிறப்பினையும் பெரும்பெயர்மதுரை என்றும் மலிபுகழ்க் கூடல் என்றும் சிறப்பிக்கின்றது.

நெடுநல்வாடையில்,

நெடுநல்வாடையும் மூதூர், நகர் என்னும் பெயர்களால் மதுரையைக் குறிப்பிடுகின்றது.

மாடம் ஓங்கிய மல்லல் மூதூர்[53]

ஆறு கிடந்தன்ன அகல் நெடுந்[54]

மதுரைக்கலம்பகத்தில்,

விண்மீன்களை அள்ளிக் கொள்வதுபோல உயர்ந்து விளங்கும் கொடிகட்டிய மதில்களும், தேவர்களும் அண்ணாந்து நோக்கி வருந்தத்தக்க வகையில் தோரணங்களமைந்த மாளிகைகளும் பெருமை பொருந்திய வீடுகளும் உடையது மதுரை. 'பீடார் கூடல்', 'நான்மாடக் கூடல்' 'கூடலம்பதி' என்றும் மதுரைக் கலம்பகம் மதுரையைச் சிறப்பிக்கின்றது.

தமிழ்ச்சங்கம்

சேரர்க்கும், சோழர்க்கும் இல்லா தனிச்சிறப்பு பாண்டியர்க்கு உண்டு என்பது தமிழ்ச் சங்கத்தினாலேயே எனலாம். சேரரும் சோழரும் தமிழினிடத்துத் தனிவிரும்பம் கொண்டநிலையிலும் தமிழ்ச்சங்கம் அமைத்திடவில்லை. தமிழுக்குச் சங்கம் அமைத்து தமிழை வளர்த்த பெருமை பாண்டியர்க்கே உரியதாகும்.

பாண்டியரின் தலைநகரமான மதுரையில் தலைச்சங்கம் தகவுடன் அமைக்கப்பட்டது. இச்சங்கத்தே அகத்தியர், இறையனார், குமரவேள், முரஞ்சியூர் முடிநாகரனார், உள்ளிட்ட நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் இருந்தனர். பரிபாடல், முதுகுருகு, முதுநாரை போன்றவற்றைப் புனைந்தனர். காய்சினவழுதி

முதல் கடுங்கோள் ஈறாக எண்பத்தொன்பதின்மர் இச்சங்கத்தைக் காத்தனர் என்றும் அறிஞர்கள் குறிப்பிடுவர்.

கடல்கோளினால் தலைச்சங்கம் அழிந்து போயினும் பாண்டியர்கள் மீண்டும் சங்கம் அமைத்துத் தமிழாராய விரும்பினர். பொருநை ஆற்றங்கரையில் அமைந்த கபாடபுத்தில் இடைச்சங்கத்தை அமைத்தனர். இச்சங்கத்தில் தொல்காப்பியனார், இருந்தையூர் கருங்கோழியார், மோசிகீரானார், போன்றோரால் பலநூல்கள் இயற்றப்பட்டன. வெண்தேர்ச்செழியன் முதல்முடத் திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் இச்சங்கத்தைக் காத்தனர்.[55]

இரண்டாம் சங்கத்தினையும் கடல்கொண்டுவிட பாண்டியர்கள் கடைச்சங்கத்தினை மதுரையில் நிறுவினர். இச்சங்கத்தில் நக்கீரனார், சிறுமேதாவியார், சேந்தம்பூதனார், பெருங்குன்றூர்க் கிழார், நல்லந்துவனார், மருதனிளநாகனார் உள்ளிட்ட நானூற்று நாற்பத்தொன்பதின்மர் இருந்தனர். நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு, போன்ற பல நூல்கள் இயற்றப்பட்டன. மூன்றாம்முடத்திருமாறன் முதலாக இரண்டாம் உக்கிரப்பெருவழுதி ஈறாக நாற்பத்தொன்பதின்மர் இச்சங்கத்தினைக் காத்தனர்.[56]

“முதல் கடல்கோளால் பஃறுளியாறும், குமரிக்கோடும் கடலால் கொள்ளப்பட்டன. பஃறுளியாற்றின் கரையிலிருந்த தென்மதுரையே பாண்டியரின் தலைநகரும் தலைச்சங்கமிருந்த இடமும் ஆகும். அதன் பின் நிலந்தருதிருவின் பாண்டியன் வடக்கேப்போய், கபாடபுரத்தைத் தலைநகராக்கிக் கொண்டான். இரண்டாவது கடற்கோளால் கபாடபுரம் கடற் கொள்ளப்பட்டது. அதன்பின் மணவூர், பாண்டியனின் தலைநகராக இருந்தது. பின் மூன்றாம் முறைக் கடல்கோளால் மணவூரும், குமரியாறும் அழியவே பாண்டியன் மதுரை வந்து அங்கே கடைச்சங்கத்தை நிறுவினான்”.[57] என்பர்

முச்சங்கங்கள் நிறுவி, தமிழைக் காத்து வளர்த்த பெருமை பாண்டியர்க்கே உரியது. மதுரையின் சிறப்பிற்கு முக்கிய நிலைக்களமாகத் திகழ்ந்த தமிழ்ச்சங்கம் மேலும் பல நூல்களை இயற்றி போற்றியது.

## மதுரைத் தமிழ்ச் சங்கம்

முதல் இரண்டு சங்கம் கடல் கோளாலும், மூன்றாம் சங்கம் காலத்தாலும் கொள்ளப்பட்ட நிலையில் மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கம் 1901–இல் தோன்றியது. இங்கு, பழைய ஓலைச் சுவடிகள் தொகுக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டன. பல சுவடிகள் நூல்வடிவில் வெளிவந்தன. தனித்தமிழில் புலமை பெறும் வகையில் வகுப்புகள் நடத்தப்பட்டன. ஆண்டுதோறும் தமிழ்ப் புலவர்கள் வரவழைக்கப்பட்டு விரிவுரைகள் நிகழ்த்தப்பட்டன.

## மதுரைப்புலவர்கள்

புலவர்கள் பலரால் போற்றப்பட்ட நகரம் மதுரை. புலவர்கள் தம் பெயர்க்கு முன்பு மதுரையை விருப்பமுடன் சேர்த்துக் கொண்டனர். மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார், மதுரை எழுத்தாளன் சேந்தம் பூந்தனார், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், மதுரை மருதங்கிழார் மகன் இளம்போதனார், மதுரை நலவெள்ளியார், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனர், மதுரை ஆசிரியர் கோடங்கொற்றனார் போன்ற எண்ணற்ற புலவர்கள் மதுரையில் வாழ்ந்தனர்.

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற தமிழ்க் கவிஞராக விளங்கிய சுப்ரமணிய பாரதியார், தமிழ் நாடகக் கலைக்கு புத்துயிர் கொடுத்த சங்கரதாஸ் சுவாமிகள் போன்றோர் மதுரையில் இருந்து தமிழை வளர்த்த பெருமக்களாவார்கள்.

## வையை ஆற்றின் இன்றையநிலை

வற்றாது வளம் கொழித்த வையையில் இன்று நீரின்றிக் காணப்படுகிறது. வையை ஆற்றுடன் கலக்கும் முல்லையாறு, சுருளியாறு முதலியவற்றின் நீரைப் பயன்படுத்த கருதி சிற்றணை, பேரணைகள் கட்டப்பட்டு மதுரை மாவட்டத்தில் பல இடங்களுக்குத் தண்ணீர் வழங்கப்படுவதும், வையை அணைக்கட்டில் தண்ணீர் தேக்கப்படுவதும், வையையாறு மதுரைக்கு வருங்கால் நீரின்றி வருவதற்குக் காரணங்களாகின்றன. வையை ஆற்றில் நீராட விரும்புபவர்கள் ஊற்றுகளைத் தோண்டியே நீராடுகின்றனர்.

## இன்றையமதுரை

தமிழகத்தின் இரண்டாவது பெரிய நகரமாக இன்று மதுரை திகழ்கின்றது. மதுரை நகரத்தைக் கோயில் நகரம் என்றும் திருவிழா நகரம் என்றும் குறிப்பிடுதல் பொருத்தமுடையதாகும். நகரின் மையப்பகுதியில் கோயில்கள் அமைந்துள்ளன. விழாக்கள் நடைபெறும் மாதங்களை ஒட்டித் தெருக்களின் பெயர்கள், சித்திரைவீதி, ஆடிவீதி, ஆவணி மூல வீதி, மாசி வீதி என்றும் அமைத்துள்ளனர்.

மதுரை என்றவுடன் அனைவருக்கும் நினைவில் வருவது மீனாட்சியம்மன் கோவில் ஆகும். இக்கோயில், நகரின் நடுவில் தாமரை மலரின் மொட்டு போன்று காட்சியளிப்பதாகப் பரிபாடல் சிறப்பிக்கின்றது. இக்கோயில் பதினைந்து ஏக்கர் பரப்பளவு உடையது.

கோயிலின் கட்டட அமைப்பு முழுவதும் திராவிடப் பாணியில் அமைந்துள்ளது. கோயிலில் ஒன்பது கோபுரங்கள் உள்ளன. இவற்றில் நான்கு கோபுரங்கள் மிகவும் உயரமாக உள்ளன. இக்கோபுரங்களில் புராணக்கதைகள் கூறும் உருவங்கள் காட்சியளிக்கின்றன. இக்கோபுரங்களுக்கு உள்ளே அமைந்துள்ள படிக்கட்டுகளின் வழியாக மேலேறிச் சென்று பார்த்தால், மதுரையின் அமைப்பும் கோயிலின் சிறப்பும் கவினுறக் காட்சியளிக்கும். மீனாட்சியம்மன் கோவிலினுள்ளும் சொக்கநாதர் கோவிலினுள்ளும் பலமண்டபங்கள் உள்ளன.

### எண்சக்தி மண்டபம்

இம்மண்டபத்தின் முகப்பில், மீனாட்சி சுந்தரர் திருமணக்கோலமும், மண்டபத்தின் இருபுறமும் மீனாட்சி பிறப்பு, குழந்தைப்பருவம், ஆட்சிச்சிறப்பு, சுந்தரர் மீனாட்சி திருமணம் ஆகிய காட்சிகளும் வடிக்கப்பட்டுள்ளன. இங்குள்ள தூண்களில் எண்சக்தி உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. மீனாட்சியம்மன் கோயிலைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குரிய முகவுரையாக இம்மண்டபம் அமைக்கப்பட்டுள்ளன.

மீனாட்சி நாயக்கர் மண்டபம்

திருமலை நாயக்கரின் அமைச்சருள் ஒருவரான மீனாட்சி நாயக்கர் பெயரால் இம்மண்டபம் அமைந்துள்ளது. கோவிலில் உள்ள மண்டபங்களில் மிகவும் பெரியது இம்மண்டபம்.

பொற்றாமரைக்குளம்

முதலி மண்டபத்திற்கு அடுத்ததாகப் பொற்றாமரைக்குளம் உள்ளது. இக்குளத்தின் நடுவே பெரியதூண் ஒன்று உண்டு. திருவள்ளுவரின் சங்கப் பலகை மிதந்த இடம் இது என்பர். குளத்தைச் சுற்றியுள்ள வடப்புறச் சுவர்களில் இறைவனின் திருவிளையாடல்களைச் சித்தரிக்கும் அழகிய ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. தென்புறச் சுவரில் 1330 குறட்பாக்கள் பதிக்கப்பட்ட பளிங்குக் கற்கள் உள்ளன.

முகமண்டபம்

பொற்றாமரைக் குளத்தின் மேற்குப் பக்கத்தில், கருங்கற்களாலான முகமண்டபம் ஒன்று உள்ளது. இது அரசி மங்கம்மாவால் கட்டப்பட்டது என்பர். மங்கம்மாளின் உருவமும் இராமையரின் உருவமும் இம்மண்டபத்தில் உள்ளன.

ஊஞ்சல் மண்டபம்

முகமண்டபத்திற்கு எதிரில் ஊஞ்சல் மண்டபம் உள்ளது. கருங்கல் தூண்களைக் கொண்டது இம்மண்டபம்.

கிளிகட்டு மண்டபம்

அங்கயற்கண்ணிக்குரிய கிளிகள் பெரிய கூண்டில் அடைக்கப்பட்டு வளர்க்கப்பட்டதால் இப்பெயரைப் பெற்றது. இம்மண்டபத்தில் உள்ள தூண்கள் ஒவ்வொன்றும் தனிக் கருங்கல்லால் செதுக்கப்பட்டதாகும். இம்மண்டபத்தின் மேல்முகட்டில் இறைவனின் பலதரப்பட்ட திருவுருவ ஓவியங்கள் காட்சியளிக்கின்றன.

மகாமண்டபம்

கிளிக்கட்டு மண்டபத்தினைக் கடந்து சென்றால் மகாமண்டபம் உள்ளது. இதில் திருமலை நாயக்கரின் திருவுருவச்சிலை உள்ளது.

அர்த்த மண்டபம்

மகா மண்டபத்தைக் கடந்து உள்ளே சென்றால் அர்த்த மண்டபம் இருக்கிறது. இங்கு அங்கயற்கண்ணியம்மையின் நின்ற திருக்கோலக் காட்சி வடிக்கப்பட்டுள்ளது.

சொக்கர் கோயில்

மீனாட்சியம்மன் கோயிலின் வடபுறம் சொக்கர் கோயில் உள்ளது. மீனாட்சி கோயிலைவிடச் சொக்கர் கோயில் இருமடங்கு பெரியதாகும். சிற்பக்கலை நுணுக்கங்களும் சொக்கர் கோயிலில் தான் மிகுதியாகக் காணப்படுகின்றன.

கம்பத்தடி மண்டபம்

சொக்கர் சந்நிதியில் கம்பத்தடி மண்டபம் இருக்கிறது. சிவபெருமான் திரிபுரம் எரித்ததும், பார்வதியை மணந்து கொண்டதும் கைலாயமலையில் வீற்றிருப்பதும் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. மண்டபத்தின் நடுவில் கம்பம் ஒன்று உள்ளது. திருவிழாக்காலங்களில் அதில் கொடியேற்றப்படும். கம்பத்தினருகே, நந்தியைத் தாங்கிக் கொண்டு இருக்கும் அழகிய வேலைப்பாடுகள் அமைந்த ஒரே கல்லால் ஆன சிறுமண்டபம் ஒன்று இருக்கின்றது.

திருக்கலியாண மண்டபம்

சொக்கர் கோயிலுக்கும் மீனாட்சி கோயிலுக்கும் நடுவில் அமைந்துள்ள மண்டபமே திருக்கலியாண மண்டபம் ஆகும். மீனாட்சி சொக்கர் திருமணக்காட்சி இம்மண்டபத்தில் நிகழும். இம்மண்டபம் விசயரங்கச் சொக்கநாத நாயக்கரால் கட்டப்பட்டதாகும்.

ஆயிரங்கால் மண்டபம்

சொக்கர் சந்நிதியில் வடகிழக்கு மூலையில், தென்திசையைப் பார்த்தவாறு இம்மண்டபம் அமைந்துள்ளது. இம்மண்டபத்தினை கி.பி. 1560 இல் நோன்றல் அரியநாதர் கட்டி முடித்தார் என்பர். 250 அடி நீளமும் 240 அடி அகலமும் உடையது இம்மண்டபம்.

வீரவசந்தராய மண்டபம்

ஆயிரங்கால் மண்டபத்தைக் கடந்து வரும் வழியில் வீரவசந்தராய மண்டபம் ஒன்று உள்ளது. இது கி.பி. 1609–இல் முத்துவீரப்ப நாயக்கரால் கட்டப்பட்டது.

புதுமண்டபம்

இம்மண்டபம் திருமலை நாயக்கரால் கட்டப்பெற்றது. வசந்த மண்டபம், புது மண்டபம், திருமலை நாயக்கர் சத்திரம் என்றும் இம்மண்டபம் அழைக்கப்படும். இம்மண்டபத்தினுள் 124 தூண்கள் உள்ளன.

சலவைக்கல் மண்டபம்

புதுமண்டபத்தின் மேல்புறத்தில், பன்னிரண்டு தூண்களைக் கொண்ட அழகிய சலவைக்கல் மண்டபம் ஒன்று உள்ளது. இங்கே வசந்தவிழா நடைபெறும். மண்டபத்தைச் சுற்றியுள்ள தூண்களில் இறைவனின் திருவிளையாடல்களும் மற்றும் பலவும் சிற்பங்களாகக் கண்ணைக் கவர்கின்றன.

இராய கோபுரம்

புதுமண்டபத்திற்கு எதிரில் இக்கோபுரம் உள்ளது. விசயநகரமன்னர் கிருட்டிண தேவராயரின் நினைவாகத் இக்கோபுரம் எழுப்பப்பட்டது.

### நாயக்கர் அரண்மனை

இவ்வரண்மனைக் கட்டிடத்தின் எப்பகுதியிலும் மரமே பயன்படுத்தப்படாமல் செங்கல்லும் கண்ணாம்பும் காரையும் கொண்டு கட்டப்பட்டுள்ளது. கருங்கல் தூண்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஓவிய வேலைப்பாடுகள் நிறைந்த குவிமாடங்கள் இவ்வரண்மனையில் உள்ளன. மூன்று பெரிய குவி மாடங்களைக் கொண்ட கன்னிமாடம் ஒன்று உள்ளது. குவி மாடங்களுக்குக் கீழ் சுவர்க்க விலாசம் அல்லது அத்தாணி மண்டபம் ஒன்று உள்ளது.

**“இத்திருமலைநாயக்கர் மகால் நுட்பவேலைப்பாடுடையது மட்டுமன்று, நல்ல பயனுடையதுமாகும். இந்தியாவிலேயே வேறெங்கும் காணப்பட முடியாதவாறு, மிகப் பெரியதும் நேர்த்தியானதுமான கட்டடம் இது என்று கூறுவது மிகையன்று இவ்வழகிய கட்டடத்தைக் காண்போர் அனைவருக்கும் இந்து, முகமதிய, பண்டையக் கிழக்குச் செர்மானியக் கட்டடக்கலை ஆகிய மூன்றும் பொருந்திய நிலையிலுள்ளமை தெரியவரும். இக்கட்டுத்தைப் பற்றி சொல்ல வந்த பெர்குசான் என்பவர், அதனுடைய அளவுகளை நோக்குமிடத்து, அவை பண்டைக் கிழக்கு செர்மானியக்கட்டடக் கலையின் ஒழுங்கைப் பலவழிகளிலும் பெற்றிருக்கின்றன”.**[57] என்பர்.

### தாமரை மன்றம்

தாமரை மன்றமும் திருமலை நாயக்கரால் கட்டப்பெற்றதாகும். இதன் மேல்தளமானது, கவிழ்த்து வைக்கப்பட்ட தாமரை மலரைப் போன்று இருப்பதால் தாமரை மன்றம் (Lotus Hall) என சிறப்பிக்கப்பட்டள்ளது. இம்மண்டபத்தின் மேல்கூரையானது நல்ல வேலைப்பாடுகளைக் கொண்டது.

### கோயில்

கோயில் மாநகர் என்பதற்கேற்ப மதுரையிலும், மதுரையைச் சுற்றிலும் மிகுதியான கோயில்கள் உள்ளன. வடக்குமாசி வீதியில் செல்லத்தம்மன் கோயிலும், தெற்குமாசி வீதியில் திருவாலவாய் கோயிலும் வைகையாற்றின் வடகரையில் திருவாப்புடையார் கோயிலும் உள்ளது.

மதுரை மாநகரைச் சுற்றி மேல் மாசி வீதியில் இம்மையில் நன்மை தருவார் கோயிலும், மேல்மாசி வீதியும் தெற்குமாசி வீதியும் கூடுமிடத்தில் கூடலழகர் கோயிலும், கூடலழகர் கோயிலுக்கருகில் மதனகோபால் சுவாமி திருக்கோயிலும் அமைந்துள்ளது. மேல்மாசி வீதியின் நடுவில் நக்கீரர் கோயிலும் உள்ளது.

முகமதியர்கள் மிகுதியாக வாழும் கோழிப்பாளையத்தில் உள்ள மசூதி பெரிய மசூதியாகும். மதுரைபொன்னகரத்தில் மிகப்பெரிய தேவாலயமும் உள்ளது.

இன்றைய மதுரையில் பஞ்சாலைகளும், தொழிற்சாலைகளும் பல உள்ளன. மதுரையில் பட்டு, பருத்தி தொழில்களோடு கைத்தறி சேலைகளும் தயார் செய்யப்படுகின்றன.

சேரர்களின் வஞ்சியும், சோழர்களின் உறந்தையும், பாண்டியர்களின் மதுரை நகரும் பல்வேறு பெருமைகளையும், சிறப்புகளையும் பெற்று நாட்டகப்பட்டிணங்களாகத் திகழ்ந்து பழம் பெருமைகளை விளக்கி நிற்கின்றது.

## அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம், சிறப்புப்பாயிரம்
2. புறம். பா. 17, 1–8
3. புறம். பா. 6, 1–4
4. ம. கா. 70–72
5. மேற்படி நூல், 351–355
6. பரி. திரட்டு. 8
7. மயிலை. சீனி. வேங்கடசாமி, 'சங்ககாலத் தமிழகவரலாறு', ப–95–96
8. கலைக் களஞ்சியம், தொகுதி; 9
9. சிறுபாண். 48–50
10. அகம். பா. 396, 17–19
11. மேற்படி நூல், பா. 93, 20–21
12. புறம். பா. 11, 5–7
13. ப. பத்து 9, பதிகம் 8–9
14. பரி. திரட்டு. 7, 7–11
15. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப.373
16. நற். பா. 400, 7–8
17. குறுந். பா. 6, 4–5
18. அகம். பா. 4, 14–15
19. மேற்படி நூல், பா. 6, 4–5
20. அகம். பா. 226, 14–17
21. அகம். பா. 237, 11–14
22. அகம். பா. 369, 114–15
23. அகம். பா. 385, 3–5
24. புறம். பா. 39, 8–9
25. புறம். பா. 212, 5–10
26. புறம். பா. 67, 6–8
27. புறம். பா. 68, 17–19
28. புறம். பா. 69, 9–12

29. புறம். பா. 395, 18–20

30. பரி. திரட்டு. பா. 8, 7–11

31. சிறுபாண். 82–83

32. ப. பாலை. 285

33. Madura the Temple City - *by Shemoy*

34. ப. நெடுமாறன், தமிழ்வளர்த்த மதுரை, ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு, ப. 45

35. பரி. திரட்டு. பா. 8, 1–6

36. ம. கா. 696–699

37. சிலம்பு. காதை 15, 207–217

38. ம. கா. 351–354

39. சிலம்பு. காதை 14, 66–67

40. அகம். பா. 93, 8–9

41. அகம். பா. 116, 14

42. அகம். பா. 149, 14

43. அகம். பா. 253, 6

44. அகம். பா. 315, 7–8

45. அகம். பா. 346, 7–8

46. புறம். பா. 32, 7–8

47. புறம். பா. 58, 13

48. நற். பா. 39, 9–11

49. பரி. பா. 8, 29–30

50. சிறுபாண். 66–67

51. திருஜ்ருகு. 70–71

52. ம. கா. 699

53. நெடுநல். 29

54. நெடுநல். 30

55. ச. சாம்பசிவம், 'மாநகர் மதுரை' ப. 9–10.

56. தமிழ்நாட்டு வரலாறு – தொல் பழங்காலம், ப. 120–121.

57. ச. சாம்பசிவம், 'மாநகர் மதுரை' ப. 115.

# இயல் மூன்று

## துறைமுகப்பட்டினங்கள்

1. சேரநாட்டுத் துறைமுகப்பட்டினங்கள்
   அ. முசிறி
   ஆ. மாந்தை
   இ. தொண்டி
2. சோழநாட்டுத் துறைமுகப்பட்டினம்
   காவிரிபூம்பட்டினம்
3. பாண்டிநாட்டுத் துறைமுகப்பட்டினங்கள்
   அ. கொற்கை
   ஆ. காயல்
4. சங்க கால வாணிகம்

துறைமுகப்பட்டினங்கள்

சங்க காலம் உழவும் வணிகமும் செழிப்புற்ற காலமாகும். வணிகருக்குச் சங்க காலத்தில் மிகுந்த செல்வாக்கு இருந்தது. அரசர்கள் அவர்களுக்குப் பட்டங்களும் தனி உரிமைகளும் அளித்துச் சிறப்பித்தனர். உலகத்துத் தொழில்களில் உழவு, வாணிகம் என்னும் இரண்டு தொழில்களும் சங்க காலத்தில் போற்றப்பட்டன.

**வாணிகத்தில், தரை வாணிகத்தைவிடக் கடல்வாணிகம் பெருமளவில் நடந்தது. கடல்சார் வாணிகம் சிறப்புற்றிருந்தமையால் துறைமுகம் என்னும் அமைப்பு மிகவும் இன்றியமையாத ஒன்றாக விளங்கியது. ஒவ்வொரு நாட்டிலும் துறைமுகப்பட்டினங்கள் ஏற்பட்டன. பெரும்பாலும் துறைமுகப்பட்டினங்கள் ஆறும் கடலும் சேர்கின்ற இடங்களில் இருந்தன. ஆற்று முகத்துவாரங்கள் இல்லாத துறைமுகப்பட்டினங்களும் சில இருந்தன. பெரிய துறைமுகங்களில் கலங்கரை விளக்குகள் அமைக்கப்பட்டிருந்தன. தமிழ்நாட்டு வேந்தர்கள் வலிமைமிக்க கடற்படைகளைப் பெற்று இருந்தனர் வெளிநாட்டவர், தமிழ் நாட்டிற்குப் பொன், வெள்ளி, அரிய பாண்டங்கள் கலைச்சிறப்பு மிக்கபொருட்கள், மது, விளக்குகள், போன்றவற்றைக் கொடுத்துவிட்டு, அவற்றுக்கு ஈடாக மிளகு, முத்து, மணிகள், நறுமணப்பொருட்கள், அரிசி, இஞ்சி முதலியவைகளைத் தமிழகத்தினின்றும் பெற்றுக் கொண்டு சென்றனர்.**[1] என்று வி.ஏ. ஸ்மித் குறிப்பிடுகின்றார்.

சங்கநூல்கள், அயல்நாட்டு ஆராய்ச்சியாளர்களுடைய குறிப்புகள், கல்வெட்டுகள், தொல் பொருள் சின்னங்கள் போன்றனவும் பழங்கால நாணயங்களும் சங்ககாலத் துறைமுகங்கள் பற்றியும் அங்கு நடைபெற்ற வாணிகம் பற்றியும் தெளிவாகக் குறிப்பிடுகின்றன.

மூன்று பக்கமும் கடலை எல்லையாகக் கொண்ட சங்க காலத் தமிழகத்தில் காவிரிப்பூம்பட்டினம், கொற்கை, முசிறி, தொண்டி, எயிற்பட்டினம், பந்தர் கொடுமணம் ஆகிய துறைமுகங்கள் சிறப்புற்று விளங்கின.

**“மத்திய கிழக்கு நாடுகளுடன் கிறித்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னரே (கி.மு. 1000 ஆண்டளவில்) தமிழகத் துறைமுகங்கள் வாணிக**

நடவடிக்கையில் இணைந்திருந்தன. மத்தியப்பிரதேசம், ஆப்பிரிக்கா, தென்கிழக்கு ஆசிய நாடுகள், ஆகியவற்றிற்கு இடையே நடைபெற்ற வர்த்தகத்தின் மையப்பிரதேசமாக இவை விளங்கின. இங்கே கிடைத்த மூலப்பொருட்களும் தமிழகத்தை முன்னிலைக்கு இட்டுச் சென்றன. வாணிக நடவடிக்கைகளைத் தொடர்ந்து கலாச்சாரப்பரிமாறல்களுக்கு வழி பிறந்தது. இதனால் விவசாய சமூகமாக இருந்த தமிழகச் சமூகம், வாணிகச் சிறப்பால் புற நாகரிகங்களின் கலாச்சாரப் பரிமாற்றங்களுக்கு உள்ளாகும் வாய்ப்பைப் பெற்றது."[2]

சங்க இலக்கியங்களான பட்டினப்பாலை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து முதலிய நூல்களும் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களும், தாலமியின் நிலவியல் கையேடு (GEOGRAPHY OF PTOLEMY), பிளினியின் இயற்கை வரலாறு (Natural History). முதலிய கடற்பயணக் குறிப்புகளும் தமிழகத்தின் துறைமுகங்கள் பற்றியும், வாணிகம் பற்றியும் குறிப்புகள் தந்துள்ளன.

பண்டைத் தமிழகத்தை ஆட்சிபுரிந்த சேர, சோழ, பாண்டியரிடம் பல்வேறு வகையான கலங்கள் இருந்தன. துறைமுகங்களில் பிறநாட்டுக் கப்பல்களும் ஏற்றுமதி, இறக்குமதி செய்து வந்தன. துறைமுகங்களின் அருகில் கலங்கரை விளக்குகளும் சுங்கச் சாவடிகளும், பண்டகச் சாலைகளும் பிறவும் இருந்தன.

'திராவிட இந்தியா' என்னும் நூலாசிரியர், இன்று வழக்கிலுள்ள சில அரிய தமிழ்ச் சொற்களைக் கொண்டே தமிழர்கள் கடலொடு நெடுங்காலமாக நெருங்கிய தொடர்பு பெற்றவர்கள் என்பதை அறிந்து கொள்ளலாம் எனக் குறிப்பிடுகிறார்.[3]

பண்டைத் தமிழகத்தில் கடல் வாணிகம் சிறப்புற்று விளங்கியதற்கு கப்பலோட்டும் மாலுமிகள் பங்கு இன்றியமையாததாகும். கப்பலோட்டும் மாலுமிகள் ஆழ்கடலிலும் அச்சமின்றிச் சென்றனர். கப்பலை, வங்கம், கலம், நாவாய் போன்ற பெயர்களால் சங்க இலக்கியங்கள் வழங்கின.

நளியிரு முன்னீர் நாவாய், வளிவழுக்கறுத்த வங்கம், தனம் தரும் நன்கலன் என சிறப்பிக்கப்பட்டன.

சங்க காலத் துறைமுகங்களைச் சேர நாட்டுத் துறைமுகப்பட்டினங்களான முசிறி, தொண்டி மாந்தை, முதலியனவும் காவிரிப்பூம்பட்டினமாகிய சோழநாட்டுத் துறைமுகமும், பாண்டிய நாட்டுத் துறைமுகமுமான கொற்கை, காயல் ஆகிய துறைமுகப்பட்டினங்களும் இவ்வியலில் விரிவாக ஆராயப்பெறுகின்றன.

சேரநாட்டுத் துறைமுகப்பட்டினங்கள்

முசிறி

சேரர்களின் துறைமுகப்பட்டினங்களுள் கிழக்குக் கடற்கரையில் உலகப் புகழ் பெற்றிருந்த காவிரிப் பூம்பட்டினம் போல் மேற்குக் கடற்கரையில் உலகப் புகழ்பெற்ற பட்டினமாக முசிறி விளங்கியது. மேற்குக் கடற்கரையில் பேரியாற்றங்கரையில் இப்பட்டினம் அமைந்திருந்தது.

வேறுபெயர்கள்

முசிறித் துறைமுகம் மிகவும் பழமையானது. வான்மீகி இராமாயாணத்தில் இவ்விடம் முரசிபதனம் என்று குறிக்கப்படுகின்றது. யவனர்கள் முசிறியை முசிறிஸ் என்று அழைத்தனர். முசிறி முயிரிக் கோடு என்றும் அழைக்கப் பட்டது. முசிறி என்ற பெயர் மாந்தை எனவும் கொடுங்கோளூர் எனவும் அழைக்கப்பட்டது. முசுறுப்புல் என்னும் ஒருவகைப்புல் இக்கடற்கரைப்பட்டினத்தில் விளைந்தமையால் முசிறி எனப் பெயர்பெற்றது என்று கூறுவர்.

முசிறித் துறைமுகத்தில் மற்றைய துறைமுகங்களைப் போன்று கலங்கரை விளக்கமும், சங்கச் சாவடியும், பண்டகச் சாலைகளும், கிடங்குகளும் பிறவும் இருந்தன.

**“சோழ நாட்டுக் கீழக்கடற்கரையிலும் முசிறி என்ற பட்டினம் இருந்தது. உள்நாட்டிலும் முசிறி என்ற ஊர் திருச்சிராப்பள்ளிக் கோட்டத்தில் உள்ளது. அது ஒரு தாலுக்காவின் தலைநகர்”.**[4]

அரேபியர்கள் முசிறியில் உண்டாகும் மிளகு, ஏலம், இலவங்கம் என்னும் பொருட்களையும், புல்தைலம் என்னும் நறுமண எண்ணையையும் பெரிதும் விரும்பி

வாங்கிச் சென்றனர். இந்நறுமண எண்ணெயை உடம்பில் பூசிக்கொள்ளவும், இறந்த உடலை நெடுநாள் கெட்டுப் போகாமல் பாதுகாக்கவும் பயன்படுத்தினர்.

முசிறியில் அரேபியர்கள் வாணிகஞ் செய்த இடத்திற்கு பந்தர் என்று பெயரிட்டிருந்தார்கள். அரபு மொழியில் பந்தர் என்பதற்கு "கடைவீதி" என்று பொருள். முசிறித் துறைமுகத்தில் முத்துக்களும் விலையுயர்ந்த பொன் நகைகளும் விற்கப்பட்டன.

"கொடுமணம் பட்டநெடுமொழி ஒக்கலொகு பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்[5]

**நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க்**

**கமழுற தாழைக் கானலம் பெருந்துறை[5]**

என்று பதிற்றுப்பத்தும் குறிப்பிடுகின்றது.

**கொடுமணம் பட்ட விணைமாண் அருங்கலம்**

**பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்[6]**

அ
ஆரேபியர்கள் சேரநாட்டு மிளகை ஏற்றுமதி செய்து செங்கடல் துறைமுகங்களிலும் அலெக்சாந்திரியத் துறைமுகப்பட்டினத்திலும் விற்றார்கள். அங்கிருந்து உரோம் மற்றும் எகிப்து நாட்டுப் பொருட்களை இறக்குமதி செய்து முசிறியில் விற்றார்கள். அக்காலத்தில் அரேபியர்கள் கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று வாணிகம் செய்யவில்லை தமிழர்கள் கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று வாணிகம் செய்த பொருட்களை அரேபியர்கள் வாங்கிக் கொண்டு போய் வெளிநாடுகளில் விற்றார்கள்.

**"கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த பிளினியின் (கி.பி. 26–73) இயற்கை வரலாறு, எரித்ரியக் கடற்செலவு மற்றும் தாலமியின் குறிப்புகள் போன்றவை முசிறியின் சிறப்பான வாணிக நடவடிக்கை குறித்துப் பேசுகின்றன. இவற்றிற்கு வலுவூட்டுவனவாக, அண்மையில் வியன்னா அருங்காட்சியகத்தில் இருந்து வெளிக் கொணரப்பட்டுள்ள கிரேக்க மொழியில் உள்ள வாணிக ஒப்பந்தம் தொடர்பான இத்தாள் ஆவணம்** (PAPYRUS DOCUMENT) **முசிறித் துறைமுகத்திற்கும்**

அலெக்சாந்திரியாவிற்குமிடையே நிலவிய வாணிகத் தொடர்பைக் காட்டுகிறது. மேற்சுட்டிய ஆவணத்தின் பின் பக்கத்தில் முசிறியிலிருந்து அலெக்சாந்திரியாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட சரக்குளைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. இவற்றில் வாசனைத் திரவியம், தந்தம் மற்றும் துணிகள் முக்கியமானவைகள் ஆகும்".[7]

யவனர்கள் அக்காலத்தில் கடற்கரை ஓரமாகவே கப்பலைச் செலுத்தியதால் முசிறி முதலான தமிழ்நாட்டுத் துறைமுங்களுக்கு வந்து செல்ல பல மாதங்கள் ஆயின. ஹிப்பலஸ் என்னும் கிரேக்க மாலுமி பருவக் காற்றின் உதவியினால் நடுக்கடலுள் கப்பலைச் செலுத்தி விரைவில் பயணம் செய்யும் முறையினைக் கண்டுபிடித்தார். அதன்பின்னரே யவனக் கப்பல்கள் முசிறித் துறைமுகத்திற்கு விரைவாகவும் அதிகமாகவும் வரத்தொடங்கின. ஹிப்பலஸ் கண்டுபிடித்த பருவக்காற்றுக்கு அவரின் பெயரையே சூட்டினார்கள். ஹிப்பலஸ் பருவக்காற்று கண்டுபிடித்த பின்னர் யவனர் வாணிகம் பெருகிற்று எனலாம்.

"சேரநாட்டுத் துறைமுகங்கள் அனைத்தும் கண்ணூருக்கும் கொச்சிக்கும் இடையில் அமைந்திருந்தன. அரேபியாவிலிருந்தும், கிரீஸிலிருந்தும் வாணிகச் சரக்குகளை ஏற்றிக் கொண்டு வந்த எண்ணற்ற நாவாய்கள் முசிறியில் செறிந்து கிடந்தன என்று பெரிபுளுசு கூறுகின்றார். வைகாசி மாதம் தொடங்கி மூன்று நான்கு மாதங்கள் வரை சேர நாட்டுக் கடற்கரையின் மேல் வந்து மோதும் பருவக்காற்றை முதன்முதல் கண்டறிந்தவர் இப்பாலசு (கி.பி. 45) என்ற கிரேக்கர் என்று கூறுவர் இக்காற்றோட்டத்தின் ஊடே பாய்விரித்தோடும் கப்பல்கள் வெகுவிரைவாகவும் கட்டுக்குலையாமலும் சேரநாட்டுத் துறைமுகங்களை அறியமுடியும் என்ற உண்மையை ஐரோப்பிய மாலுமிகள் அறிந்து கொண்டனர். இப்பருவக்காற்றின் துணைகொண்டு வாணிகச் சரக்குகள் ஏற்றிய பெரிய பெரிய மரக்கலங்கள் கடல்களின் நடுவில் பாய்விரித்தோடித் தமிழகத்தின் மேலைக்கூடற் கரைத் துறைமுகத்தினை அடைந்து நங்கூரம் பாய்ச்சின"[8] என்பர் கே. கே. பிள்ளை.

யவனக் கப்பல்களில் ஏற்றுமதியான பொருட்களில் முக்கியமானதும்

அதிகமாகவும் இருந்தது மிளகுதான். உரோம், நாட்டில் மிளகு பெரிதும் விரும்பி வாங்கப்பட்டது. யவனர்கள் மிளகை விரும்பி ஏற்றுமதி செய்ததால் மிளகிற்கு யவனப்பிரியா என்ற பெயர் உண்டாயிற்று. யவனர்கள் பவழம், கண்ணாடி, செம்பு, தகரம், ஈயம் முதலான பொருட்களை இறக்குமதி செய்தும், பொன்னைக் கொடுத்தும் மிளகை ஏற்றுமதி செய்தனர்.

பொன்னைக் கொண்டு வந்து விலையாகக் கொடுத்து மிளகை ஏற்றிக் கொண்டு போனதை அகநானூறு தெரிவிக்கிறது.

**சுள்ளிஅம் பேரியாற்று வெண்ணுரை கலங்க**
**யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்த கறியொடு பெயரும்**
**வளங்கெழு முசிறி**[9]

**"மிளகு வியாபாரத்திற்கு வந்த கிரேக்கர் இந்தியமருந்து என மிளகைப் பாராட்டினர். அவர்கள் இறைச்சியைப் பதம்கெடாது காக்கவும், உணவுகளுக்குப் பாகப்பொருளாகச் சேர்க்கவும் மிளகுப் பொடியைத் தூவி வந்தனர். மிளகின் சுவையை மாளிகை வாசிகள் முதலாக மண்குடிசை வாசிகள் ஈறாக அனைவரும் அறியும் நிலைமை ஏற்பட்டதால் தென்னாட்டிலிருந்து உரோம் நாட்டிற்குச் சென்ற பொருள்களில் முக்கால்பாகம் மிளகாகவே இருந்து வந்தது".**[10]

புறநானூற்றில் பரணர், யவனர்கள் பொன்னைக் கொடுத்து மிளகைப் பெற்றுச் சென்றதைக் கூறியுள்ளார். முசிறித் துறைமுகம் ஆழமில்லாமல் இருந்தபடியால் யவனரின் பெரிய கப்பல்கள் கரைக்கு வரஇயலாமல் கடலில் தொலைவிலேயே நின்றன தோணிகளில் மிளகை ஏற்றிக்கொண்டு போய் யவனக்கப்பல்களில் ஏற்றிவிட்டு அதன்விலையாகப் பொன்னை வாங்கி கொண்டு வந்தார்கள் என்று கூறியுள்ளார்.

**"உலக நாடுகளுக்குத் தேவைப்படும் மிளகிலே எழுபது விழுக்காடு அளவு மிளகினைக் கேரள நாடே இன்றும் கொடுத்து வருகிறது".**[11]

முசிறித் துறைமுகத்தின் செழுமையால் சேர நாடு பொன்னாடாக விளங்கியது. நாளடைவில் முசிறி என்ற பெயர் மறைந்து "மகோதைப் பட்டினம்" என வழங்கப்பட்டது. மகோதை என்ற பெயரும் மறைந்து பின்னர் "கொடுங்கோளூர்" எனவாயிற்று. "கொடுங்கோளூரை" ஆங்கிலேயர்கள் 'கிராங்கலூர் என அழைத்தனர்.

முசிறி என்றும், மகோதை என்றும், கொடுங்கோளூர் என்றும் வெவ்வெறு காலங்களில் பெயர்பெற்று விளங்கிய துறைமுகநகரம் நாளடைவில் அழிந்து போயிற்று. சேரமான் பறம்பு என்று அம்மாளிகை இருந்த இடத்தைக் குறிக்கின்றனர் மலையாளமக்கள் என்று இரா.பி. சேதுப்பிள்ளை குறிப்பிடுகின்றார்.

உலகப்புகழ் பெற்றிருந்த முசிறித்துறைமுகம் கி.பி. 14–ஆம் நூற்றாண்டில் வெள்ளப்பெருக்கினால் அழிந்தது. பெருமழையின் காரணமாகப் பேரியாற்றில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு முசிறிப் பட்டினம் வெள்ளத்தில் மூழ்கி மறைந்து போய்விட்டது. முசிறித் துறைமுகம் மூழ்கிப் போனதால் அதற்கு அருகில் பிற்காலத்தில் கொச்சித் துறைமுகம் உண்டாயிற்று. இன்று கேரளத்தில் தலைசிறந்ததும் இந்தியாவில் மிகச்சிறந்த துறைமுகப்பட்டினங்களில் ஒன்றாகவும் அரபிக்கடலின் ராணியாகவும் கொச்சித் துறைமுகம் திகழ்கின்றது.

**மாந்தை**

'துறைகெழு மாந்தை' 'கடல்கெழு மாந்தை' என்று கூறப்படும் மாந்தை துறைமுகம் சேரநாட்டுத் துறைமுகப்பட்டினமாகும். மரந்தை என்றும் அழைக்கப்பட்டது. சங்க இலக்கியத்தில் அகநானூறு மாந்தையைச் சிறப்பிக்கின்றது.

> **வலம்படு முரசிற் சேரலாதன்**
> **முந்நீரோட்டிக் கடம்பறுத் திமயத்து**
> **முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து**
> **நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்**
> **பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்**
> **பொன் செய் பாவை விரமொடு ஆம்பல்**
> **ஒன்றுவாய் நிறையக் குவைகி அன்றவன்**
> **நிலந்தினத் துறந்த நிதியம்.**[12]

கடற்கொள்ளைக்காரக் குறும்பரை அடக்கிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பொன், மணி, முத்து முதலான செல்வங்களை மாந்தைப் பட்டினத்தில் புதைத்து வைத்திருந்தான் என்று மாமூலனார் கூறுகிறார்.

சங்ககாலப் புலவர்கள் பெண்களின் அழகைப் பற்றிக் குறிப்பிடும் போது 'வஞ்சியன்ன' என்றும் 'தொண்டியன்ன' என்றும் கூறுவதை மரபாகக் கொண்டனர். இந்த மரபினைப் பின்பற்றி பரணர் அகத்துறைப் பாடலில் மாந்தை நகரின் சிறப்பினைக் கூறுகிறார்.

**வண் தோட்டு நெல்லின் வாங்கு பீள்விரிய**
**துய்த் தலை முடங்கு இறாத் தெறிக்கும், பொற்புடைக்**
**குரங்கு உளைப் புரவிக் குட்டுவன்**
**மரந்தை அன்ன, என் நலம் தந்து சென்மே![13]**

நெற்கதிர்கள் பரந்து கிடப்பதும், இறால் மீன்கள் தெறித்து ஓடுவதுமான வயல்களையுடையதுமான மாந்தை போன்ற என் நலத்தைத் தந்து விட்டுப் போவாயாக எனப் பரத்தை ஒருத்தி தலைவனிடம் கூறும் கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது.

மாந்தை நகரத்தில் புன்னை மரங்கள் சூழ்ந்து காணப்பட்டதாக முத்தொள்ளாயிரம் குறிப்பிடுகிறது.

**புன்னாகச் சோலை புனல் தெங்குசூழ்**
**மாந்தை நல்நாடன்[14]**

எனவும்,

**மல்லல்நீர் மாந்தையார் மாக்கடுங்கோ[15]**

எனவும் முத்தொள்ளாயிரம் மாந்தை நகரத்தினைச் சிறப்பிக்கின்றது.

மாந்தை நகரம் கடற்கரையின் அருகில் அமைந்திருந்தது என்பதை பதிற்றுப்பத்தும் விளக்குகிறது.

**எழாத்துணைத்தோள் பூழியர் மெய்ம்மறை**
**இரங்குநீர்ப்பரப்பின் மரந்தையோர் பொருந**
**வெண்பூ வேளையொடு சுரைதலை மயங்கிய**
**விரவுமொழிக் கட்டூர் வயவர்வேந்தே**[16]

ஒலிக்கும் கடற்பரப்பின் அருகில் இருக்கும் மாந்தை நகரத்தின் தலைவனே என இளஞ்சேரலைப் பெருங்குன்றூர் கிழார் கூறியுள்ளார்.

மேற்குக் கடற்கரையில் விளங்கிய மற்றொரு துறைமுகமாகிய தொண்டியின் புகழ் ஓங்கியதால் மாந்தையின் பெருமை மங்கியது எனவும் கருதலாம். அயல்நாட்டவர் குறிப்புரைகளில் மாந்தையைப் பற்றிய செய்தி இடம்பெறவில்லை.

**தொண்டி**

தமிழ்நாட்டில் தொண்டி என்ற பெயரில் இரண்டு துறைமுகநகரங்கள் இருந்தன என்று இலக்கியங்கள் கூறுகின்றன. அவற்றுள் மேற்குக் கடற்கரையில் அமைந்திருந்த தொண்டி சேரர்க்குரியதாக விளங்கியது. மற்றொன்று கீழைக் கடற்கரையில் அமைந்திருந்த துறைமுகநகரம். இது சோழர்க்குரியதாக விளங்கியது.

'சோமலே' அவர்கள் இராமநாதபுரம் மாவட்டத்தில் 'தொண்டு' என்ற வழக்கு நிலத்துள் புகுந்த கடற் பகுதியைக் குறிக்கும் என்று எழுதியுள்ளார். பள்ளமான தொண்டி என்ற கடற்பகுதியே துறைமுகப் பகுதியாக மாறிவிட்டதால் தொண்டி என்ற பெயரும் ஒரு துறைமுகத்தின் சிறப்புப் பெயராகச் சங்க காலத்திலேயே மாறியது.

**"சென்னைத் துறைமுகத்தை ஆழமாக்க இயந்திர மணல் வாரிகளைப் பயன்படுத்திச் செயற்கைத் துறைமுகமாக ஆக்கியுள்ளதைக் காணலாம். இயற்கையில் இவ்வாறு தோண்டப்பட்டு அமையப்பட்ட துறைமுகமே தொண்டி என்று சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டது. சேரரின் இந்தத் துறைமுகத்தைக் கி.பி. முதல், இரண்டாம் நூற்றாண்டு மேலைநாட்டுப் பயண நூலாசிரியர்கள் 'டுண்டிஸ் என்று அழைத்தனர்."**[17]

ஐங்குறுநூற்றில் அம்மூவனார் தொண்டிப்பத்து என்னும் தலைப்பில் பாடியவை சேரர்களின் தொண்டித் துறைமுகம் பற்றியதாகும். இத்தொண்டி முற்காலத்தில் பலநாட்டு மரக்கலங்கள் வந்து தங்கும் பெருந்துறைமுகமாக விளங்கியது என்பதைப் பழைய நூல்களும் தாலமி என்னும் ஆசிரியரது குறிப்புகளாலும் அறியப்படுகின்றது. இத்தொண்டிப்பட்டினம் சேர அரசர்களின் இளைய வழியினராகிய பொறையர்களின் ஆட்சியிலிருந்ததாகத் தெரிகின்றது.

கொங்கு நாட்டை ஆட்சிபுரிந்த பொறையர்களுக்கு, கொங்கு நாட்டில் துறைமுகப்பட்டினம் இல்லாத காரணத்தால் சேர நாட்டுத் துறைமுகப்பட்டினமாகிய தொண்டியில் தங்கள் வாணிகத்தை நடத்தியுள்ளனர்.

'எரித்திரைய கடற்செலவு' என்னும் நூலில், நஊர் திண்டிஸ் என்ற இரண்டு ஊர்களும் தமிழகத்தின் மேற்குக்கரையை அணுகுபவர்களின் கண்களில் படும் சந்தைகள் என்று குறிக்கப்பட்டுள்ளன. (THE PERIPLUS OF THE ERYTHREAN SEA, Para-60)

**'தாலமியுன்' குறிப்புரைகளைத் தொகுத்து நூலாகப் பதிப்பித்த மெக்ரிண்டல் முசிறித் துறைமுகம் பற்றிக்குறிப்பிட்டுள்ளார்.[18]**

தொண்டித் துறைமுகத்தில் யவன வாணிகர் வாணிகம் செய்தனர். 'பெரிபுளுசு' குறித்தது போலவே தாலமியும் இத்தொண்டியை திண்டிஸ் (Tyndis) என்று கூறியுள்ளார். சங்க இலக்கியங்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு போன்றவற்றில் தொண்டியைப் பற்றி இருபத்து மூன்று பாடல்கள் சிறப்பிக்கின்றன. பொய்கையார் என்னும் சங்கப் புலவர் இத்தொண்டியைச் சேர்ந்தவராவார்.

**சங்க இலக்கியங்களில்**

நற்றிணை, குறுந்தொகை பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு போன்ற சங்க இலக்கியங்கள் தொண்டியைச் சிறப்பித்துள்ளன.

**நற்றிணையில்**

> **திண்டேர்ப் பொறையன் தொண்டி**
> **தன்திறம் பெறுக இவள் ஈன்ற தாயே**[19]

என்று நற்றிணை, தொண்டியைக் குறிப்பிட்டுள்ளது.

**குறுந்தொகையில்**

> **குணகடற் றிரையது பறைதபுநாரை**
> **திண்டோப் பொறையன் தொண்டி முன்றுறை**[20]

என்று பரணர் குறுந்தொகைப் பாடலில் தொண்டியைப் பற்றிப் பாடியுள்ளார்.

**ஐங்குறுநூற்றில்**

ஐங்குறுநூற்றில் பத்துப் பாடல்களில் தொண்டி பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. தொண்டி அன்ன பணைத்தோள், தொண்டியன்ன தோள் உற்றாரே; தொண்டி அற்றே நின்னலது இல்லா இவள் சிறு நுதலே; துறைகெழு தொண்டி அன்ன இவள் நலனே என்னும் ஐங்குறுநூற்று வரிகள் தொண்டி நகரினைப் பெண்களின் அழகிற்கும், பண்பு நலனிற்கும் ஒப்பிடப்பட்டுள்ளது.

**பதிற்றுப்பத்தில்**

> **தொண்டியுள் தந்து கொடுப்பித்துப் பார்ப்பர்க்கு**
> **கபிலையொடு குடநாட்டு ஒரூர் ஈத்து**
> **வானவரம்பனெனப் பேரினிது விளக்கி**[21]

எனவும்

> **வளைகடல் முழவின் தொண்டியோர் பொருந**[22]

எனவும் பதிற்றுப்பத்தில் தொண்டித் துறைமுகம் சிறப்பிக்கப் படுகிறது.

அகநானூற்றில்

மணம்கமழ் பாக்கத்துப் பகுக்கும்

வளம்கெழு தொண்டி அன்ன இவள்நலனே"[23]

என அம்மூவனார் அகநானூற்றில் வளமிக்க தொண்டியைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

வெண்கோட்டு யானை விற்ற போர்க் குட்டுவன்

தெண்திரைப் பரப்பின் தொண்டி முன்துறை[24]

வெண்கொம்புகளைக் கொண்ட யானைகளையும் போர் வெற்றியையும் உடைய குட்டுவனது, தெளிந்த கடற்பரப்பின் கரையிலிருக்கும் முன்துறை தொண்டி முன்துறை என நக்கீரர் குறிப்பிட்டுள்ளார்.

புறநானூற்றில்

குலை இறைஞ்சிய கோள் தாழை

அகல் வயல் மலை வேலி

நிலவுமணல் வியன்கானல்

தெண்கழிமிசைச் சுடர்பூவின்

தண் தொண்டியோர் அடுபொருள்[25]

என்ற புறப்பாடல் குலைதாழ்ந்து கொள்வதற்கு ஏற்றவாறுள்ள தென்னையையும், அகன்ற வயலையும், உயர்ந்த வேலியையும், நிலவு போன்ற மணலையும் உடைய அகலமான கடற்கரையை உடையது தொண்டி என்பதையும் புலப்படுத்துகின்றது.

பாண்டி தொண்டி

பாண்டி நாட்டில் கிழக்குக் கடற்கரையில் மற்றொரு தொண்டி இருந்தது. அது பாண்டி தொண்டி என வழங்கப்பட்டது. இப்போதைய இராமநாதபுரம் மாவட்டத்தில்தான் பாண்டி தொண்டி அமைந்துள்ளது. பாண்டி தொண்டி இப்பொழுது காயல் பட்டினம் என்று கூறப்படுகிறது. அகநானூற்றில் பாண்டிநாட்டுத் தொண்டியைப் பற்றியும் அம்மூவனார் பாடியுள்ளார்.

கிழக்குக் கடலிலிருந்து வீசுகிற கடற்காற்றினைக் கொண்டல் என்பர். கிழக்குக் கடற்கரையிலிருந்த தொண்டியிலிருந்து வீசிய கொண்டல் என்ற பொருள் வருவதால் பாண்டிதொண்டி எனவாயிற்று.

இப்பாண்டித் தொண்டியை சிலப்பதிகாரமும் சிறப்பித்துள்ளது. கீழ்க்கடல் தீவுகளிலிருந்து அகில், சந்தனம், பட்டு முதலியனவும் சாதிக்காய், இலவங்கம், குங்குமப்பூ, கருப்பூரம் முதலிய வாசனைப் பொருட்களும் தொண்டித் துறைமுகத்திற்கு இறக்குமதி செய்யப்பட்டுப் பின்பு அங்கிருந்து மதுரைக்கு அனுப்பப்பட்டதைச் சிலப்பதிகாரம் ஊர்காண்காதையில் குறிப்பிட்டுள்ளது.

**ஓங்கிரும் பரப்பின**
**வங்க கோட்டத்துத் தொண்டியோர் இட்ட**
**அகிலும் துகிலும் ஆரமும் வாசமும்**
**தொடு கருப்பூரமும் சுமந்துடன் வந்த**
**கொண்டலொடு புகுந்து கோமகன்**
**வெங்கண் நெடுவேள் வில்விழாக் காணும்**
**பங்குனி முயக்கத்துப் பனியரசு**[26]

இப்பாண்டித் தொண்டி பிற்காலத்தில் சிறப்புக் குன்றியும் இக்காலத்தில் குக்கிராமமாகவும் இருக்கிறது.

**சோழநாட்டுத் துறைமுகப்பட்டினம்**

**காவிரிப்பூம்பட்டினம்**

ஏறத்தாழ 2000 ஆண்டுகளுக்கு முன் பண்டைய சோழ மன்னர்களின் தலைநகராகவும், துறைமுகமாகவும் காவிரிப்பூம்பட்டினம் விளங்கியது. பண்டையத் தமிழர்களின் கடல் வாணிகம் மிகவும் சிறந்து விளங்கியதற்குக் காவிரிப்பூம்பட்டினம் காரணமாகத் திகழ்ந்தது. இக் காவிரிப்பூம்பட்டினம் தமிழ்நாட்டின் ஒப்பற்ற துறைமுகப்பட்டினம் ஆகும். வரலாற்றுச் சிறப்புமிக்க இப்பட்டினம் காவிரி கடலொடு கலக்குமிடத்தில் அமைந்திருந்தது.

கடியலூா் உருத்திரங்கண்ணனாா் கடலிலிருந்து நீராவியாகச் சென்ற நீா் மலையில் பெய்வதும், மலையின் பெய்த நீா் மீண்டும் கடலுக்கு வருவதும் இயற்கையாக மாறி மாறி நிகழ்வதைப் போன்று பொருள்கள் காவிரிப்பட்டினத்திலிருந்து வெளிநாட்டிற்குச் செல்வதும், வெளிநாட்டிலிருந்து அப்பட்டினத்திற்கு வருவதும் தங்கு தடையின்றி நிகழ்ந்ததை அழகாக விளக்கியுள்ளாா்.

காவிரிப் பூம்பட்டினத்தில் கப்பல்கள் ஏற்றிவந்த பண்டங்களை இறக்குதலும், வெளிநாடுகளுக்குச் செலுத்த வேண்டிய பொருள்களைக் கப்பல்களில் ஏற்றுதலும், ஓய்வு ஒழிவின்றி நடந்தன. ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களுக்குக் காப்பு வரிகள் இருந்தன. வெளிநாடுகளுக்குச் செல்லும் பொருள்கள் மீது சோழ அரசின் அடையாளமாகிய புலிப்பொறி பொறிக்கப்பட்டிருந்தது. அங்கு பணிபுரிவோா்கள் நாட்டுப்பற்று மிக்கவா்களாக இருந்து பொருள்களைக் காக்கும் தொழிலைச் சிறப்புடன் செய்தனா். வழிவழியாகவும் இவ்வகைத் தொழில்களைச் செய்து வந்தனா்.

**"சோழ வளநாட்டுக் கடலோடிகள், கரையோரங்களில் மட்டும் பயணஞ் செய்தாரல்லா். அவா்கள் வங்காள விரிகுடாவைக் கடந்து கங்கை நதி, ஐராவதி முகத்துவாரங்களுக்குச் சென்றாா்கள். இந்துமாக் கடலைக்கடந்து மலாய்த் தீவுக் கூட்டங்களையும் அடைந்தாா்கள் என வரலாற்று அறிஞா் வின்செண்ட் சுமித் என்பாா் குறிப்பிட்டுள்ளாா்."**[27]

சங்க காலத்தில் பல நாட்டு வணிகா்களும் காவிரிப் பூம்பட்டினத்தில் வந்து தங்கியிருந்தனா். என்றும் விழா நடக்கும் ஊரினைப் போலவே மக்கள் கூட்டம் உடையதாகக் காவிரிப் பூம்பட்டினம் காட்சியளித்தது. அக்காலத்தில், பட்டினம் என்றால் அது காவிரிப் பூம்பட்டினந்தான் என்று அறியும் அளவிற்குப் புகழ்பெற்றுச் சிறந்து விளங்கியது.

காவிரிப்பூம்பட்டினம் சோழநாட்டின் பண்பாட்டு மையமாக விளங்கியது. தமிழ்ப் பண்பாட்டிற்குப் பூம்புகாா் நல்கிய கொடை அளவிடற்கரியது ஆகும். பூம்புகாா் பழமை வாய்ந்த நகரம் என்று மா. இராசமாணிக்கனாா் குறிப்பிட்டுள்ளாா்.

“காவிரிப் பூம்பட்டினம் சோழநாட்டின் சிறந்த துறைமுகநகரமாகும். கி.பி. முதலிரண்டு நூற்றாண்டுகளில் தமிழகத்து வாணிகத்தைப் பற்றி எழுதிய பிளைனி போன்றவர் இந்நகர வாணிகத்தைப் பற்றித் தம் நூல்களில் குறித்துள்ளனர். புத்தசாதகக் கதைகளில் இந்நகரத்தைப் பற்றி இருப்பதால் முற்பட்ட காலத்திலிருந்தே சிறப்புற்ற துறைமுக நகரமாக இருந்திருக்க வேண்டும். இங்கு கிடைத்த புதை பொருள்களைக் கொண்டு இந்நகரமே கிறிஸ்துவுக்கு முற்பட்ட வாழ்க்கையையுடையது என்பதை ஆராய்ச்சியாளர்கள் கண்டறிந்தனர்.”[28]

## வேறுபெயர்கள்

காவிரி கடலொடு கலக்குமிடத்து அமைந்த நகரமாதலால் புகார் எனப்பட்டது. புகார் என்பது ஆற்றுமுகத்தைக் குறிப்பிடும். காவிரிப் பூம்பட்டினம் என்னும் முழுமையான பெயர் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. மூதூர், பேரூர், பெருநகரி, பட்டினம், புகார், பூம்புகார், காவிரிப்பட்டினம், எனப் பல பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

கவீரபட்டணம், காகந்தி, கமரா, சபரிஸ், சம்பாபதி என்றும் மூதூர், பேரூர், பட்டினம், மண்ணகத்து வான்பதி, சோழபட்டினம், கோலப்பட்டினம், காவிரிப்படப்பை நன்னகர், காவேரிப்பட்டினம் எனப் பலவகையாக அழைக்கப்பட்டது.

## நகரமைப்பு

சோழர்களின் சிறப்பு மிகு துறைமுகமாகவும் தலைநகராகவும் விளங்கிய பூம்புகார் அன்று மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என்று இரண்டு பிரிவுகளும் நடுவில் நாளங்காடி எனும் பிரிவுமாக விளங்கியது. மருவூர்ப்பாக்கத்தில் உயர்ந்த மாட மாளிகைகள் இருந்தது. அங்கு யவனர், கூல வாணிகர், மீன் வாணிகர், பொற்கொல்லர், தச்சர், ஓவியம் தீட்டுவோர் முதலியோர் வாழ்ந்தார்கள்.

பட்டினப்பாக்கத்தில் அரசனின் மாளிகை இருந்தது. அகன்ற தேரோடும் தெருக்களும் அங்காடித் தெருக்களும் இருந்தன. வணிகர், மறையவர், மருத்துவர், சோதிடர் முதலியோர் இருந்தனர். அரண்மனையைச் சுற்றி முப்படை வீரர்களும்

புலவர், பாணர், இசைவாணர், முத்து வேலை செய்வோர், நாழிகைக்கணக்கர் முதலியோரும் இருந்தனர் நாளங்காடி ஆரவாரமிக்கதாய் விளங்கியது.

"ஒவ்வொரு பெரிய கடற்கரை நகரமும் இரண்டு பக்கங்களையுடையதாய் இருந்தது. அவற்றுள் ஒரு பாகம் ஊர் என்றும், மற்றொரு பாகம் பட்டினம் என்றும் அழைக்கப்பட்டன. பூம்புகார் நகரத்தின் ஒரு பாகம் மருவூர்ப் பாக்கம் என்றும், மற்றொரு பாகம் பட்டினப்பாக்கம் என்றும் பெயரிடப்பெற்றன."[29]

தாலமி என்பவர் காவிரிப் பூம்பட்டினத்தைத் தலைச்சிறந்த பண்டக சாலையாகக் குறிப்பிட்டுள்ளார். காவிரி ஆற்றின் முடிவுப் பகுதி – கடலொடு கலந்த இடம் காவேரி என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார் தாலமியின் இந்தச் செய்திகளையெல்லாம் 'மெக்கிண்டல்' தொகுத்துத் தந்துள்ளார்.[30]

**சங்க இலக்கியங்களில்**

பண்டைய பூம்புகார் நகரின் பெருமையைச் சங்க இலக்கிய நூலான பட்டினப்பாலை விரிவாகப் போகிறது. அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களும் புகாரைச் சிறப்பிக்கின்றன. சங்க காலத்தில் பூம்புகார் மிகவும் பெரிய நகரமாகக் காட்சியளித்தது. காப்பிய நூல்களான சிலப்பதிகாரம் மணிமேகலை முதலியனவும் புகார் நகரின் சிறப்பினைக் கூறுகின்றன.

**நற்றிணையில்**

நற்றிணையில் பூம்புகாரில் உள்ள கழாஅர் முன்துறை பற்றியும், சாய்க்காடு பற்றியும், புகார்த் துறைமுகத்திற்கருகில் அமைந்துள்ள கலங்கரை விளக்குப் பற்றியும் வந்துள்ளன.

> **பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டன்ன**[31]
>
> **கங்குன் மாட்டிய கனைகதி ரொண்சுடர்**[32]
>
> **வெல்போர்ச் சோழர் கழாஅர் கொள்ளும்**[33]

**ஐங்குறுநூற்றில்,**

**கைவண் மந்தி கழாஅர் அன்ன**[34]

என ஐங்குறுநூற்றிலும் பூம்புகார் நகரத்தில் உள்ள கழாஅர் முன்துறை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**பதிற்றுப்பத்தில்,**

**குறும்பல் யாணர்க் குரவை யயரும்**
**காவிரி மண்டிய சேய்விரி வனப்பிற்**
**புகார்ச் செல்வ**[35]

எனப் பதிற்றுப்பத்தில் அரிசில்கிழார் புகார் நகரைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

அகநானூற்றில்,

கழார், சாய்க்கானம், பட்டினம், பெருந்துறை என்றெல்லாம் அகநானூற்றில் பூம்புகார் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.

**பல்வேல் மந்தி கழாஅர் அன்ன**[36]

**என்றும்**

**கொடுஞ்சுழிப் பகாஅர்த் தெய்வ நோக்கிக்**
**கடுஞ்சூள் தருகுவென் நினக்கே.**[37]

**என்றும்**

**கழைமாய் காவிரிக்கடல் மண்ட பெருந்துறை**[38]

**என்றும்**

**கைசெய் பாவைத் துறைக்கண் இறுக்கும்**
**மகர நெற்றி வான்றோய் புரிசைச்**
**சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்**
**புகார்...** [39] **என்றும்**

**பூவிரி நெடுகழி நாப்பண் பெரும்பெயர்க்**
**காவிரிப் படப்பைப் பட்டினத்தன்ன**[40]

**என்றும்**

கழா அர்ப் பெருந்துறை விழவின் ஆடும்[41]

என்றும்

பல்வேல் மத்தி கழாஅர் அன்ன[42]

என்றும்

மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை
ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்
கலிகொள் சுற்றமொடு கரிகால் காண[43]

என்றும் பூம்புகார் அகநானூற்றில் குறிப்பிடப்படுகின்றது.

புறநானூற்றில்

மீட்பாய் களையாது மிசைப்பரள் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம் தகாஅர்
இடைப்புலப் பெருவழிச் சொரியும்
கடற்பல் தாரத்த நாடு.[44]

என்றும்

பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும்
தண்புனற் படப்பை என்மூர் [45]

என்றும்

காவிரி அணையும் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி [46]

என்றும் புறநானூற்றில் பூம்புகார், படப்பை என்றும் புகார் என்றும் சிறப்பிக்கப்பட்டுள்ளதை அறியலாம்.

**பொருநராற்றுப்படையில்,**

பொருநராற்றுப் படையும் பட்டினப்பாலையும் பூம்புகாரின் வளர்ச்சி பெற்ற நகரமைப்பை விவரிக்கின்றன. பரிசில் பெறாத பொருநனுக்குப் பரிசில் பெற்று வந்த பொருநன் கரிகால் பெருவளத்தானிடம் ஆற்றுப்படுத்துகிறான். அப்பொழுது

கரிகாலனின் இருப்பிடம், அவன் சிறப்புகள் சோழநாட்டின் வளம், காவிரியின் வனப்பு போன்றவைகள் பற்றிய செய்திகளும் பொருநர் ஆற்றுப்படையில் வருகின்றன.

**........... நீர்வாய்த்**
**தண்பனை தளிஇய தளரா இருக்கை**
**நண்பல்லூர்[47]**

என்று பூம்புகார் சூழ்ந்த ஊர்கள் குறிக்கப்பட்டுள்ளன.

காவிரி பாய்ந்து கடலொடு கலந்து இச்சோழநாட்டு வளத்தை நான்கு திணை நிலங்களும் மயங்கிய வளம் நிறைந்த பகுதியாகப் பொருநராற்றுப் படை பாடுகின்றது.

**பட்டினப்பாலையில்,**

பொருநர் ஆற்றுப்படையில் பூம்புகாரின் சிற்றூர் வாழ்வுச் சித்திரங்கள் புலப்படுத்தப்பட்டிருக்கப் பட்டினப்பாலையில் பேரூர் வாழ்வு நிலைகள் புலப்படுத்தப்பட்டுள்ளன. பேரூர் வாழ்வு நிலைகள் செழும்பாக்கம் சோணாடு, கடிநகர், பெருந்துறை, செழுநகர், பட்டினம் என்றெல்லாம் விவரிக்கப்பட்டுள்ளன.

**அகல்நகர் வியன் முற்றம்[48]**

என்றும்

**கொழும் பல்குடிச் செழும் பாக்கத்துக்**
**குறும் பல்லூர் நெடுஞ்சோணாட்டு[49]**

என்றும்

**புலிப் பொறிப் போர்க் கதவின்**
**திருத்துஞ்சும் திண்காப்பு[50]**

என்றும்

**பூதம் காக்கும் புகலரும் கடிநகர்[51]**

என்றும்

**தேர் ஓடத் துகள்கெழும்–திருவீதி[52]**

என்றும்

**தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும்–பெருந்துறை[53]**

என்றும்

**நெடுங்கால் மாடத்து ஒள்ளெரி[54]**

என்றும்

**பல்வேறு உருவின் பதாகை நீழல்**
**செல்கதிர் நுழையாச் செழுநகர்[55]**

என்றும்

என்றும் வரும் அடிகள் பூம்புகாரின் நகர வாழ்க்கையின் சிறப்பினைப் புலப்படுத்துகின்றன. 'மொழி பல பருகிய பழிதீர் தேஎத்து' என்ற வரி, பூம்புகாரில் பல்வேறு மொழிகள் பேசும் மக்கள் கலந்து வாழ்ந்ததை விவரிக்கின்றன.

பொருநராற்றுப்படையில், பூம்புகாரின் வேளாண்மை, மீன்பிடி தொழில்கள் நிறைந்த சிற்றூர் – பேரூர் வளர்ச்சி நிலை தெரிகின்றது. பட்டினப்பாலையிலும் அத்தொழில்கள் நிறைந்த வளர்ச்சியடைந்த பூம்புகார், 'குறும்பல்லூர் நெடுஞ்சோணாடு' என்று போற்றப்படும் நிலை புலனாகின்றது. அதனைத் தொடர்ந்து சிலப்பதிகாரத்தில் பூம்புகாரின் திட்டமிட்ட நகரமைப்பும் மக்களின் வாழ்வுச் சிறப்பும் தெரிய வருகின்றன.

**சிலப்பதிகாரத்தில்,**

மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம், நாளங்காடி என்ற பகுதிகளைக் கொண்டு விளங்கிய பூம்புகாரைச் சிலப்பதிகாரம் தெளிவாகச் சுட்டுகிறது.

**வேயா மாடமும் வியன்கல இருக்கையும்**
**மான்கட் காலதர் மாளிகை இடங்களும்**
**கயவாய் மரங்கிற் காண்போர்த் தடுக்கும்**
**பயனற வறியா யவனர் இருக்கையும்**

...............................................................

...............................................................

சிறுகுறுங் கைவினைப் பிறர் பிறர்வினை யாளரொடு

மருவின்றி விளங்கும் மருவூர்ப்பாக்கம்[56]

என வரும் முப்பத்து மூன்று வரிகள், மருவூர்பாக்கம் பற்றியும், அங்குப் பல்வேறு தொழில்கள் செய்வோர் பற்றியும் குறிப்பிடுகின்றன. வேளாண்தொழில், மீன்பிடி தொழில் போன்ற பல்வேறு சிறுதொழில்கள் புரிவோர் வாழ்ந்த பகுதியாக மருவூர்ப்பாக்கம் காணப்படுகிறது.

பீடு கெழு சிறப்பில் பெரியோர் மல்கிய

பாடல்சால் சிறப்பின் பட்டினப்பாக்கமும்[57]

எனவரும் வரிகள், பட்டினப்பாக்கம் பற்றிய விரிவான செய்திகளையும் அங்கு வாழ்ந்த மக்களின் செல்வச் செழிப்பையும் அங்குக் காணப்படும் பல்வேறு வீதிகளையும் குறிப்பிட்டுள்ளன.

மருவூர்ப்பாக்கம் பட்டினப்பாக்கம் என்ற இரு பிரிவுகளுக்கு இடையில் 'நாளங்காடி' பொழில் நிறைந்த சோலையாகத் திகழ்ந்திருக்கிறது.

மணிமேகலை காட்டும் பூம்புகார்

பூம்புகாரை மணிமேகலை 'திருவிழைமூதூர்' எனச் சிறப்பிக்கிறது. சிலப்பதிகாரம் கூறும் பூம்புகார் பற்றிய செய்திகளைக் காட்டிலும் மணிமேகலை குறிப்பிடும் செய்திகளில் புராணக் கதைகளும், புனைவுகளும் அதிகமாகக் காணப்படுகின்றன. சாத்தனார் பூம்புகார் நகரத்தை 'பூங்கொடி' எனப் போற்றுகின்றார். போற்றுதற்குரிய எல்லைகளைக் கடந்தவள் புகாா்ப் பூங்கொடி; பன்மலர் பூத்த அகழிகள் அவளுக்குச் சிலம்படிகள்; மதில்கள் அவளுக்குத் தோள்கள்; கற்பகத்தரு நிற்கும் கோயிலும் வச்சிரக் கோட்டமும் அவளுக்கான மார்புகள்; சோழனது ஒப்பற்ற கோயில் அவளின் திருமுகம்; எனும் கற்பனைகளொடு பூம்புகாரைப் பாடுகிறார்.[58]

நிலவையும் கதிரையும் தோடுகளாகச் சூடியவள் பூம்புகார்ப் பூங்கொடி என வருணித்துள்ளார். சங்கப் புலவர்கள் நகரத்தினைப் பெண்களுக்கு உவமையாகக் கூறியுள்ளனர். இளங்கோவடிகளும் காவிரியையும், வையை ஆற்றினையும் பெண்களாகப் போற்றியுள்ளார். சாத்தனார் பூம்புகார் நகரத்தினைப் பெண்களுக்கு உவமையாகக் கூறாமல் பெண்ணாகவே பாவித்துப் 'பூம்புகார்ப் பூங்கொடி' என வர்ணித்துப் புதுமரபினை உண்டாக்கியுள்ளார். சிலப்பதிகாரத்தில் குறிப்பிடும் பூம்புகாரின் ஐந்து மன்றங்களில் 'பூதச்சதுக்கம்' பற்றிய குறிப்புகள் மட்டும் மணிமேகலையில் உண்டு.

**மடித்த செவ்வாய் வல்லெயிறு இலங்க**
**இடிகுரல் முழக்கத்து இடும்பை செய்திடும்**
**தொடுத்த பாசத்து தொல்பதி நரகரைப்**
**புடைத்துணும் பூதம்[59]**

**புலிகணத் தன்னோர் பூதசதுக்கத்து**
**கொடித்தேர் வேந்தன் கொற்றம் கொள்கென**
**இடிக்குரல் முழக்கத்து இடும்பலி ஓதை[60]**

எனவரும் அடிகளில் பூதச்சதுக்கம் பற்றியும் நரகரைப் புடைத்துண்ணும் பூதம் பற்றியும், வீரர்கள் பூதத்திற்குப் பலியிடும் ஓசைகள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன. பலநாட்டுக் கலைஞர்கள் வாழ்ந்த புகார்நகரத்தினை மணிமேகலை,

**மகத விளைஞரும், மராட்டக் கம்மரும்,**
**அவந்திக் கொல்லரும், யவனத் தச்சரும்,**
**தண் தமிழ் வினைஞர்—தம்மொடு கூடிக்**
**கொண்டு இனிது இயற்றிய, கண் கவர் செய்வினைப்**
**பவளத் திரள் கால், பல் மணிப் போதிகை**
**தவள நித்திலத் தாமம் தாழ்ந்த**
**கோணச் சந்தி மாண் வினை விதானத்து**
**தமனியம் வேய்ந்த வகைபெறு வனப்பின்,**
**பைஞ் சேறு மெழுகாப் பசும் பொன் மண்டபம்[61]**

தொல்பொருள் ஆய்வுத் துறையினர் புகார்ப் பகுதியில் நடத்திய ஆய்வுகளில் கிடைத்த பண்டை சோழர்கால நாணயங்கள், உரோமாபுரி நாணயங்கள், பெரிய செங்கற்கள், கிணறுகள், புத்தபாதம்விகாரம் ஆகிய யாவும் பண்டைய புகார்நகரின் பெருமையை உறுதிப்படுத்துகின்றன.

தொல்பொருள் ஆய்வுத்துறையினர் பூம்புகார்ப் பகுதிகளான மேலையூர், கீழையூர் மணிக்கிராமம், வானகிரி ஆகிய பகுதிகளில் ஆய்வினை நிகழ்த்தியுள்ளனர்.

மேலையூர் என்ற இடத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் பல்லவனீச்சுரம் என்ற கோயிலுக்கருகில் தோண்டிய குழியில் புத்தப் பள்ளி ஒன்று கிடைக்கப் பெற்றுள்ளது. புத்த விகாரம் ஒன்றும், புத்த படிவம் ஒன்றும், புத்த பாதமும், கருப்பு சிவப்பு நிறங்கள் கொண்ட மட்பாத்திரங்களும், யானை மற்றும் புலி உருவங்கள் பொறிக்கப்பட்ட சதுர வடிவிலான சங்க காலக் காசுகளும், அரிய கல்மணிகளும் பானை ஒடுகளும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

**“1927–ஆம் ஆண்டு காவேரிப்பூம்பட்டினத்தில் மேலையூர் என்ற பகுதியில், அதாவது இப்பொழுது புத்தவிஹாரம் கிடைத்துள்ள பகுதியில் போதிசத் வமைத்ரேயரின் செப்புத்திருமேனி ஒன்று பூமிக்கடியிலிருந்து கிடைத்துள்ளது. அது இப்பொழுது சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. மிகவும் எழில் வாய்ந்த இச்செப்புத்திருமேனி தங்கமுலாம் பூசப்பட்டு விளங்குகிறது. இது எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது.”**[62]

**“காவிரிப் பூம்பட்டினம் அகழாய்வுக் கண்டு பிடிப்புகளில் மிக முக்கியமானதாகக் கருதப்படுவது மேலையூரில் உள்ள பல்லவனீச்சுரம் எனும் கோயிலுக்கு அருகில் தோண்டிய குழியில் கிடைக்கப் பெற்ற புத்தப் பள்ளி ஆகும். இப்பள்ளியில் 8 சதுர அடி பரப்பளவு கொண்ட ஏழு அறைகள் இருந்தன இவை புத்தமதத் துறவிகள் தங்குவதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும்.**[63]

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களில் பூம்புகாரில் புத்தசமயம் சிறப்பாக இருந்ததை மேலையூரில் கிடைத்த புத்தபாதம், புத்த சிலை ஆகியவை உறுதி செய்கின்றன.

"கீழையூரில் மேற்கொண்ட ஆய்வின் மூலம், பெரிய செங்கற்களால் உருவாக்கப்பட்ட சுவர்களுடன் கூடிய கட்டடப் பகுதியும், படகுத்துறை ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

பூம்புகாரில் மணிக்கிராமம் என்னும் இடத்தின் அருகில் உள்ள கிழார்வெளி என்ற இடத்திலும் படகுத்துறை ஒன்று இருந்ததைத் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளிப்படுத்தியுள்ளது. மணிக்கிராமத்தில் பண்டையக் காலத்தில் மணிகள் செய்யும் தொழிற்கூடங்களும் அவற்றினை விற்பனை செய்யும் தெருக்களும் இருந்திருக்கக் கூடும்.

**வானகிரியில் நடைபெற்ற அகழாய்வில் எழுத்துப் பொறித்த பானை ஓடு கிடைத்துள்ளது. இவ்வெழுத்து பிராகிருத மொழியில் பிராமி எழுத்தில் எழுதப்பட்டுள்ளது. இவை மட்டுமன்றி அக்காலத்திலேயே தொழில் நுட்பத்திறனுடன் கட்டப்பட்ட கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த நீர்த்தேக்கம் ஒன்றும் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. மேலும் சுடுமண் பொம்மைகள், மான் கொம்பு, சதுரச் செப்புக் காசு, கல்மணிகள் போன்றவையும் கிடைத்துள்ளன".**[64]

**ஐவகை மன்றங்கள்**

இளங்கோவடிகள் பூம்புகாரில் ஐந்து மன்றங்கள் இருந்ததை விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். அவை வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம், பூத சதுக்கம், பாவை மன்றம் என்பவை ஆகும். வெள்ளிடை மன்றம், நெடுங்கல் மன்றம், பாவை மன்றம் எனும் மூன்றை பட்டினப்பாலை குறிப்பிடவில்லை. இலஞ்சி மன்றமும், பூதசதுக்கமும் பட்டினப்பாலையில் 'இருகாமத் திணையேரி' என்றும் முரண்களரி' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. மணிமேகலையில் இம்மன்றங்களைப்

பற்றிக் கூறாமல் ஐந்து வகை வனங்களைப் பற்றி மட்டுமே கூறுகின்றது. மணிமேகலை காலத்தில் ஒருவேளை இம்மன்றங்கள் கடல்கோள் போன்ற காரணங்களால் அழிந்திருக்க வாய்ப்புண்டு.

இன்றையகாலகட்டத்தில் நெடுங்கல் மன்றம், சிலப்பதிகாரக் கலைக்கூடம், மாதவியின் நெடியகற்சிலை, கலைக்கூடச் சுற்றுச்சுவற்றில் கண்ணகியின் வரலாற்று நிகழ்ச்சிகள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

கோவில்கள் :

சோழர்களின் ஆட்சிக் காலத்தில் பூம்புகாரில் பல ஆலயங்கள் தோற்றுவிக்கப்பட்டன. சிவன், முருகன், திருமால், பலதேவன் இவர்களுக்கும் வெள்ளையானை, வச்சிரப்படை, ஞாயிறு, திங்கள், முருகனின்வேல் இவற்றிற்கும் வர்த்தமானர் புத்தர், கிராம தேவதை, வீரர் போன்றோர்க்கும் கோயில்கள் பல இருந்தன. செங்கல், மண், மரம், உலோகம் இவற்றினால் ஆலயங்கள் உருவாக்கப்பட்டிருந்தன.

இந்திர விழாவின் போது பூம்புகார் மக்கள் வச்சிரக் கோட்டத்திலிருந்த யானை மீது முரசினை ஏற்றி ஐராவதக் கோட்டத்திற்கு எடுத்துச் செல்வர். கற்பகத்தருக் கோட்டத்தில் கொடி ஏற்றம் செய்து இந்திர விழாவினைத் தொடங்குவர்; காவிரி நன்னீரால் இந்திரனை நீராட்டுவர்; இந்நிலையில் பூம்புகாரில் உள்ள பல்வேறு கோயில்களிலும் விழாக்கள் நடக்கும். விழாக்கள் மூலம் பூம்புகார் மக்களின் சமய ஆன்மீகப் பண்பாடு வெளிப்படும்.

**பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்**
**ஆறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்**
**வால்வளை மேனி வாலியோன் கோயிலும்**
**நீலமேனி நெடியோன் கோயிலும்**
**மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்**
**மாமுது முதல்வன் வாய்மையின் விழாஅ**

நான்மறை மரபின் தீ முறை ஒருபால்
நால்வகைத் தேவரும் மூவறு கணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறு வேறு கடவுளர் சாறு சிறந்தொரு பால்.[65]

என இளங்கோ பூம்புகார் நகரக் கோயில்களைக் கூறிச் சென்றுள்ளார்.

அமரர் தருக்கோட்டம் வெள்யானைக் கோட்டம்
புகர் வெள்ளை நாகர்தம் கோட்டம் பகல்வாயில்
உச்சிக்கிழான் கோட்டம் ஊர்க்கோட்டம் வேல்கோட்டம்
வச்சிரக்கோட்டம் புறம்பணையான் வாழ்கோட்டம்
நிக்கந்தக் கோட்டம் நிலாக்கோட்டம்[66]

என்றும் இளங்கோ பூம்புகார்நகரக் கோட்டங்களைக் குறிப்பிட்டுள்ளார்.

சம்பாபதிக் கோயில், சக்கரவாளக் கோட்டம், கற்பகத்தரு நிற்கும் கோயில், தீவதிலகைக் கோயில், வச்சிரக் கோட்டம், பூதசதுக்கம், புத்த பீடிகைக் கோயில், மணிமேகலா தெய்வக் கோயில், பிறவா யாக்கைப் பெரியோன் கோயில், பல்வேறு சதுக்கத்துத் தெய்வக்கோயில்கள் என பூம்புகார் நகரக் கோயில்களை மணிமேகலை குறிப்பிடுகின்றது.

பூம்புகார் நகரினை அடுத்து பழமைமிக்க கோயில்கள் பல உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது பல்லவனீச்சுரம் என்பதாகும். புகார் நகரிலிருந்து நான்கு கி.மீ. தொலைவில் திருவெண்காடு என்ற இடம் உள்ளது. அங்கு புகழ்பெற்ற சிவாலயம் ஒன்று உள்ளது.

பூம்புகாரைச் சுற்றி

பூம்புகாரிலிருந்து பதினான்கு கிலோமீட்டர் தொலைவில் தரங்கம்பாடி உள்ளது. இங்கு டென்மார்க் நாட்டினரின் நினைவுச் சின்னங்கள் சில உள்ளன. எட்டாவது கிறிஸ்தியன் என்ற டென்மார்க் மன்னரால் தரங்கம்பாடிக் கோட்டை ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு விற்கப்பட்டது.

பூம்புகாரிலிருந்து இருபது கிலோ மீட்டர். தொலைவில் மயிலாடுதுறை என்ற மாயூரம் உள்ளது. இங்குச் சிவனின் புகழ்மிக்க ஆலயம் ஒன்று உள்ளது. பார்வதி தேவி மயிலாக இத்தலத்திற்கு வந்து சிவனை வழிபட்டதால் திருமயிலாடுதுறை எனப்பெயர் பெற்றது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் போன்றோரால் பாடப்பட்ட தலமாகும்.

திருமயிலாடுதுறையிலிருந்து ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் தருமபுரம் உள்ளது. இங்குத் தருமை ஆதினம் அமைந்து உள்ளது. சைவத்திற்கும் தமிழுக்கும் தொண்டாற்றியுள்ள இம்மடம் ஏராளமான நூல்களை வெளியிட்டுள்ளது.

திருமயிலாடுதுறையிலிருந்து பதின்மூன்று கிலோ மீட்டர் தொலைவில் திருவாடுதுறை உள்ளது. இங்கு திருவாடுதுறை மடம் உள்ளது. சைவசமயத்திற்குத் தொண்டாற்றிய சிவஞான முனிவர் இம் மடத்தைச் சார்ந்தவர் ஆவார். உ.வே. சாமிநாத ஐயரும். இம்மடத்தைச் சேர்ந்தவர் இங்குள்ள திருவாடுதுறையிலுள்ள மாசிலாமணீசுவரர்கோயில் புகழ் பெற்றது. மாயூரம் அருகே உள்ள தேரழுந்தூர் கம்பர் பிறந்த சிறப்புடைய ஊராகும்

**பூம்புகார் இன்றைய நிலை**

சங்ககால முடிவு வரை பண்டைய சோழரின் தலைநகராகவும், துறைமுகமாகவும் விளங்கிய புகார்நகரம் கடல்கோள் காரணமாகப் பிற்காலத்தில் சிறப்பிழந்திருக்கலாம்.

**"வாணிகப் புகழ்பெற்றிருந்த காவிரிப்பூம்பட்டினம், கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புயல் காற்றடித்து வெள்ளப் பெருக்கெடுத்து நீரில் முழ்கிவிட்டதை மணிமேகலை குறிப்பிடுகிறது. ஆனால் இப்பட்டினம் நெடுங்காலம் பேர் பெற்றிருந்தது. பிற்காலச் சோழர் காலத்திலும் காவிரிப்பூம்பட்டினம் பேர்பெற்றிருந்தது. பிறகு இப்பட்டினம் சிறப்புக் குன்றிச் சிறிது சிறிதாகப் பெருமை குறைந்து இப்பொழுது குக்கிராமமாக இருக்கிறது."**[67]

என்று பூம்புகார் கடல்கோளுக்குப் பின்னரும் சிறப்புப் பெற்றுத் திகழ்ந்ததை மயிலை சீனி. வேங்கடசாமி குறிப்பிட்டுள்ளார்.

பூம்புகாரின் வரலாற்றுப் பின்னணிகளின் மூலம் பூம்புகார் நகரமைப்பு, வளர்ச்சி நிலை, சமுதாயநிலை, மக்கள் வாழ்வு பற்றிய செய்திகள் தெளிவாகின்றன.

பத்துப் பாட்டில் காணப்பெற்ற பூம்புகாரின் நிலை, இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரம் மணிமேகலைக் காலங்களில் வளர்ச்சி பெற்றுச் செழுமையடைந்த நகராகக் காட்சியளிக்கின்றது. சிலம்பில் பூம்புகாரின் உச்சநிலை வளர்ச்சியையும் மணிமேகலையில் பூம்புகாரின் அழிவினையும் அறியலாம்.

மணிமேகலைக் காலத்தில் பூம்புகார் கடல் கொள்ளப்பட்ட பிறகு பூம்புகாரின் பண்பாட்டு மையம் முக்கியத்துவம் இழந்துவிட்டது. தமிழக அரசியல் சூழல்களால் வஞ்சியும் காஞ்சியும் முக்கியத்துவம் பெற்றன.

**"சென்ற மூவாயிரம் ஆண்டுகளில் கடற்கரையோர அமைப்பில் பல புவியியல் மாறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. புகழ் பெற்ற பண்டைய துறைமுகங்கள் சில பிற்காலத்தில் அழிந்து போயின. சில தம் சிறப்பில் குன்றிவிட்டன. பண்டைய துறைமுகங்களான காயலும், கொற்கையும் இப்போது மணல் மேடிட்டுக்கிடக்கின்றன. கடல் விலகிச் சென்று விட்டது. பூம்புகார் கடலில் மூழ்கி விட்டது. மாபெரும் நகரம் செழித்தோங்கியிருந்த அந்த இடத்தில் மீனவர்கள் குப்பங்களே எஞ்சியுள்ளன."**[68] என்று பூம்புகாரின் அழிவைப்பற்றி வரலாற்று அறிஞர் கே.கே. பிள்ளை அவர்கள் விளக்கியுள்ளார்.

உலக வாணிக நகராகச் சிறந்து விளங்கிய பூம்புகார் நாகரிகப் பரவலுக்குக் களமாகவும், பண்பாட்டு மையமாகவும் விளங்கியுள்ளது. சங்க இலக்கியங்களும், காப்பியங்களும், தேவாரம், திருத்தொண்டர் புராணம் முதலிய இலக்கியங்களிலும், புத்த ஜாதகக் கதைகள், புத்தவம்சக்கதா, அபிதம்மாவதாரம் போன்ற பௌத்தம் பற்றிய பிராகிருத நூல்களிலும், தாலமி பிளினி போன்ற வெளிநாட்டவர் குறிப்புகளிலிருந்தும், பார்குத் கல்வெட்டு, சாய்க்காடு, பல்லவனீசரம், திருவெண்காடு முதலான கோயில்களின் கல்வெட்டுகள் ஆகியவற்றிலும் பூம்புகார் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

## பாண்டிய நாட்டுத் துறைமுகப்பட்டினம்

தென்பாண்டி நாட்டின் புகழ்பெற்ற தொன்மையான துறைமுகப்பட்டினம் கொற்கை ஆகும். மக்களின் நாகரிகம் ஆற்றங்கரைகளிலே வளர்ந்தது என்பது அறிஞர்களின் ஒப்பமைந்த முடிவாகும்.

எகிப்து நாகரிகம் நைல் ஆற்றங்கரையிலும், பாபிலோன் நாகரிகம் தைக்கிரீசு ஆற்றங்கரையிலும் மலர்ந்தன. சேரர் நாகரிகம் ஆன்பொருநை அரபிக் கடலில் கலக்கும் இடத்திலுள்ள முசிறியிலும், சோழர் நாகரிகம் காவிரி கடலில் கலக்கும் இடத்திலுள்ள பூம்புகாரிலும் பழங்காலப் பாண்டியர் நாகரிகம் தண்பொருநை கடலில் கலக்கும் இடத்திலுள்ள கொற்கையிலும், பிற்காலப் பாண்டியர்களின் நாகரிகம் வைகை ஆற்றங்கரையிலுள்ள மதுரையிலும் வளர்ச்சியடைந்தன.

தண்பொருநையின் சிறப்பும் கொற்கையின் புகழும் நெருக்கமுடையதாகும். கொற்கை தலைநகராகவும் துறைமுகப் பட்டினமாகவும் சிறப்புற்றுப் பெரியபட்டினமாக விளங்கியது. பூம்புகாரில் உள்ளதைப் போன்றே கொற்கையிலும் யவனச்சேரி, வெள்ளையன் இருக்கை முதலியனவும் மாளிகைகளும் கோயில்களும் அமைந்திருந்தன. துறைமுகமும் கலங்கரை விளக்கமும் மிகவும் சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தன.

கொற்கையின் கோட்டை வாயில் பொற்றகடுகளாலும், முத்துகள் மணிகள் முதலியவற்றாலும் பதிக்கப் பெற்றுக் கவினுற விளங்கின. கொற்கையில் வாணிகத்தின் பொருட்டு யவனர்களும் அரேபியர்களும் தங்கிய இடமே இன்று காயல்பட்டினம் என்றழைக்கப்படுகிறது. கொற்கைத் துறைமுகம் முத்து, சங்கு குளிக்கும் இடமாய்த் திகழ்ந்துள்ளது. அங்குச் சங்கறுக்கும் தொழில் சிறப்புடன் நடைபெற்றுள்ளது என்பதை அகழாய்வு முடிவுகள் விளக்குகின்றன.

“பழைய பாபிலோன் நகரம் போல் கொற்கைப் பட்டினத்தில் கோட்டை வாயிற்கதவு பொன்னால் செய்யப்பெற்று முத்துக்களும் மணிகளும் பதிக்கப் பெற்று எழிலுற விளங்கியது.

கொற்கை மாநகரின் செல்வம் அளவிடற்கரியதாய் இருந்தது கொற்கை மாநகர மக்கள் உச்சி முதல் பாதம் வரை பொன்னாலும் மணியாலும் அணிகலன்கள் செய்து பூண்டிருந்தனர். அவர்கள் வீடுகளைப் பொற்குடங்களும் பொற்சொம்புகளும், பொன் வட்டில்களும் அணி செய்தன.

தில்லி சுல்தானின் தளபதிசேய்க் கமாலுதீன் என்ற முஸ்லீம் கொள்ளைக்காரன் கி.பி. 1293 ஆம் ஆண்டில் பாண்டிய நாட்டில் கொள்ளையடித்து செல்வங்களை டில்லிக்கு அனுப்பினான்.

**கி.பி. 1310 ஆம் ஆண்டில் மாலிக்கபூர் என்பான், மதுரையில் சுந்தரபாண்டியன் அரண்மனையிலிருந்தும் காயலிலிருந்தும், கொற்கையிலிருந்தம் சூறையாடப்பட்ட பொருட்களின் மதிப்பு 10 கோடி பவுன்கள் என்று மதிப்பிடப்பட்டது. இவை பொன்காசுகளாகவும், பொற்கட்டிகளாகவும் மணிகள் பதித்த அணிகளாகவும் இருந்தன. இவைகள் யானைகள் மீதும் குதிரைகள் மீதும் ஏற்றப்பட்டு தில்லி சுல்தான் அரண்மனைக்கு அனுப்பப்பட்டன."[69]**

தமிழ்நாட்டின் கீழைக் கடற்கரைப் பகுதியில் மிகவும் சிறந்து விளங்கிய கொற்கைத் துறைமுகப்பட்டினம் தமிழ்நாட்டின் வருவாயை அதிகப்படுத்தி நாட்டின் பொருளாதார நிலையை உயர்த்துவதில் பெரும்பங்கு வகித்துள்ளது. இக்கருத்தினை இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரமும் மணிமேகலையும் குறிப்பிட்டுள்ளன. பாண்டிய அரசின் பொருளாதார முதன்மைக்கும், கடல் வாணிகத்திற்கும், மதிப்பு வாய்ந்த முத்துக்கும் சிறந்த துறைமுகப்பட்டினமாகக் கொற்கை விளங்கியது.

**"கருங்கடலின் கரையிற் கட்டப்பட்ட வாணிகச் சிறப்பு மிக்க நகரங்கள் பாண்டியனது துறைமுகமாகிய கொற்கையை நினைவிற் கொள்ளும் வண்ணம் கோல்சிசு** (Colchis) **கோல்சாசு** (Colchas) **கொல்சிசு என்றெல்லாம் பலவாறாக அழைக்கப்பட்டு வந்தன. கொற்கை நீண்ட காலமாக இந்தியாவின் எல்லாச் செல்வங்கட்கும் களஞ்சியமாகவும் இந்தியாவிலிருந்து பொருள்களை ஏற்றுமதி செய்யவும், வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவும் பயன்படும் வணிகப் பண்டகசாலையாகவும் விளங்கியது."[70]**

"திருநெல்வேலி அரசியல் பொதுவரலாறு" "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" போன்ற நூல்களை எழுதிய கால்டுவெல் கொற்கையில் அகழாய்வு செய்ததில் மணற் பாறையும் சங்குகளும் சிப்பிகளும் இருந்ததைக் கண்டுபிடித்தார். மணற்பாறையின் பரப்பே முற்காலத்தில் கடற்கரையாக இருந்திருக்கலாம் என்று குறிப்பிட்டுள்ளார்.

இக்கொற்கைத் துறைமுகம் தாமிரபரணி ஆற்றின் முகத்துவாரத்தில் சங்ககாலப் பாண்டியர்களின் இயற்கைத் துறைமுகமாக கொற்கை புகழுடன் விளங்கியது. கொற்கை என்பதற்குப் படை அல்லது படைவீடு என்று கால்டுவெல் பொருள் கொள்கின்றார்.[71]

"சங்க கால முடிமன்னரின் தலை நகரங்களில் பாண்டியன் தலைநகரே மிகவும் தொன்மையானதாகும். இந்த நகரம் இடைச் சங்க காலத்துக்குரியதாகத் தமிழகத்தின் தென் கிழக்குக் கடற்கரையில் இருந்ததாகக் கருதப்படுகிறது. இதுவே பாண்டியரின் துறைமுகமாகவும் இருந்தது. இதை வால்மீகி இராமாயணம் 'பாண்டியகவாடகம்' என்று அழைத்துள்ளது."[72]

இத்தாலிய நாட்டு வணிகர் மார்க்கோபோலோ பழைய காயல் என்னும் பாண்டி நாட்டுத் துறைமுகத்தில் கப்பல் ஏறினார் என்பதை அவரது நாட்குறிப்பில் குறிப்பிட்டுள்ளார். பெரிப்புளுசு நூலாசிரியரும் வானநூல் வல்லுநருமான தாலமி என்பவர் கொற்கையை, கொற்கையான் ஆண்ட கோநகர் என்றும் பழம்பெரும்பட்டினம் என்றும் சிறப்பித்துள்ளார். அவர் வரைந்த படங்களில் கொற்கையும் இடம் பெற்றிருக்கிறது. கொற்கை ஒரு மாபெரும் வணிகத்துறை என்றும் சிறந்த துறைமுகப் பட்டினம் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

**சங்க இலக்கியங்களில் கொற்கை,**

சங்க இலக்கியங்களில் கொற்கை சிறப்புடன் போற்றப் பெற்றுள்ளது. கொற்கை தொடர்பான செய்திகள் நற்றிணை, ஐங்குறுநூறு, அகநானூறு, சிறுபாணாற்றுப்படை, மதுரைக் காஞ்சி, முல்லைப் பாட்டு போன்ற இலக்கியங்களிலும், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காப்பியங்களிலும் வந்துள்ளன.

**நற்றிணையில்,**

கொற்கை பழம்பெரும் பாண்டிய மன்னர்களின் துறைமுகப்பட்டினம் கொற்கைத் துறைமுகத்தில் ஆழ்கடலில் உயர்ந்த நன்முத்துக்கள் விளைந்ததை

**முத்துப் படு பரப்பிற் கொற்கை முன்றுறை**[73]

என்று இடம் பெற்றுள்ளது.

**ஐங்குறுநூற்றில்,**

**கொற்கை முன்துறை இலங்கு முத்து உரைக்கும்**[74]

என்றும்,

**இருங்கழிச் சேயிறா இனப்புள் ளாரும்**
**கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை**[75]

என்றும் கொற்கையைக் குறிக்கிறது.

**அகநானூற்றில்,**

**மறப்போர் பாண்டியர் அறத்தின் காக்கும்**
**கொற்கையம் பெருந்துறை முத்து,**[76]

**புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்றுரை**
**அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து**[77]

முத்துக் குளித்துக் கடற்பொருட்களைக் கொணரும் பரதவர்களை எதிர்பார்த்துச் சுற்றத்தார்கள் கடற்கரையில் காத்திருப்பார்கள். பரதவர்கள் கரையை அடைந்ததும் மகிழ்ச்சி பொங்கக் கூக்குரலிட்டு வரவேற்று ஆரவாரம் செய்வார்கள்.

இதனை,

இலங்கிடும் பரப்பின் எறிசுறா நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்
ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்
கலி கெழு கொற்கை[78]

என்ற பாடல் படம்பிடித்துக் காட்டியுள்ளது.

**பத்துப்பாட்டில்**

சிறுபாணாற்றுப்படை கொற்கைத் துறைமுகத்தின் சிறப்பினை மிகஅழகாக விளக்கியுள்ளது.

நோன் பகட்டுமணர் ஒழுகையொடு வந்த
மகாஅர் அன்ன மந்தி மடவோர்
நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்
வாள்வாய் எருந்தின் வயிற்றகத் தடக்கித்
தோள்புற மறைக்கும் நல்கூர் நுசுப்பின்
உளரியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற
கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலியாடும்
தத்து நீர் வரைப்பின் கொற்கை[79]

உப்புவணிகர் கொற்கையில் மண்டிக்கிடக்கும் உப்பை விற்றுத் திரும்பி வரும்வழியில் ஒரு குரங்குக் குட்டியையும் பிடித்து வந்தனர். அக்குரங்கு அவ்வணிகர்களுடைய குழந்தைகளோடு விளையாடி மகிழ்ந்தது. அக்குழந்தைகளோடு சேர்ந்து கொற்கைக் கடற்கரையில் கிடக்கும் கிளிஞ்சல்களை வைத்து விளையாடியது.

மதுரைக் காஞ்சி என்னும் நூல், மதுரையை மட்டுமன்றிக் கொற்கையின் சிறப்பினையும் விளக்கிக் காட்டுகிறது.

பேருவந்து மேஎந் தோன்றிச்

சீருடை விழுச்சிறப்பின்

விளைந்த முதிர்ந்த விழுமுத்தின்

இலங்குவளை இருஞ் சேரிக்

கட்கொண்டிக் குடிப்பாக்கத்து

நற் கொற்கை[80]

இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கொற்கையைச் சிறப்பித்துள்ளன.

தண்செங் கழுநீர்த் தாதுவிரி பிணையல்

கொற்கை யம் பெருந்துறை முத்தொடு பூண்டு[81]

வாயிலோன், வாழி யெம் கொற்கை வேந்தே[82]

கொற்கைக் கொண்கன் குமரித்துறைவன்[83]

என்றும் கொற்கையின் சிறப்பைப் பாடியுள்ளனர்.

கொற்கைத் துறைமுகம் என்றாலே பாண்டியர்களைப் பற்றிய நினைவு தோன்றும் வண்ணம் அந்தத் துறைமுகத்தின் சிறப்பினைப் புலவர்கள் எடுத்தியம்பியுள்ளனர். "கொற்கையம் பேரூர்', 'கொற்கை முன்றுறை 'நற்கொற்கையோர் நசைப் பொருநன்', "கொற்கைக் கோமான்", "கல்லெனக் கலிகெழு கொற்கை" "கொற்கையம் பெருந்துறை முத்து", "கொற்கைப் பொருநன்", "முத்துப்படு பரப்பிற் கொற்கை", "பேரிசைக் கொற்கைப் பொருநன்", எனப் பல தொடர்களில் கொற்கையைப் புலவர்கள் சிற்ப்பித்துள்னர்.

## அகழாய்வு

கொற்கையில் முதன்முதலில் வரலாற்றுச் சிறப்புகளை வெளிப்படுத்திய பெருமை இராபர்ட் கால்டுவெல் என்பவரையே சாரும். அவர் கொற்கை ஆய்வின் போது அங்கு முதுமக்கள் தாழி இருந்ததைக் கண்டு பிடித்துள்ளார்.

1888–ஆம் ஆண்டில் கொற்கை சென்று, அங்குக் கிடைத்த பழங்காசுகளைச் சேரித்துத் திருநெல்வேலி காசுகள் என்னும் நூலை எழுதினார். 1968–1969–ஆம் ஆண்டுகளில் தமிழக அரசின் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் ஆய்வு நடத்தினர். ஆய்வில் அங்கு உப்பளங்கழிகள் இருந்ததற்கான அறிகுறிகள் உள்ளதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

பண்டைய தமிழ் எழுத்துகள் பொறிக்கப்பட்ட ஓடுகள், யவனநாட்டுப் பீங்கான் கோப்பைகள், மண்ணால் செய்யப்பட்ட பொம்மைகள், மணிகள், வளைகள், மோதிரங்கள் செய்வதற்கு அறுக்கப்பட்ட சங்குகளில் எஞ்சிய துண்டுகள் முத்துச் சிப்பிகள், பழங்காசுகள், முத்துக்களைத் தரம் பிரிக்கும் கற்கள் போன்ற பல பொருள்கள் கிடைத்துள்ளன. 1970ஆம் ஆண்டு வெளியிட்ட தமிழகம் என்னும் இதழ்,

**“அகழாய்வின் போது ஏராளமான அளவிற்கு முத்துச் சிப்பிகள் கண்டு பிடிக்கப்பட்டதைக் கொண்டு, கொற்கை முத்துக்குளிப்பதற்கு ஒரு சிறந்த இடமாக இருந்தது என்பது உறுதிப்படுகிறது.**[84] என்பதை குறிப்பிட்டுள்ளது.

கொற்கையின் சிறப்பினையும், காயலின் தோற்றத்தினையும் கால்டுவெல் அவர்கள் திருநெல்வேலி மாவட்ட வரலாறு என்றும் நூலில் விவரித்துள்ளார்.

நெல்லை மாவட்டத்தில் உள்ள நாங்குநேரி வட்டத்தில் உள்ள திருக்குறுங்குடியில் உள்ள கல்வெட்டில் கொற்கைக்குச் செல்லும் வழிகள் இருந்தன என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கொற்கை குடநாட்டுப் பிரிவிற்குள் அடங்கி இருந்தது என்று அக்கல்வெட்டு எடுத்துக் காட்டுகிறது.

திருச்செந்தூர் கல்வெட்டு ஒன்று, குடநாட்டுக்கொற்கை என்று குறிப்பிடுகிறது. இஃதன்றி பல கல்வெட்டுகளில் கொற்கை இடம் பெற்றுள்ளது. இவைகளில் கொற்கை மதுராந்தக நல்லூர், மதுரோதய நல்லூர், மதிவரோதய நல்லூர் என்று பெயர் பெற்றுள்ளது.

## கொற்கையின் சுற்றுப்புறங்கள்

இன்றுள்ள கொற்கைச் சிற்றூரின் மேல்பகுதியில் அக்கசாலை ஈஸ்வரம் உள்ளது. கொற்கையின் நாணயங்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகள் அவ்வாறு நாணயங்கள் தயாரிக்கும் தெருவிற்கு அஃகசாலைத் தெரு என்று பெயர் சூட்டினர்.

**"அஃகசாலை எனப் பெயர் கொண்ட சிற்றூர் ஒன்றும் கொற்கைக்கு அருகில் உள்ளது. ஜேம்ஸ் ஆர்னல்** (James Hornell) **என்ற அறிஞர் அக்கசாலை என்ற இடத்தைத் தோண்டிப் பல்வேறு நாட்டு நாணயங்களைக் கண்டறிந்துள்ளனர்."**[85]

## வெற்றிவேல் அம்மன் கோயில்

அஃகசாலை ஈஸ்வரத்திற்கு நேர்க்கிழக்கில் கோயில் ஒன்று உள்ளது. அக்கோயிலுக்கு செழியன் நங்கையெனும் வெற்றிவேல் அம்மன் கோயில் எனப்பெயரிடப்பட்டது.

## கொற்கை இன்றைய நிலை

பாண்டியர்கள் காலத்தே சிறப்புற்றிருந்த கொற்கை சிற்றூராக இன்று காட்சியளிக்கின்றது. கொற்கையின் பெருமையை வரலாறுகளும், சங்கநூல்களும் எடுத்துக்காட்டுகின்றன. காயல் துறைமுகமானதால் கொற்கையின் மதிப்பு நாளடைவில் குறைந்தது.

கொற்கையில் இருந்த சுங்கச்சாவடி காயலுக்கு மாற்றப்பட்டது. கலங்கரை விளக்கமும் மாற்றப்பட்டது. மீன் பிடித்தொழிலும், சங்குகுளிக்கும் தொழிலும் காயல் பட்டினத்திற்கு மாற்றப்பட்டன.

கொற்கைப்பட்டினம் சீர்குறைந்து போனாலும் நிலவளமும், நீர்வளமும் சிறப்பாக இருப்பதால் இன்று அழகிய சிற்றூராய்க் காட்சியளிக்கிறது.

## காயல் துறைமுகம்

தூத்துக்குடி, திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் பழைய காயல் என்ற பெயரிலே இன்று அழைக்கப்படும் சிற்றூர், சங்க காலத்தில் கொற்கைக்கு அடுத்தாக சிறந்த துறைமுகமாக விளங்கியுள்ளது.

பழைய காயலில் பெண்களும் குழந்தைகளும் பாடிவரும் நாட்டுப் பாடல்களும் காயலின் பெருமையை விளக்குவன.

**கோவில்கள்**

பழைய காயலில் தூய தோமையார் கரையேறியதற்கு நினைவாக ஒரு சிறு கோயில் புன்னைகக் காயலுக்கு வடபுறம் உள்ளது. காயலில் பல சமணச் சிலைகள் உள்ளன.

சங்குமகேசுவரரர் கோயிலும் திருமால்கோயிலும் காயலில் உள்ளன. பல கோயில்கள் அழிவுற்ற நிலையில் உள்ளன.

காயலில் பாண்டியர், சோழர், சேரர், பல்லவர், தெலுங்கர், கன்னடர், சீனர், பர்மியர், அராபியர், கிரேக்கர், உரோமர் போன்ற பல நாட்டவர்களின் காசுகளும் கோப்பைகளும் சாடிகளும் பிறபொருள்களும் கிடைத்துள்ளன.

அரேபியா, சீனா முதலிய நாடுகளிலிருந்து காயலுக்கு இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள், பழங்காசுகள் முதலியவற்றைக் கால்டுவெல் கண்டுபிடித்தார். காயல் அரண்மனையின் அடித்தளங்கள், உறை கிணறுகள், கட்டபொம்மன் கட்டிய நகராமண்டபம், முதலிய பழஞ்சின்னங்களை இன்றும் காணலாம்.

**“முன்பு கடற்கரையில் இருந்த இந்நகரம் இப்போது ஐந்துகல் தொலைவில் உள்வாங்கி உள்ளது. கடல் கொற்கையிலிருந்து பின்வாங்கிய பிறகு கடற்கரையில் காயல் என்ற ஒரு புதிய வாணிகக்களம் உண்டாயிற்று. இதுவே பன்னிரண்டாம் நூற்றாண்டில் மார்க்கபோலோ வருகை தந்தபோது, வளமான கடல்துறைமுகமாய் இருந்தது. சில நாட்களில் காயலும் கடலிலிருந்து மிகு தொலைவாகி விட்டது என்றும் வி. கனகசபை கூறுகின்றார்.”[86]**

**சங்ககால வாணிகம்**

சங்க காலத்தில் வாணிகம் தரை வழியாகவும் கடல் வழியாகவும் நடந்தது. கடல் வழியாக நடந்த வாணிகம் தரை வழி வாணிகத்தைவிட சிறப்பாக நடந்தது.

இக்காலத்தில் இருக்கும் வசதிகள் போல் அக்காலத்தில் இல்லாத சூழ்நிலைகளிலும், தரை வாணிகமும் கடல் வாணிகமும் சிறப்பாக நடந்தன. தமிழ்நாட்டு வாணிகர்கள் அயல்நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்தார்கள். சங்க காலத்தில் இடம், பொருள், ஏவல்களுக்கும், சூழ்நிலைகளுக்கும் ஏற்றவாறு வாணிகம் செய்தார்கள் தரை வாணிகஞ் செய்த வாணிகத் தலைவர் மாசாத்துவர் என்று பெயர் பெற்றனர். கடல் வாணிகத் தலைவர் மாநாய்கன் என்று அழைக்கப்பட்டனர்.

**வாணிகம்**

**"வாணிகம் பொருளாதாரத்தின் உயிர்நாடியாகும். ஒரு நாட்டின் ஜனநாயகம் கவிழ்ந்து சர்வாதிகாரம் வந்தாலும், ஒருகட்சி மாறி வேறுகட்சி பதவிக்கு வந்தாலும், நாட்டின் சமூக மத கலாச்சார நிலைகளில் மாறுதல்கள் ஏற்படாமலும், வாணிகம் என்றும் போல் நடைபெற்று வந்தால் தான் நாட்டின் பொருளாதாரம் சீர்குலையாமல் இருக்கமுடியும்."**[87]

நாட்டு மக்களின் நல்வாழ்விற்கும் நாகரிக வாழ்க்கைக்கும் வாணிகம் முக்கிய காரணமாக இருந்தது. சங்க காலத்தில் அரசர்கள் வணிகர்களுக்கு ஊக்கமளித்து வாணிகத்தை வளர்த்தார்கள். தங்களுடைய நாடுகளில் வாணிகக் கப்பல்கள் வந்து போவதற்கும், ஏற்றுமதி இறக்குமதி செய்வதற்கும் துறைமுகப்பட்டினங்களை அமைத்தார்கள். இரவு நேரங்களில் கப்பல்களுக்கு வழிகாட்டுவதற்குக் கலங்கரை விளக்கங்களை அமைத்தனர். துறைமுகங்களில் உள்ள வாணிகப் பொருள்கள் களவு போகாமல் இருக்கக் காவல் வைத்துப் பாதுகாத்தனர். தரை வாணிகமும் கடல் வாணிகம் பெருகிப் பொருளாதாரம் உயர்ந்து நல்ல வாழ்க்கையைச் சங்க மக்கள் வாழ்ந்தனர். மன்னர்களுக்கு அடுத்த நிலையில் மதிக்கத்தக்க வகையில் வாணிகர்கள் சிறப்பிக்கப்பட்டனர்.

கடல்வழியாக வாணிகம் செய்து நாட்டின் வருவாயைப் பெருக்குவது சிறப்புடைய செயலாகவும் தொழிலாகவும் கருதப்பட்டது. அவ்வாறு அயல்நாடுகளுக்கு வாணிகத்தின் பொருட்டுச் செல்லும்போது பெண்டிரை உடன் அழைத்துச் செல்லும் வழக்கம் அக்காலத் தமிழர்களிடம் காணப்படவில்லை.

சங்க காலத்தில் பண்டமாற்று முறை பெரிதும் வழக்கில் இருந்தது. வாழ்க்கையின் அன்றாடத் தேவைகளான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலான பொருள்களைப் பண்டமாற்றம் செய்து கொண்டனர். பண்டமாற்றம் என்பது ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக இன்னொரு பொருளை வாங்கிக் கொள்வதாகும். பெரிய பட்டினங்களிலும் நகரங்களிலும் காசு கொடுத்து வாங்கும் முறை இருந்த போதிலும் ஊர்களிலும் கிராமத்திலும் பண்டமாற்று முறையே வழக்கில் இருந்தன. ஊர்தோறும் நிலவிய வாரச் சந்தைகள் மக்களுக்குப் பண்டங்கள் விற்கவும் வாங்கவும் பெரிதும் வசதியாய் இருந்தன. உமணர் உப்பைக் கொடுத்து நெல்லைப் பெற்றனர். இடையர் தயிரும் மோரும் கொடுத்தும், வேட்டுவர் மான் தசையைக் கொடுத்தும் நெல்லைப் பெற்றனர். இதனைப் புறப்பாடல் (77) விளக்குகிறது. பொருநர் ஆற்றுப்படை, குறவர் தேனும், கிழங்கும் கொடுத்து மீனும் கள்ளும் பெற்றதைக் குறிப்பிட்டுள்ளது. மிகவும் விலையுயர்ந்த பொருட்கள், எல்லா இடங்களிலும் வாணிகத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. பண்டமாற்று நடைபெற்ற அக்காலத்தில் காசுகளும் பயன்படுத்தப்பட்டன. செம்பு, வெள்ளி, பொன்காசுகள் போன்ற காசுகள் விலையுயர்ந்த பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்தப்பட்டன. வாணிகர்கள் கால்நடைகளையும் வண்டிகளையும் பயன்படுத்தினர். எருது, கழுதை, வண்டி, படகு, பாய்க்கப்பல்கள் போன்றவற்றை வாணிகத்திற்குப் பயன்படுத்தினர்.

மதுரைக்காஞ்சி, அகநானூறு, குறுந்தொகை போன்ற சங்க நூல்கள் வணிகர்கள் எவ்வாறு அழைக்கப்பட்டனர் என்பதைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளன.

**கலிங்கம் பகர்நர்**[88]

**என்று ஆடைகளை விற்பவர்களையும்**

**இருங்கழிச் செறுவின் வெள்ளுப்புபகர்நர்**[89]

**என்று உப்புவிற்பவர்களையும்**

**பகர் விரவு நெல்**[90]

**என்று நெல் விற்பவர்களையும்**

**கூலம் பகர்நர்[91]**

**என்று தாணியம் விற்பவர்களையும்**

**வளைபடு முத்தும் பரதவர் பகரும்[92]**

**என்று முத்துவிற்பவர்களையும்**

அவர்கள் விற்கும் பொருள்களைக் கொண்டு சங்ககால மக்கள் அழைத்தனர்.

பிற்காலச் சோழர்களுடைய கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் வணிகர் பற்றிய குறிப்புகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. வளஞ்சியத்தார், மணிக்கிராமத்தார், நானாதேசிகர், நகரத்தார், அஞ்சு வண்ணத்தார் என அவரவர்கள் நிலைக்கு ஏற்பப் பல்வேறு பெயர்களால் வணிகர்கள் குறிப்பிடப் பெற்றனர்.

கடல் வழியாகச் சென்று வெளிநாடுகளில் வாணிகம் புரிவோரை "கலந்தரு திருவின் புலம் பெயர் மாக்கள் என்பார் இளங்கோவடிகள். அவ்வாறு கடல்வழி வாணிகம் புரிவோர் மாநாய்க்கன், மாநாய்கன் எனவும் அழைக்கப்பட்டனர். வாணிகத்தில் பெருஞ் செல்வத்தை ஈட்டிய மாசாத்துவர்களுக்கும், மாநாய்க்கர்களுக்கும் அரசர்கள் எட்டிப் பட்டமும், எட்டிப் பூவும் அளித்துச் சிறப்பித்தனர்.

## அரேபியர்கள்

சங்க காலத்திலே தமிழ்நாட்டில் அரேபியர், யவனர், சாவகர் போன்ற வேற்று நாட்டவர்கள் வாணிகஞ் செய்தனர். சீன வாணிகர் தமிழ்நாட்டிற்கு வந்து வாணிகம் செய்யவில்லை. கலிங்க நாட்டிலிருந்தும் வட இந்தியாவிலிருந்தும் தமிழ்நாட்டிற்கு வந்து வாணிகம் செய்துள்ளனர்.

தமிழ்நாட்டின் வடமேற்கிலிருந்து வந்த அரேபிய வாணிகர்கள் முசிறித் துறைமுகத்திற்கு வந்து வாணிகம் செய்தனர். முசிறியில் அரேபியர்கள் வாணிகஞ் செய்த இடத்தினைப் பந்தர் என்றழைத்தனர். அரேபியர்கள் முசிறியிலிருந்து மிளகினை ஏற்றுமதி செய்து செங்கடல் துறைமுகத்திலும் அலெக்சாந்திரியத்

துறைமுகத்திலும் சென்று விற்றனர். அங்கிருந்த பொருட்களை வாங்கி வந்து தமிழ்நாட்டில் விற்றனர்.

**யவனர்கள்**

அரேபியர்களின் வாணிக ஆதிக்கத்தை அழித்து யவனர்கள் வாணிகம் செய்யத் தொடங்கினர். அக்காலத்தில் கிரேக்க நாட்டவரும் உரோம நாட்டவரும் யவனர் என்றழைக்கப்பட்டனர். பருவக் காற்றின் துணையால் யவனக் கப்பல்கள் தமிழ் நாட்டிற்கு அதிகமாக வரத் தொடங்கின. வாணிகத்தின் பொருட்டு வந்த யவனர்கள் சிலர் தமிழ்நாட்டில் தங்கித் தச்சுத் தொழில் செய்தார்கள். யவனத் தச்சர்கள் என்றும் அழைக்கப்பட்டனர்.

இதனை,

**கடிமதில் வாயில் காவலிற் சிறந்த**
**அடல்வாள் யவனர்க்கு அயிராது புக்கு**[93]

என்று சிலம்பு குறிப்பிட்டுள்ளது

பாண்டியனின் பாசறையில் யவன வீரர்கள் இருந்ததை,

**மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை**
**மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து**
**வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்**[94]

முல்லைப்பாட்டு எடுத்துக் காட்டியுள்ளது.

**சாவகம்**

சங்க காலத்தில் சாவகத் தீவு சீன நாட்டிற்கும் இந்திய நாட்டிற்கும் இடையே உள்ள மத்திய வாணிக நிலையமாக விளங்கியது. தமிழ்நாட்டின் கிழக்கே ஆயிரம் மைல் தூரத்திற்கு அப்பால் கிழக்கிந்தியத் தீவுகள் உள்ளன. சங்கத் தமிழர்கள் அந்தத் தீவுகளுக்குச் சென்று வாணிகம். செய்தனர் சாவகத்தீவு என்று பெயரும்

இட்டனர், சாவகத் தீவினை ஆண்ட அரசர்கள் வாணிகத்திற்குப் பெரிதும் ஆதரவு கொடுத்தனர். சாவகத் தீவுகளில் இலவங்கம், சாதிக்காய், குங்குமப்பூ, கர்ப்பூர வகை முதலான வாசனைப் பொருள்கள் உண்டாயின.

## ஏற்றுமதி இறக்குமதிப் பொருட்கள்

முசிறித் துறைமுகம் சேர நாட்டுத் துறைமுகப் பட்டினங்களில் புகழ்பெற்று விளங்கியது. முசிறித் துறைமுகத்தில் ஏற்றுமதியான பொருட்களில் முக்கியமானது மிளகு. யவனக் கப்பல்கள் மிளகை வாங்குவதற்காகவே முசிறிக்கு வந்தன. யவனக் கப்பல்கள் பவழம், கண்ணாடி, செம்பு, தகரம், ஈயம் முதலான பொருட்களைக் கொண்டு வந்து முசிறியில் இறக்குமதி செய்து பல பொருள்களை ஏற்றுமதி செய்து போயின. ஏற்றுமதியான பொருள்களில் மிளகுதான் முக்கியமானதாகவும் அதிகமானதாகவும் இருந்தது. யவனர்கள் மிளகை விரும்பி வாங்கியதால் 'யவனப்பிரியா' என்று மிளகு அழைக்கப்பட்டது.

காவிரியாற்றின் முகத்துவாரத்தில் அமைந்திருந்த காவிரிப் பூம்பட்டினம் சிறந்த துறைமுகப் பட்டினமாக விளங்கியது. காவிரியாற்றின் முகத்துவாரம் ஆழமாகவும் அகலமாகவும் இருந்ததால் பல கப்பல்கள் வந்து தங்குவதற்கு ஏற்றதாய் இருந்தது. காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தில் வந்து இறங்கிய பொருள்களைப் பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறியுள்ளார்.

**நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**
**காலின் வந்த கருங்கறி மூடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
**ஈழத் துணவும் காழகத் தாக்கமும்**
**அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி**
**வனம் வலிந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்**[95]

சாவகநாடு என்று குறிப்படும் கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து அகில், துகில், ஆரம், கருப்பூரம் முதலியவை தொண்டித் துறைமுகத்தில் இறக்குமதி ஆயின. அப்பொருட்கள் பாண்டியரின் தலைநகரான மதுரைக்கு அனுப்பப்பட்டதைச் சிலப்பதிகாரம் குறிப்பிட்டுள்ளது.

ஓங்கிரும் பரப்பின்
வங்க ஈட்டத்துத் தொண்டியோர் இட்ட
அகிலும் துகிலும் ஆரமும் வாசமும்
தொகு கருப்பூரமும் சுமந்துடன் வந்த
கொண்டலொடு புகுந்து கோமகன் கூடல்
வெங்கண் நெடுவேள் வில்விழாக் காணும்
பங்குனி முயக்கத்துப் பனியரசு"[96]

பாண்டிய நாட்டின் கொற்கைத் துறைமுகம் உலகப் புகழ்பெற்று விளங்கியது. கொற்கையின் முத்து சங்கச் செய்யுட்கள் பலவற்றால் சிறப்பிக்கப்பட்டுள்ளன.

கொற்கைக் கடலில், கடல்தெய்வத்தை வணங்கும் பொழுது பெண்கள் முத்தையும் வலம்புரிச் சங்கையும் கடலில் போட்டு வணங்கினார்கள் என்று அகப்பாடல் ஒன்று கூறுகிறது.

பாண்டியன்
புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்றுறை
அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து
தழையணிப் பொலிந்த கோடேந் தல்குல்
பழயர் மகளிர் பனித்துறைப் பரவ[97]

அகில், துகில், ஆரம், வாசம், கற்பூரம் முதலிய பொருட்கள் கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டுத் தமிழ்நாட்டில் இறக்குமதி செய்யப்பட்டன. யவனநாட்டிலிருந்து, மதுகள், மற்றும் பாவை விளக்குகள், கண்ணாடிப் பொருட்கள் முதலியன ஏற்றுமதி செய்யப்பட்டுத் தமிழகத்தில் இறக்குமதியாயின. மிளகு, முத்து, வெல்லம், சங்கு, வளை, துணி வகைகள் போன்ற பல பொருட்கள் தமிழகத்

துறைமுகங்களிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டு வெளிநாடுகளுக்கு இறக்குமதி செய்யப்பட்டன.

வெளிநாடுகளிலிருந்து கடல் வழியாகக் கொண்டு வரப்பட்ட இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களும் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்குத் தமிழகத்தின் பல பகுதியிலிருந்து கொண்டு வந்து சேர்க்கப்பட்ட பொருள்களும் தனித் தனி இடங்களில் பொதிகளாகக் கட்டப்பட்டு அவற்றின் அளவும், நிறையும், எண்ணும் எழுதப்பெற்று இலச்சினைப் பொறிக்கப்பட்டு குவித்து வைக்கப்பட்டன. இதனைச் சிலம்பு, இந்திர விழவூர் எடுத்த காதை மூலம் விளக்கியுள்ளது.

**வம்ப மாக்கள் தம்பெயர் பொறித்த**
**கண்ணெழுத்துப் படுத்த எண்ணுப் பல்பொதிக்**
**கடைமுக வாயிலும் கருந்தாழ்க் காவலும்**
**உடையோர் காவலு ஒரீஇய வாகி**[98]

ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களுக்கெனத் தனித்தனியே சுங்கமும் வாங்கப்பட்டது. அதன் மூலம் நாட்டின் வளம் பெருகியது.

புலவர்கள் பலர் வாணிகத் தொழில் புரிவோராகவும் விளங்கினார்கள். அறுவை வணிகன் இளவேட்டனர், மதுரை பண்ட வாணிகன் இளந்தத்தனார், மதுரை பெருங்கொல்லனார், உறையூர் இளம்பொன் வாணிகன் சாத்தன் கொற்றனார் போன்ற பெயர்கள் அவர்கள் மேற்கொண்ட தொழிலினை வெளிப்படுத்துகின்றன.

வாணிகம் பல இன மக்களை ஒன்றுபடுத்தி ஓர் இனத்தவரோடு மற்றோர் இனத்தவர் நெருங்கிப் பழக ஓர் அரிய வாய்ப்பினை ஏற்படுத்தி, உலகப் பண்பாட்டு வளர்ச்சிக்குக் காரணமாய் அமைந்துள்ளதை அறிய முடிகிறது. இன்றைய காலகட்டத்தில் வாணிகத் துறையில் அமெரிக்க நாடு முதலிடமும், சப்பான் இரண்டாம் இடமும் பெற்றிருந்தாலும், அமெரிக்கா, சப்பான் முதலிய நாடுகள் நினைத்துக்கூடப் பார்க்காத காலத்திலேயே தமிழ்நாடு எகிப்து, பாபிலோன், உரோம், சாலதியா போன்ற மேலை நாடுகளோடும், பிலிப்பைன்சு, சாவா, சுமித்திரா போன்ற

கீழை நாடுகளுடனும் வாணிகத் தொடர்பு கொண்டிருந்ததைச் சான்றுகள் மூலம் அறியலாம். பண்டைத் தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் வாணிகம் வரலாற்றுச் சிறப்புமிக்க ஒரு தனித் துறையாக விளங்கியது என்பதையும் கப்பற்கலையில் தமிழர்களின் நுண்ணறிவும் தேர்ச்சியும், மாலுமிகளின் துணிவும் ஆர்வமும் தமிழ்நாட்டினைப் பெரிதும் மேம்படுத்தின என்பதையும் சங்கத் காலத் தமிழகத் துறைமுகப் பட்டினங்கள் மூலம் தெளிவாகின்றன.

## அடிகுறிப்புகள்

1. Vincent A Smith, The early history of India P.462
2. சிக, சிற்றம்பலம் பண்டைய தமிழகம் ப–31
3. Seshaya Iyengar,Dravidian India Vol - I P.147

   "The existence in the Tamil Language of pure Tamil words like kadal, paravai, Panari, Arkali and Munnir, all of which refer to the sea, and of words like kalevam, markalam, mithavai, and kappal which are original Tamil words and which all denote a ship, prove that the Tamils in earliest times were a sea - faring people".

4. அ. சிதம்பரனார் சேரர் வரலாறு. ப–265
5. ப. பத்து. பா. 6, 1–2
6. ப. பத்து. பா. 8, 5–6
7. ப ஜெயக்குமார், 'தமிழகத் துறைமுகங்கள்', ப. 47–48
8. கே. கே. பிள்ளை, 'தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்', ப. 53
9. அகம். பா. 57
10. இரா. இளங்குமரன், 'தென்னாட்டு வணிகம்', ப. 41
11. Manorama Year book, 1973, P-367
12. அகம். பா. 346
13. அகம். பா. 376, 15–18
14. முத்தொள்ளாயிரம் பாடல் எண்.
15. முத்தொள்ளாயிரம் பாடல் எண்.
16. ப. பத்து. 9, பா 27–30
17. பி. எல். சாமி, 'சங்க காலத் துறைமுகங்கள்', வரலாற்று சுடர்கள், ப–22
18. Meerindle, Ancient India as described by piolemy, p.51

    Mouziris may unhestitatingly be taken to, represent the muyiri - kodu, which says yule, appears in one of the most ancient of malabar in scriplions as the residence of the king of kadamgalur or kranganur, and is admitted to be practically identical with that now extinct city. It is to kranganur he adds that the malabar traditions point as their oldest seapont of renown; to the christians it was the lending place of st. Thomas the apostle." [10]

    (-Mccrindle, 'Ancient India' as described by piolemy, P. 51)

19 நற். பா. 32, 5–6

20. குறும். பா. 128. 1–2

21. ப. பத்து. 6, பா. 4–6

22. ப. பத்து. 9, பா. 8 21

23. அகம். பா. 60

24. அகம். பா. 290

25. புறம். பா. 17, 9–13

26. சிலம்பு ஊர்காண் காதை, 19–25

27. Vincent.A. Smith, The Early History of India, P.48

28. மா. இராசமாணிக்கம், 'பத்துபாட்டு ஆராய்ச்சி', ப. 32

29. R.Nagasamy, "Kaviripattinam A Guide" P.3

30. Meerindle – Indian Anti Query –Vol XII p.332-333

31. நற். பா. 73

32. நற். பா. 219

33. நற். பா. 281

34. ஐங்குறு. பா. 61

35. ப. பத்து. பா. 8, 3–7

36. அகம். பா. 6, 8

37. அகம். பா. 110, 4–5

38. அகம். பா. 123, 9

39. அகம். பா. 181, 19–22

40. அகம். பா. 205, 7–9

41. அகம். பா. 222, 6

42. அகம். பா. 226, 9

43. அகம். பா. 376, 7–9

44. புறம். பா. 30, 6–9

45. புறம். பா. 166, 8–9

46. புறம். பா. 385, 7–8

47. பொருளா். 168–170

48. ப. பாலை. 20,

49. ப. பாலை. 27–28

50. ப. பாலை. 40–41

51. ப. பாலை. 57

52. ப. பாலை. 47

53. ப. பாலை. 105

54. ப. பாலை. 111

55. ப. பாலை. 182–183

56. சிலம்பு. காதை 5, 7–39

57. சிலம்பு. காதை 5, 57–58

58. மணிமேகலை காதை. 5, 109–122

59. மணிமேகலை காதை. 1, 21–24

60. மணிமேகலை காதை 7 (78–80 வரிகள்)

61. மணிமேகலை காதை 19 (109–122 வரிகள்)

62. வி. கனகசபை, 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்குட்பட்ட தமிழகம்' (மொ. பெ.) கா. அப்பாதுரை, ப. 124

63. ப. ஜெயக்குமார், 'தமிழகத் துறைமுகங்கள்' ப. 25

64. அறுவர், 'பூம்புகார்', ப. 14

65. சிலம்பு. காதை 5, 169–178

66. சிலம்பு. காதை 9, 9–13

67. மயிலை. சீனி. வேங்கடசாமி, 'பழங்கல தமிழர் வாணிகம்' ப. 89

68. கே. கே. பிள்ளை, 'தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்', ப. 19

69. அ இராகவன், 'கோநகர் கொற்கைஸ', ப. 40

70. T.S.Sridhar,Excarnations of Archaelogical sites in Tamil Nadu

71. R.Coldwell, A history of Tirunelveli P.283

72. Schaft, The Periplus of the Erythaean Sea, P.40

73. நற். பா. 23, 6

74. ஐங்குறு. பா. 185, 2

75. ஐங்குறு. பா. 188, 1–2

76. அகம். பா. 27, 8–9

77. அகம். பா. 201, 4–5

78. அகம். பா. 296, 4–7

79. சிறுபாண். பா. 55–62

80. ம. கா. 133–1138

81. சிலம்பு. காதை 14, 79–80

82. சிலம்பு. காதை 20, 30 வரி

83. சிலம்பு. காதை 20, 11 வரி

84. M. Arunachalam, 'The History of the Pearl fishery of Tamil Coast', p.54

85. கா. அப்பாதுரை, 'தென்னாடு' ப. 61

86. வி. கனகசபை. 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்குட் பட்ட தமிழகம்'. ப.

87. வி. பி. புருஷோத்தம், 'சங்ககால மன்னர் கால நிலை வரலாறு', ப.

88. ம. கா. 512

89. ம. கா. 117

90. மலைபடுகடாம் வரி 413

91. ப. பத்து. 13 : 21

92. ஐங்குறு. பா. 195

93. சிலம்பு ஊர்காண் காதை 66–67

94. மு. பா. 59–61

95. ப. பா. 185–193

96. சிலம்பு ஊர்காண் காதை 106–112

97. அகம். பா. 201 , 3–7

98. சிலம்பு. காதை 5, 111–114

# இயல் நான்கு

## ஊரக வாழ்வும் நகரிய வாழ்வும்

அ. பொது இடம்

ஆ. வீடுகள்

இ. உணவு

ஈ. உடை

உ. தொழில்

ஊ. கல்வி

எ. விளையாட்டு

ஏ. திருமண முறைகள்

# ஊரக வாழ்வும் நகரிய வாழ்வும்

ஊரக வாழ்வும் நகரிய வாழ்வும் என்னும் இந்த இயலில், சங்க மக்களின் கிராம வாழ்க்கை முறையும், நகர வாழ்க்கை முறையும் விரிவாக ஆராயப் பெறுகின்றன. கிராம வாழ்க்கையில், திருமணம், குடும்பம், தொழில், விருந்தோம்பல், கல்வி போன்றவைகள் பெற்ற இடத்தினையும் அவை நகரிய வாழ்க்கை முறையிலிருந்து வேறுபடும் தன்மையையும் விரிவாக ஆய்கின்றது.

ஊரக வாழ்வு முழுக்க முழுக்க இயற்கை சார்ந்த வாழ்வாகத் திகழ்ந்தது. அங்கு பிற நாட்டினரின் தொடர்பும், பிற பண்பாட்டினரின் தொடர்பும், பிற மொழியினரின் தொடர்பும் குறைவாக இருந்ததால் ஊரக வாழ்க்கை தனித்தன்மையுடன் சிறந்து காணப்பட்டது. எளிமையான வாழ்க்கை முறை கடைபிடிக்கப்பட்டது. மக்களிடம் தொழில் அடிப்படையிலேயே பிரிவு முறைகள் காணப்பட்டன. வாணிகம் பெரும்பாலும் பண்டமாற்று முறையிலேயே நடைபெற்றது.

நகரிய வாழ்க்கை முறை, முழுக்க முழுக்க இயற்கை சார்ந்ததாக அல்லாமல் அரண்மனை, துறைமுகப்பட்டினம், பெரியபெரிய கட்டிடங்கள், மாளிகைகள், அரங்கங்கள் போன்றவைகள் நிறைந்து காணப்பட்டன. நகரங்களில் பிறநாட்டினரின் தொடர்பும், பிற பண்பாட்டினரின் தொடர்பும் பிற மொழியினரின் தொடர்பும் மிக்கு இருந்ததால் பண்பாட்டுக் கலப்பு, நாகரிகத் திணிப்பு போன்றவைகள் நிகழ்ந்தன. வாணிகம் பெரிய அளவில் நடைபெற்றது. பணப்புழக்கம் மிகுதியாக இருந்ததால் ஆடை அலங்கார அணிமணிகள் புதுமை புதுமையாக வரவேற்கப்பட்டன. பிறநாட்டினருடன் வாணிகத் தொடர்பு கொண்டதன் காரணமாக அவர்களின் மதுப்பழக்கத்திற்கும் நகர மக்கள் ஆளாயினர். யவன நாட்டிலிருந்து தேறல் வரவழைக்கப்பட்டு அருந்தி மகிழ்ந்ததை சங்கப்பாடல்கள் மூலம் குறிப்பிட்டுள்ளன. விளையாட்டு பொழுதுபோக்கு, ஆடல், பாடல் என்பனவற்றில் நகரமக்கள் விருப்பம் கொண்டனர். பரத்தையர் செல்வாக்கு நகரத்தில் மிகுதியாகக் காணப்பட்டது.

ஊரக வாழ்வில், மக்கள் பண்பு நிறைந்தவர்களாகக் காணப்பட்டனர். "உயிரினும் சிறந்தது நாண், நாணினும் சிறந்தது கற்பு" என்ற உயர்ந்த பண்பு பெண்களிடம் சிறந்து விளங்கியது. கிராமப்புற பெண்கள் குறைவாக பேசுதல் சிக்கலில் அகப்படாமல் ஒதுங்கி இருத்தல் போன்றவற்றைக் கடைபிடித்தனர். அதற்காக அவர்கள் பயந்தவர்கள் அல்லர். பெண்கள் வீரத்திலும் சிறந்து விளங்கியதை புறநானூறு பறைசாற்றுகின்றது.

**கெடுக சிந்தை கடிதுஇவள் துணிவே**
**மூதின் மகளிர் ஆதல் தகுமே**
**மேல்நாள் உற்ற செருவிற்கு இவள்தந்தை**
**யானை எறிந்து களத்துஒழிந் தனனே**
**நெருநல் உற்ற செருவிற்கு இவள்கொழுநன்**
**பெருநிரை விலக்கி ஆண்டுப்பட் டனனே**
**இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி**
**வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்**
**பாடுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி**
**ஒருமகன் அல்லது இல்லோள்**
**செருமுக நோக்கிச் செல்க என விடுமே.**[1]

முதல் நாள் போரில் தன் தந்தையையும் மறுநாள் போரில் தன் கணவனையும் இழந்த வீரப்பெண் ஒருத்தி, மீண்டும் போர்ப்பறை ஒலிக்கும் ஒலி கேட்டு தன் ஒரே மகனை, போர் செய்வதன் பொருட்டு கையில் வேலினைத் தந்து, வெண்மையான ஆடையை உடுத்தி தலைக்கு எண்ணெய்த் தடவிச் சீவி, போர்க்களம் நோக்கிச் செல்வாயாக என்று சொல்லி அனுப்புகிறாள். மறக்குடியில் பிறந்த அப்பெண்ணின் வீரத்தினை இப்பாடல் மிக அழகாக விளக்கியுள்ளது.

நகர வாழ்க்கை அரசனை சார்ந்த வாழ்க்கையாக விளங்கியது. ஊர்களுடன் ஒப்பிடுகையில் நகரங்கள் குறைவாகவே இருந்தன. நகரங்களுக்கு உரிய தேவைகள் குறைவாக இருந்ததால் நகரங்கள் குறைவாகவே இருந்தன. ஊர்களுக்கு இருக்கும்

செல்வாக்கினைப் போன்று அக்காலத்தில் நகரங்களுக்கு செல்வாக்கும் மதிப்பும் மிகவும் குறைவாகும். ஊர்களின் கடைத் தெருக்கள் போன்றே நகரங்கள் விளங்கின.

ஊர்த் தலைவர் கிழார் எனப்பட்டார். நம் நாடு நம் ஊர் என்னும் எண்ணம் ஊரக மக்களிடம் நிரம்பி இருந்தன.

கிராமப்புறங்களில் உள்ள பெரிய வீதி சாலை எனப்பட்டன. சிறிய வீதிகள் தெருக்கள் என அழைக்கப்பட்டன. பள்ளி, மலர்வனம் முதலியவைகள் கொண்ட இடம் இலவந்திகை எனப்பட்டது. அங்காடி என்பது கடைத் தெருக்களைக் குறிக்கும். நகர், மனை, இல் போன்றவைகள் கோவில், வீடு என்பனவற்றைக் குறித்தன.

ஊரக வாழ்க்கை முறை ஐவகைத் திணைகளுக்குரிய ஒழுக்கங்களால் மேம்படுத்தப்பட்டது.

**"ஐவகை நிலப்பிரிவுகள் மனிதன் தோற்றத்தையும் மனித இனத்தின் பண்பாட்டு வளர்ச்சியினையும் அறிய உதவுகின்றன"**[2]

என்று தனிநாயகஅடிகள் குறிப்பிட்டுள்ளார். ஐவகை நிலப்பிரிவுகளின் அகவொழுக்கங்களை ஊரக மக்கள் கடைபிடித்தனர். ஐவகை நிலப்பகுதிகளும், ஒழுக்கங்களும், உணவு, பொருளாதார வாழ்வு போன்றவைகளும் ஊரக மக்களின் பண்பாட்டினை வெளிப்படுத்தின.

| நிலம் | ஒழுக்கம் | உணவு | பொருளாதார வாழ்வு | நீர்வளம் |
|---|---|---|---|---|
| குறிஞ்சி | புணர்தலும் புணர்தல் நிமித்தமும் | தினை, மூங்கிலரிசி | தேனெடுத்தல், கிழங்கு எடுத்தல், தினைக்கதிரை உண்ணும் பறவைகளை ஓட்டுதல் | சிறு நீரோடைகளும் சுனைகளும் |
| முல்லை | பொருள்வயின் பிரிந்த கணவனை எதிர்பார்த்து இருத்தல் | வரகு சாமை முதிரை | ஆநிரை மேய்த்தல் | காட்டாறு |
| மருதம் | பரத்தையரிடம் சென்று வந்த கணவனிடம் ஊடுதல் | அரிசி | நாற்று நடுதல் களை எடுத்தல் அரிதல் | ஆற்றுநீர் கிணற்று நீர் |
| நெய்தல் | கூடுதல் | மீன், உப்பு பண்டமாற்று செய்து வாங்கிய பொருட்கள் | மீன் பிடித்தல் உப்பு விளைத்தல் இரண்டினையும் விற்றல் | கிணறு உவர் நீர் குட்டை |
| பாலை | பொருள்வயின் பிரிதல் | வழிப்பறி செய்தலால் கிடைத்த பொருள்கள் | ஆறலைக் கள்வர்கள் வழிப்பறி செய்தல் | கிணறு, சுனை குட்டை |

ஐவகை நிலங்களில் பாலை என்பது குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்து உருவாகிய திணையாகையால் ஐவகை நிலம் என்பது நால்வகை நிலமாகக் கருதப்பட்டது. நானில மக்களின் சந்திப்பையும் கூட்டுறவையும் அவர்களிடம் காணப்பட்ட மனித நேய உணர்வுகளையும் பொருநர் ஆற்றுப்படை விவரித்துள்ளது.

**தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறவு மறுகவும்**
**தீங் கரும்போடு அவல் வகுத்தோர்**
**மான் குறையொடு மது மறுகவும்**
**குறிஞ்சி பரதவர் பாட, நெய்தல்**
**நறும் பூம் கண்ணி குறவர் சூடக்**
**கானவர் மருதம் பாட, அகவர்**
**நீலநிற முல்லைப் பல் திணை நுவல......**[3]

தேனும், கிழங்கும், மீனும் கள்ளும், கரும்புடன் அவலும், மான்கறியுடன் மதுவும் பறிமாறிக் கொள்ளும் பண்டமாற்றுமுறை ஊரக வாழ்வில் பெரிதும் விரும்பப்பட்டது. நானிலப் பொருட்கள் பண்டமாற்று முறையில் பரிமாறிக் கொள்ளுமிடம் "ஊர்ச்சந்தை" எனப்பட்டது.

ஊரக மக்கள், அகவாழ்க்கைக்கு உரிய திணை ஒழுக்கங்களைக் கடைபிடித்ததைப் போன்று நகரிய மக்கள், புறவாழ்க்கைக்கு உரிய திணை ஒழுக்கங்களுக்கு முக்கியத்துவம் தந்தனர். நகரிய வாழ்க்கை அரசனைச் சார்ந்ததாக அமைந்திருந்ததால் புறத்திணைகளுக்கு உரிய ஒழுக்கங்கள் கடைபிடிக்கப்பட்டன. வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை போன்ற திணை ஒழுக்கங்களை நகரிய மக்கள் கடைப்பிடித்தனர்.

வெட்சி: பகைவரின் பசுக்கூட்டத்தைக் கவர்தல். இது பகைவர் மீது போர்தொடுக்க மேற்கொள்ளும் முதற்கட்டம் ஆகும். நிரை கவர செல்லும் வீரர்கள் வெட்சிப்பூ சூடிச் செல்வர்.

கரந்தை: பசுக்கூட்டத்தை கவர்ந்த அரசனிடம் அப்பசுக்கூட்டத்திற்குரிய மன்னன் போரிட்டு மீட்பது. அவ்வாறு நிரை மீட்கச் செல்லும் வீரர்கள் கரந்தைப்பூ சூடிச் செல்வர்.

வஞ்சி: ஆநிரையைக் கவர்ந்து வெற்றி கொண்ட காரணத்திற்காகவும் அல்லது ஆநிரை கவர்ந்து கொண்டு வர முடியாத சீற்றத்தின் காரணமாகவும் மன்னன் வஞ்சி சூடி பகைவரின் நாட்டைக் கைக்கொள்ளப் படையொடு புறப்படல்.

காஞ்சி: வஞ்சிப்பூச்சூடி தன் நாட்டைக் கைக்கொள்ள வந்த மன்னனை எதிர்த்து அழிக்கச் செல்லுதல். அவ்வாறு செல்லுகையில் காஞ்சிப் பூச்சூடுவர்.

நொச்சி: பகைவரின் அரணினை அழிக்க வந்தவர்களை வெல்வதற்கு முற்படும் வீரர்கள் நொச்சி மாலை அணிந்து செல்வர்.

உழிஞை: பகைவரின் அரணைக் கைக்கொள்ளச் செல்லும் வீரர்கள் உழிஞை மலர் சூடுவது மரபாகும்.

தும்பை: பகையரசனை வெல்லுவதற்குப் புறப்படும் வேந்தன் தும்பை மாலை சூடிச் செல்வான்.

வாகை: போர்க்களத்தில் பகையரசனைக் கொன்றவவர்கள் வாகைப் பூ சூடி ஆரவாரிப்பர்.

மேற்கூறிய திணைகள் நகரங்களில் அரசனைச் சார்ந்து வாழும் வீரர்களுக்குரிய ஒழுக்கங்களை உடையதாக உள்ளது.

### பொதுஇடம்

ஊரக மக்கள் பெரும்பாலும் தங்கள் ஊர்ப்பொதுக்காரியங்களைத் தாங்களே கவனித்துக் கொண்டனர். அவர்கள், தங்கள் கிராமத்திலுள்ள செல்வந்தர், அனுபவமுடையோர், அறிஞர் போன்றவர்களின் கருத்துக்கு மதிப்பளித்தனர். பொதுவாகக் கிராமம் தனது விவகாரங்களைத் தானே கவனித்துக் கொண்டது

எனலாம். அவ்வாறு கவனித்துக் கொள்வதற்கு மன்றம், பொதியில், அம்பலம் என்ற பல சொற்களால் அழைக்கப்படும் இடம் ஒன்று ஒவ்வொரு ஊரிலும் இருந்தது. அது பொது இடமாகக் கருதப்பட்டது. பொதியில் எனப்படும் அந்தப் பொது இடம் கிராமத்தின் வெளிப்பகுதியில் மரத்தடியில் இருக்கும். அது ஒரு கிராம நிறுவனமாக செயலாற்றியது. கிராமத்தில் எழும் சில்லறைத் தகராறுகளைத் தீர்த்துவைக்க அப்பொது இடமான பொதியிலும் மன்றலும் ஈடுபட்டன. அங்கு, இளைப்பாற வருவோரும், பொழுபோக்காக பேச வருவோரும், பொறுப்புள்ள அரசியல் பேசுவோரும், அரசியலோடு தொடர்புகொண்டவர்களும், பொதுமக்களும் கூடும் இடமாகத் திகழ்ந்தது. மேலும் அவ்விடங்களில் முதியோர்கள் சென்று சூது ஆடுதலும் சிறுவர்கள் விளையாடுதலும், ஊர்க்குப் புதியராய் வந்தவர்களும், இரவலர்களும் தங்குதலும் உண்டு.

**பலிகண் மாறிய பாழ்படுபொதியில்**

**நரைமூ தாளர் நாயிடக் குழிந்த**[4]

**அலங்குகதிர் சுமந்த கலங்கற்சூழி**

**நிலைதளர்வு தொலைந்த ஒல்குநிலைப் பல்காற்**

**பொதியில் ஒருசிறை பள்ளியாக ...**[5]

விழாக்களும் அப்பொது இடங்களில் நடைபெறும். மக்கள் நெருங்கிப் பழகுவதற்கு காரணமாகவும் அப்பொது இடம் விளங்கியது.

நகரங்களில் வாழும் மக்கள், தங்கள் பக்கத்தில் வசிப்பவர்களைத் தெரிந்து கொள்வதற்கு நாட்டம் காட்டாத நிலையில், ஊரின்கண் உள்ள 'பொது இடம்' ஊரக மக்களின் தனித்தன்மையைச் சிறப்பிப்பதாய்த் திகழ்ந்துள்ளது.

**வீடுகள்**

ஊரக மக்களின் இருப்பிடங்கள் அவரவர்களின் பொருளாதார அடிப்படையில் அமைந்திருந்தன. எளியவர்கள் குடில்களில் வாழ்ந்தனர். அச்சிற்றில்களில் தூண்களும் இருந்தன. 'சிற்றில் நற்றூண் பற்றி' எனப் புறநானூற்றில் (86) வந்துள்ளது.

செல்வர்களுடைய மனை உயர்நிலை மாடங்களும், முன்வாயில், புறக்கடை முதலியவையும் அமைந்து விளங்கியது. வாயில் பகுதியில் பூந்தொட்டிகள் வைக்கப்பட்டிருந்ததைப் புறப்பாடல் (105) விளக்கியுள்ளது.

செல்வந்தர்களின் வீடுகளில் கட்டில்களும், பஞ்சணைகளும் இருந்தன. 'நுரை முகந்தன்ன மென்பூஞ்சேர்க்கை' (புறம் 50), எளியவர்களின் வீட்டில் தோலும், பாயுமே படுக்கையாகப் பயன்படுத்தப்பட்டன. (புறம் 317), குளிர்காலங்களில் தீக்கடைக் கோலினால் நெருப்பு உண்டு பண்ணிக் குளிர்காய்தலைப் பெரும்பாணாற்றுப்படையும் நெடுநல்வாடையும் குறிப்பிட்டுள்ளன. சங்ககால மக்கள் தம் வீடுகளில் காற்றும் வெளிச்சமும் தாராளமாக வரும் பொருட்டுக் குறுகிய கண்களைப் போன்று சிறியதாகக் கற்களினாலும் கம்பி மற்றும் சுதை மாவினாலும் நெருக்கமாக வழி அமைத்துக் கொண்டனர். அவை சாளரம், பலகணி, காலதர் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டன. காலதர் என்பது காற்று வரும் வழி ஆகும்.

• நகரங்களில் மக்களின் இருப்பிடம் பெரிய பெரிய மாடங்களுடனும், பல வசதிகளுடனும் அமைக்கப்பட்டிருந்தது. பெரிய பெரிய மாளிகைகள் இருந்தன. அரசனின் அரண்மனை வியப்புறும் வண்ணம் அமைக்கப்பட்டிருந்தது.

சங்ககாலத்தில் நகரிய வாழ்க்கை என்று குறிப்பிடும் பொழுது முக்கிய நகரங்களான புகார், உறையூர், கொற்கை, மதுரை, முசிறி, வஞ்சி முதலிய நகரங்களின் வாழ்க்கை முறையினையே குறிப்பிடலாம். அரண்மனைகள், வாணிகம் நிகழ்த்துதற்கான இடங்கள், பெரிய பெரிய ஓட்டு வீடுகள் தோட்டங்கள், விழாக்கள் நடைபெறும் இடங்கள் போன்றவை நகர வாழ்கை முறை நடைபெறுவதற்குரிய களங்களாக விளங்கின. நகரங்களை இரவு நேரங்களில் ஊர்க் காவலர்கள் பாதுகாத்தனர். காவலுக்கு நாய்கள் பயன்படுத்தப்பட்டன. நகரங்களில் உள்ள வீடுகள் சுட்ட செங்கற்களால் கட்டப்பட்டவை ஆகும். கூரைகள், ஓடுகளால் வேயப்பட்டிருக்கும். சுட்ட செங்கற்களாலும் கலவை மண்ணினாலும் சுவர்கள் எழுப்பப்பட்டன. மாடங்கள் அழகுறக் கட்டப்பட்டன. கதவுகளைப் பிணைக்கக் குறுக்குச்சட்டம் இடப்பட்டது. ஒவ்வொரு வீட்டிற்கும் கிணறு இருந்தது. வீட்டுச்

சுவர்கள் மீது ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன.

பட்டினப்பாலை, பூம்புகார் நகரின் சிறப்பினைச் சிறப்பித்துள்ளது. காவிரியின் சிறப்பு சோழ நாட்டின் சிறப்பு, பூம்புகார் நகரின் சிறப்பு, கடற்கரையில் மக்களின் விளையாட்டுகள், ஏற்றுமதி இறக்குமதிப் பொருட்கள் பற்றிய செய்திகள், வளம் நிறைந்த வீதிகள், வெறியாடும் மகளிரின் வீதிகள், வணிகர்களின் குடியிருப்புகள், பலமொழி பேசும் மக்களின் உறைவிடங்கள் ஆகிய செய்திகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

பூம்புகாரின் பெருநகர அமைப்புகள் பட்டினப்பாலை வழி புலனாகிறது. பட்டினப்பாலை பூம்புகாரின் நகர அமைப்பினைச் சிறப்பித்ததைப் போன்று பொருநர் ஆற்றுப்படை பூம்புகாரின் சிற்றூர் வாழ்க்கை முறையினை விவரித்துள்ளது.

**---------ஒல்லெனத்**
**திரை பிறழிய இரும் பௌவத்துக்**
**கரை சூழ்ந்த அகன் கிடக்கை**
**மா மாவின் வயின் வயின் நெல்**
**தாழ்தாழைத் தண் தண்டலை**
**கூடு கெழீஇய குடிவயினான்"[6]**

என வரும் பொருநர் ஆற்றுப்படை அடிகளில், 'மா' என்னும் அளவுடைய நிலங்களின் இடம்தோறும் நெற்கூடுகளும், தென்னை இளஞ்சோலைகளும் நிறைந்த வேளாண் குடியிருப்புகள் பாடப்பெற்றுள்ளன.

காவிரி ஆறு கடலொடு கலக்கும் சோழநாட்டின் வளத்தை நான்கு திணை நிலங்களும் மயங்கிய வளநிலப் பகுதியாக,

**சாலி நெல்லின் சிறை கொள் வேலி**
**ஆயிரம் விளையுட்டு ஆக**
**காவிரி புரக்கும் நாடு கிழவோனே!"[7]**

பொருநர் ஆற்றுப்படை குறிப்பிட்டுள்ளது.

அகல்நகர் வியன் முற்றம்[8]
புலிப்பொறிப் போர்க்கதவின்
திருத்துஞ்சும் திண்காப்பின்[9]
பூதம் காக்கும் புகலரும் கடிநகர்[10]
தொல்சீர்த் துறக்கம் ஒய்க்கும் – பெருந்துரை[11]
பல்வேறு உருவின் பதாகை நீழல்[12]
செல்கதில் நுழையாச் செழுநகர்
முட்டாச் சிறப்பின் பட்டினம்[13]

என்று பட்டினப்பாலை காவிரிபூம்பட்டினத்தின் சிறப்பினை விவரித்துள்ளது.

பட்டினப்பாலை பூம்புகாரின் நகர அமைப்பினையும், துறைமுகப்பட்டினக் காட்சிகளும், வாணிக நிகழ்ச்சிகளும், அயல்நாட்டு வாணிகக்காட்சிகளும் பலநாட்டுமக்கள் நிரம்பிய மொழி பல பெருகிய முட்டாச் சிறப்பின் பட்டினம் எனவும் சித்திரித்துள்ளது.

**உடை**

பூ, தாரை, மரவுரி, தோல் முதலியனவற்றை மிகப்பழங்காலத்தில் ஆடையாக அணிந்து வந்த மக்கள் படிப்படியாக வளர்ச்சியடைந்து சங்ககாலத்தில், நாகரிகம் பண்பாட்டினை விளக்கவல்ல ஆடைகளை அணிந்தனர். சங்க கால மக்கள் மெல்லிய ஆடைகளையே பெரிதும் விரும்பினர். “ஆவியன்ன அவிர் நூற்கலிங்கம்” “இழை மருங்கறியா நுழை நுதற் கலிங்கம்” “காம்பு சொலித்தன்ன அறுவை” என்ற சான்றுகள் சங்க மக்களின் ஆடைதேர் நிலையை தெரிவிக்கின்றன. ஆடைகள் செல்வநிலைக்கும் தகுதிக்கும் தகுந்தவாறு அணிந்தனர்.

இதனை,

போது விரி பகன்றைப் புதுமலர் அன்ன

அகன்று மடி கலிங்கம்[14]

வேற்று இழை நுழைந்த வேர்நனை சிதாஆர்[15]

என்றும்

புறநானூறு குறிப்பிடுகின்றது.

**உணவு**

எளிய மக்கள் கூழ் சமைத்து வெந்த கீரையைச் சேர்த்து உண்டனர். (புறம் 159). செல்வர்கள் பாலை உலையாக வைத்து உண்டாக்கிய சோற்றையும், நெய் கலந்த சோற்றையும் உண்டு மகிழ்ந்தனர் (குறுந் 210) இறைச்சியைப் பெரிதும் விரும்பி உண்டனர். ஈசலை மோரோடு கலந்து காய்ச்சிய புளிங்கறி உணவுப் பொருளாகக் கருதப்பட்டது. (புறம் 119)

உண்கலனில் சோறு படைத்து அதனைச் சுற்றிச் சிறு பொற்கலங்களில் கறிகளை வைத்து உண்டனர் (புறம் 160). முயல் முதலியவற்றைத் தீயிற் சுட்டும் உண்டனர். (புறம் 34) உணவு வகைகள் மட்டுமன்றி மதுவினையும் சங்க மக்கள் மிகுதியாக விரும்பி அருந்தினர். (புறம் 235). மூங்கிற் குழாய்களில் மதுவினை வைத்துப் பக்குவப்படுத்திப் பயன்படுத்தினர்.

**தொழில்**

சங்ககால மக்கள் தொழில் முயற்சி மிக்கவர்களாகவும், செல்வத்தின் பயன் ஈதல் என்பதை உணர்ந்தவர்களாகவும் சிறந்து விளங்கினார்கள். தொழில்திறம் மக்களின் உயிராற்றலாகப் பேணப்பட்டது. ஒரு தொழிலும் செய்யாத சோம்பர் கொண்டோர் உயிரற்ற பிணம்போல் இகழப்பட்டனர். சங்கத் தமிழகத்தின் பொருளாதாரம் கிராமத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்கியது. பொருளாதார வாழ்க்கையை, நிலங்களின் அமைப்பிற்கேற்றவாறு மக்கள் அமைத்துக் கொண்டனர். தொழில்

அடிப்படையில் உழவு நெசவு போன்றவையும் கைத்தொழில்களும் ஊர்ப்புறங்களில் மேற்கொள்ளப்பட்டன.

சங்ககால மக்கள், பொருள்இன்றி வாழ்தல் இரத்தலினும் இழிவானது என கருதிப் பொருளீட்டுவதில் பெரிதும் நாட்டம் கொண்டனர்.

**உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்**
**இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு**[16]

பொருள் தேடிப் பிரிந்த தலைவனை நினைந்து தலைவி ஏங்கி எதிர்பார்த்துக் காத்திருப்பாள். தலைவன் பொருள் ஈட்டித் திரும்புகையில் பொருள் ஈட்டித் திரும்புவதைத் தலைவிக்குப் பல்லி அறிவித்து துயரத்தை போக்கியிருக்கும் எனப் பலவாறு நினைத்த வண்ணம் வருவதை அகநானூற்றுப்பாடல் (351) அழகுற எடுத்துக் காட்டியுள்ளது.

உழவு, நெசவு போன்ற தொழில்கள் மட்டுமின்றி ஊரக மக்கள் பல தொழில்களை மேற்கொண்டனர். தச்சர், கொல்லர், குயவர், முத்து சங்கு எடுப்போர், பூ, சுண்ணம் விற்பவர் என பலத் தொழில் புரியும் மக்களும் இருந்தனர். அரண்மனைத் தொழில்கள், துறைமுகத் தொழில்கள், கட்டடத் தொழில்கள், வாணிகம் மற்றும் பல தொழில்கள் நகர்ப்புறங்களிலும் செய்யப்பட்டன.

உழவுத் தொழிலைச் சங்ககால மக்கள் பெரிதும் மதித்தனர். பெரும்பாலோர் உழவுத் தொழிலையே மேற்கொண்டனர். நெல்லும் கரும்பும் மருத நிலத்திலும், வரகு தினை முதலியன முல்லை நிலத்திலும் பழங்களும், கிழங்குகளும் குறிஞ்சி நிலத்திலும் பயிரிடப்பட்டன.

நாற்றுநடுதல், களைகட்டுதல் போன்ற வேலைகளைப் பெரும்பாலும் பெண்கள் செய்தனர். வேலை செய்யும் பொழுதில் களைப்புத் தெரியாது இருக்கும் பொருட்டு பாடல்கள் பல பாடினர். அப்பாடல்களே பிற்காலத்தில் பள்ளுப்பாடல்களின் தோற்றத்திற்குக் காரணமாக அமைந்தன.

நகரிய வாழ்க்கையில், தொழில்கள் பலதரப்பட்டதாகவும் புதுப்புதுத் தொழில்களாகவும் இருந்தன. நகர மக்கள் பலர் அரண்மனையில் வேலை செய்தனர். துறைமுகங்களிலும் பல வேலைகளை நகர மக்கள் மேற்கொண்டனர். வாணிகம் நகர மக்களின் முக்கியத் தொழிலாகவும் சிறந்த தொழிலாகவும் விளங்கியது.

நகர வாழ்க்கை வாணிகத்தை, அடிப்படையாகக் கொண்டு திகழ்ந்தது. பண்ட மாற்று முறை ஊரக வாழ்க்கையில் சிறந்து விளங்கியது. பண்ட மாற்று முறையில் எந்த குழப்பமும் இன்றி வாணிகம் நடந்தது. நகரங்களில் நடைபெற்ற வாணிகத்தில் ஆக்கிரமிப்பும் அபகரிப்பும் நடைபெறலாயிற்று. அதனால் வழக்குகள் ஏற்படலாயின. வழக்குகள் ஏற்பட்டதால் நடுவுநிலைமை நகர வாணிகத்தில் தேவைப்பட்டது. கொள்வதில் மிகைப்படாமலும், கொடுப்பதில் குறைவுபடாமலும் இருக்க வேண்டும் என அறிவுறுத்தப்பட்டன. நகரிய வாணிகத்தை விட ஊரக சந்தை எளிமையாகவும், நேர்மையாகவும் நடைபெற்றது. அங்கு எந்த ஒரு வழக்கும் தகராறும் இல்லை. நகரங்களில் பெருமளவில் பணப்புழக்கம் ஏற்படுத்தும் வாணிகத்தினால் தவறுகள் பல உருவாகக் காரணமாயின. ஊரக வாழ்க்கையில் தொழில்கள், மனிதர்கள் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு நெருங்கிப் பழக ஏதுவாயிருந்தன. உழவுத் தொழிலையே மற்றறைய தொழில்களினும் சிறந்த தொழிலாக சங்ககால மக்கள் கருதினர்.

நெசவு, குடிசைத் தொழிலாக நடைபெற்றது. குடும்பத் தொழிலாகவும் நடைபெற்றது. பருத்தி நூலாலும் பட்டு நூலாலும், எலி மயிராலும் ஆடைகளைச் சங்ககால மக்கள் உற்பத்தி செய்தனர். சங்க கால கிராம வாழ்க்கையில் தொழில் முக்கிய இடம் வகித்தது. தொழிலானது மரபு வழியாக மேற்கொள்ளப்பட்டதால் மரபு வழி ஒரே குடும்பமாக இருக்க வேண்டிய நிர்ப்பந்தமும் கிராமங்களில் குடும்பத்தோடு குடும்பமாக இணைந்து வாழவும் வழி வகுத்தது. பாரம்பரியம், தொழில்கள் மூலம் அடுத்து அடுத்து வரும் சந்ததியினர்களிடம் காணப்பட்டன.

**“பாரம்பரியமாய்த் தந்தை மகன் வழித் தமக்கு உகந்த வழியிலே காருக–வினை–குடிசைத்தொழில்–அரசின் தலையீடோ, எவ்விதக் குறுக்கீடும், இன்றி**

**இயங்கி வந்தது. இத்தொழில் மாந்தர் தனித்தனிச் சேரிகளில் வசித்துத் தங்கள் வீடே தொழிற்கூடமாகக் கொண்டவர்கள். செங்குந்தன், தச்சன், தட்டான், கொல்லன், கன்னான், கஞ்சகாரன், கருமான், சிற்பி, சித்திரகாரன் இவர்கள் தலைமுறை தத்துவமாய் வந்த அனுபவ அறிவின் விளைவாகப் படைத்த சிற்பம், சித்திரம், அணிகலன்கள், பஞ்சு, பட்டுக்கம்பளி நெசவு பல்வகைப் பித்தளை வெண்கலப் பாத்திரங்கள் முதலிய யாவும் அதிசயச் செய்நேர்த்தியுடன் கலைப்பண்பும் பெற்றுச் சிறந்து விளங்கின."[17]**

என்று தொழில் பாரம்பரியமாக வந்ததை கு. அருணாசலக் கவுண்டர் குறிப்பிட்டுள்ளார்.

## கல்வி

சங்க காலத்திலேயே கல்வி பெரிதும் மதிப்புடையதாகப் போற்றப்பட்டது. கல்வி பயின்றவர்கள் நன்கு மதிக்கப்பட்டனர்.

திருமணமான பிறகும், கல்வியின் பொருட்டு மனைவியைப் பிரிந்து சென்று கல்வி கற்பதும் வழக்கில் இருந்தது. அப்பிரிவினை ஓதற்பிரிவு என்றும் ஓதற் பிரிவிற்கான காலவரையறை மூன்றாண்டுகள் எனவும் தொல்காப்பியர் வரையறுத்துள்ளார். சங்க காலத்தில் ஆண்களைப் போலவே பெண்களும் கல்வியில் சிறந்து புலவர்களாக விளங்கியுள்ளனர்.

**அறிவுடை யோனாறு அரசும் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவன் அவன் கட்படுமே[18]**

என்னும் புறநானூற்றுப்பாடல் கல்வியின் பெருமையையும் இன்றியமையாமையும் நன்கு விளக்குகின்றது.

## விளையாட்டு

சங்ககாலப் பெண்கள் மணலில் சிறுவீடு கட்டுதல், கழங்காடுதல் அம்மானைக் ஆடுதல், கயிறு தாண்டுதல், பந்தாடுதல், ஊஞ்சலாடுதல், பூக்கொய்தல், புனலாடுதல் போன்ற பலவகை விளையாட்டுகளை விளையாடி உடல்நலனைப் பேணிக் காத்தனர்.

நகரங்களில் வசிக்கும் பெண்களோ, தங்கள் உடல் நலனுக்குத் தேவையான விளையாட்டுப் பயிற்சிகளில் நாட்டம் கொள்ளாது, ஆடை ஆபரணங்களிலும், தன்னை மிகவும் அழகுப்படுத்திக் காட்டுவதிலும் தங்களின் நேரங்களைச் செலவழித்தனர்.

சங்க காலத்தில் ஆண்களின் விளையாட்டுகளில் ஏறுதழுவலும், சிலம்பமும் முக்கிய இடத்தினைப் பெற்றன. சிறந்த விளையாட்டாக மட்டுமல்லாமல் தமிழர்களின் வீரத்தினை உலகளவில் பறைசாற்றுவதாக சிலம்பமும் ஏறுதழுவலும் விளங்கின. மக்களின் கலாச்சாரம் பண்பாடு, மரபு இவற்றினைப் பொறுத்து விளையாட்டுகள் அக்காலத்தில் அமைந்திருந்தன.

ஊர்ப்புறங்களில் சிறந்த விளையாட்டாக ஏறுதழுவலும், சிலம்பமும் விளங்கியதைப் போன்று நகரங்களில் போர்முறைகள் ஆண்களின் வீரத்தினை பறைசாற்றின. யானைப் படை, குதிரைப் படை போன்ற படைகளுக்கு வீரம்மிக்க ஆண்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மன்னர்களும் பொழுதுபோக்கிற்காக புலியுடன் போர் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

### சிலம்பம்

குறிஞ்சி, முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் நீண்ட கழிகளைப் பயன்படுத்தினர். முல்லை நில மக்கள் காட்டு விலங்குகளிடமிருந்து தங்களது ஆடு, மாடுகளை பாதுகாக்கவும், கள்வர்களிடமிருந்து தங்களைப் பாதுகாக்கவும் கம்புகளைப் பயன்படுத்தியுள்ளனர். எனவே சிலம்புக்கலை குறிஞ்சி, முல்லை நிலங்களில் தோன்றியது.

என சிலம்பக்கலையின் தோற்றம் பற்றி வே. செல்வம் கூறியுள்ளார்.

கம்பு, வேலாயுதம், வாள், கேடயம், கதாயுதம், கோடாரி போன்ற பல ஆயுதங்களும் சிலம்ப ஆயுதங்களாக விளங்கின. கம்பே சிலம்பத்திற்கு முதன்மையானது ஆகும்.

முல்லை, குறிஞ்சி நிலமக்களிடமிருந்து சிலம்பக்கலை தோன்றியது என்று வே. செல்வம் அவர்கள் கூறியதைப் போன்று அ. அருணாச்சலம் அவர்களும்,

முல்லை, குறிஞ்சி நிலமக்கள் மிருகங்கள் போரிடும் முறைகளைக் கூர்மையாக ஆராய்ந்து சிலம்ப ஆட்ட முறைகளை உருவாக்கி உள்ளனர்.

**யானைகள் துதிக்கை சுழற்றும் முறைகளிலிருந்தும், புலிகள் போரிடும் முறைகளிலிருந்தும், செம்மறி ஆடு பாய்ந்து முட்டுவது போன்றவற்றிலிருந்தும், மலைப்பாம்பு தன் இரையைச் சுருட்டிப் பிடிக்கும் முறையிலிருந்தும் சிலம்ப ஆட்டமுறைகளை உருவாக்கியுள்ளனர்.**[19]

தமிழ் நாட்டில் ஏறுதழுவல், சிலம்பம், களரி, மல்யுத்தம் போன்றவை வீரவிளையாட்டுகளாகும், சீனா, ஜப்பான் போன்றநாடுகளில் குங்பூ, கராத்தே, சுமோ ஆகியவை வீரவிளையாட்டுகளாகும்.

ஊர்ப்புறங்களில் சிலம்பம், ஏறுதழுவுதல் மல்யுத்தம் போன்ற விளையாட்டுகளும், ஆட்டுக்கிடாய்களை ஒன்றுடன் ஒன்று மோத விடும் விளையாட்டு, சேவல்களை ஒன்றுடன் ஒன்று மோதவிட்டு ரசிக்கும் விளையாட்டுக்களும் என பல விளையாட்டுகள் மூலம் மக்கள் தங்கள் பொழுதினைப் போக்கினர்.

ஊரகத்திருமண முறைகள்

ஊரக வாழ்க்கையில் திருமணம் நானிலங்களிலும் வேறு வேறு விதமாக அமைந்திருந்தது. மருதநில மக்களிடம் நடைபெற்ற திருமண நிகழ்ச்சியினை, அகப் பாடல்கள் இரண்டு அழகாக விளக்கியுள்ளன.

**உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை**
**பெருஞ்சோற்று அமலை நிற்ப, நிரைகால்**
**தண்பெறும் பந்தர்த் தருமணல் ஞெமிரி**
**மனை விளக்குறுத்து மாலை தொடர்,**
**கனை இருள் அகன்ற கவின் எழுகாலை**[20]

இல்லத்தின் முற்றத்தில் புது மணல் பரப்பி நல்ல நாளும் நிமித்தமும் குறிக்கப்பட்டு உரோகிணி சேர்ந்த நல்லநாள் அன்று காலை நேரம் தேர்ந்தெடுக்கப்படுகிறது. பந்தல் மலர்களால் அலங்கரிக்கப்பட்டு மங்கல விளக்கு ஏற்றப்பட்டு மணமுரசம் அறையப்படுகிறது. பூவும் நெல்லும் கலந்த நீரால் மணமகள் நீராட்டப்பட்டு மணமேடையில் அமர்த்தப்படுகிறாள். மணம் காண வந்தவர்களுக்கும், சுற்றத்தாக்கும் உளுந்தும், அரிசியும் கலந்த பொங்கல் வழங்கப்படுகிறது. புதல்வரை ஈன்ற மகளிர் நால்வர்க் கூடி கணவன் விரும்பும் மனைவி ஆகென மணமகளை வாழ்த்துகின்றனர். பின்பு கடவுளை வணங்குகின்றனர். திருமணம் நடந்த நாளின் இரவில் முறைப்படி மணமகளை மணமகனுக்குப் பேரிற்கிழத்தி ஆகுக எனக் கூறிச் சுற்றத்தார் தருகின்றனர். திருமண மேடையில் பெண்களே மணமகளைச் சூழந்து நின்று வாழ்த்துதல் சங்ககாலத்திலிருந்தே இருந்துவரும் பழக்கம் என்பதை மேற்கூறிய பாடலிலிருந்து அறியலாம்.

## ஏறுதழுவல்

சங்க காலத்தில் திருமணமுறைகளில் ஏறுதழுவல் சிறந்த இடம் வகித்தது. ஏற்றினை அடக்கி மணப்பெண்ணை மணக்கும் முறை மிகவும் வரவேற்கப்பட்டது.

பெண் குழந்தை பிறந்த அன்றே ஒரு குட்டி ஏற்றினை எடுத்து அதற்கு நன்கு கொழுப்பு நிறைந்த உணவினைக் கொடுத்து அவ்வேற்றுக் கன்றும் வளர்ந்தது, பெண் திருமண வயதையடையும் பொழுது, பெரிய கூர்மையான கொம்புகளையுடைய திமிறிய ஏறாக நிற்கும். அவ்வேற்றினை அடக்குபவனுக்குத் தன் மகளை மணமுடித்துக் கொடுப்பார்கள். ஏறுதழுவல் நிகழ்ச்சியை கலித்தொகைப் பாடல்கள் மிக அழகாக விளக்கியுள்ளன.

**ஒஓ இவள், பொருபுகல் நல்லேறு கொள்பரல்லால்**
**திருமாமெய் தீண்டல ரென்று கருமமா**
**எல்லோருங் கேட்ப அறைந்தறைந் தெப்பொழுதுஞ்**
**சொல்லாற் தரப்பட்டவள்[21]**

புகழுக்குரிய இவளுடைய ஏற்றை அடக்குமாறு பலமுறை பறையறைந்தும், எவராலும் அடக்க இயலவில்லை என்பதை அறிந்த தலைவன் எவராலும் அடக்க இயலாத ஏற்றை நான் அடக்குவேன் என்று கூறுகிறான்.

**"தமிழ்நாட்டில் முன் வீரயுகக்காலத்தில் "மணவினை" காரணமாக ஆயர்களால் வீர விளையாட்டாகத் தொடங்கப்பட்டு, இன்று அவர்களால் கைவிடப்பட்டு மதுரை வட்டார மறவர் பெருமக்களால் "சல்லிக்கட்டு' என்ற வீர விளையாட்டாகத் தமிழர்களின் வீரத்தை இன்றளவும் பறைசாற்றி வருகிறது".[22]**

என்று தமிழர்களின் வீரவிளையாட்டுகளில் முக்கியமானதாக ஏறுதழுவல் விளங்கியதை அருணாசலம் குறிப்பிட்டு உள்ளார்.

ஏறுகோள் விழா ஏறு தழுவல் துவக்கத்தில் இந்த ஏற்றினை அடக்கினால் இந்தப் பெண்ணினை மணமுடிக்கலாம் எனத் தனித்தனியே அறிவிக்கப்பட்டுத் தொடங்கியது.

இதனை,

**முள் எயிற்று ஓர் இவளைப் பெறும் இதோர்**
**வெள்ளேற்று எருத்து அடக்குவான்**
**ஒள்ளிழை வாடுநு கூந்தல் துயில் பெறும் வைமருப்பிற்**
**காரி கதன் அஞ்சான் கொள்பவன் ஈரரி**
**பெருஉப் பிணை மான் நோக்கின் நல்லாள் பெறூஉமிக்**
**குரூஉக் கண் கொலையேறு கொள்வான் வாக்குழை**
**வேய் உறழ் மென்தோள் துயில்பெறும் வெந்துப்பிற்**
**சேய் சினை அஞ்சான் சார்பவன்[23]**

என்னும் கலித்தொகைப் பாடலால் ஏறுகோள் விழா நடைபெற்றதை அறியலாம்.

முல்லை நிலத்தில் வாழும் மக்களிடம் நடைபெற்ற திருமண நிகழ்வினை முல்லைக் கலி பாடல் விளக்கியுள்ளது. பெண் எருமைக் கொம்பினை வழிபடும் சடங்கினை முல்லை நில மக்கள் குடும்ப விருத்திக்காக மேற்கொண்டுள்ளனர்.

**திருமணம் தாழப்பெய்து இல்பூவல் ஊட்டி**
**எருமைப் பெடையோடு எமர் ஈங்கு அயரும்**
**பெருமணம் எல்லாம் தனித்தே ஒழிய**
**வரிமணல் முன்துறை சிற்றில் புனைந்து**
**திரு நுதல் ஆயத்தார் தம்முள் புணர்ந்து**
**ஒருமணம் தான் அறியும்...**
**அரநெறி ஆயர் மகளிர்க்கு**
**இருமணம் கூடுதல் இல்லியல்பு அன்றே[24]**

ஏறுதழுவிப் பெண்ணை மணக்கும் முறையும் முல்லை நில மக்களிடம் காணப்பட்டது.

**திணைகலப்பு மணம்**

திணைக்கலப்பு மணங்களும் ஊரக வாழ்வில் நிகழ்ந்தன. வாளை மீன் விற்க வந்தவளை மருத நிலத் தலைவன் விரும்பியதைக் கூறும் பாடல் நெய்தல் நிலத் தலைவியை மருதநிலத் தலைவன் விரும்பிய காதலைக் காட்டும்.

மணப்பெண் ஒருத்தி உப்பு விற்று வருகையில் குறிஞ்சித்தலைவன் அவளை விரும்பியதை அம்மூவனாரின் அகப்பாடல் மூலம் அறியலாம்.

**நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்**
**சேரி விலைமாது கூறலின் மலைய**
**விளி அறி ஞமலி குரைப்ப வெரீஇய**
**மதர் கயல் மலைப்பின் அன்னகண் எமக்கு[25]**

களவு மணம், பரிசம் கொடுத்து மணத்தல், சேவை செய்து மணத்தல், திணைக்கலப்பு மணம், ஏறுதழுவி மணம் முடித்தல், மடலேறி மணமுடித்தல் போன்ற பல மண முறைகள் சங்ககாலத்தில் இருந்துள்ளன.

சங்க காலத்தில் காதல் மணம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. கிராம வாழ்க்கை முறையில் முழுக்க முழுக்கப் பெரும்பாலும் காதல் மணமே நடைபெற்றது. ஊரகங்களில் நிகழும் அக்காதல் மணங்களில் பெற்றோர்களுக்கு உடன்பாடு இல்லை என்றால் உடன்போக்கு நிகழ்ந்தது. தலைவன், தலைவி வேறு வேறு ஊர்க்காரர்களாக இருப்பினும் காதல் மணம் நிகழ்ந்தது.

**யாயும் ஞாயும் யாராகியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக்கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல் நீர்ப்போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே[26]**

இப்பாடல் தலைவன் தலைவியிடம் நிகழ்ந்த காதல் மணத்தினை அழகுறவெளிப்படுத்தியுள்ளது. சங்ககாலத்தில் காதல் மணம் பெரும்பாலும் வெற்றியடைந்தது. வெற்றியின் முக்கிய காரணங்களாகத் தலைவனின் நாணயமும், தலைவியின் உறுதியும் விளங்கின. காதல் மணம் பெற்றோர்கள் ஒத்துக் கொண்டு அறத்தோடு நிற்றலால் நடந்தது. அவ்வாறு பெற்றோர்கள் ஒத்துக்கொள்ளும் மணம் அவரவர் விருப்பத்திற்கேற்ப மணமகன் வீட்டிலோ மணமகள் வீட்டிலோ நிகழும். காதல் திருமணத்திற்கு சங்ககாலத்தில் பெரும்பாலும் மணமகளின் வீட்டிலேயே எதிர்ப்பு நிகழ்ந்தது. மணமகனின் வீட்டில் மணமகளை ஏற்றுக்கொள்ளும் முறை அன்றைய நாகரிகமாக விளங்கியது. தன் மகனையும் தம் குடும்பத்தையும் நம்பி வரும் மணமகளை ஏற்றுக்கொள்வதில் சங்ககாலத்தவர் பெருமையும், மகிழ்ச்சியும் அடைந்தனர்.

**பரிசம் கொடுத்து மணத்தல்**

தோடர், குறும்பர், புலையர், காடர் ஆகிய பழங்குடி மக்களிடம் பரிசம் கொடுத்து மணக்கும் முறை பழக்கத்தில் இருந்துள்ளது. நற்றிணை (234, 300) அகம் (288) ஐங்குறுநூறு (146, 147) முல்லைக்கலி (3) போன்ற சங்க நூல்கள் இப்பரிசம் கொடுத்து மணக்கும் முறையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளன.

இருளர், காட்டு நாயக்கர், பணியர் போன்ற இனத்தவரிடம் இப்பழக்கம் நிலவியுள்ளது. கலித்தொகையில் குறிஞ்சிக்கலியில் இம்மணமுறையினைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**மையல் மதியர் விளங்கு முகத்தாரை**
**வெளவிக் கொள்ளலும் அறன்[27]**

**கொடுப்பக்கொளல் மணம்**

மணமகனோ அவனுடைய பெற்றோரோ, திருமணம் செய்யும் பொருட்டுப் பெண்ணின் வீட்டிற்குச் சென்று பேசி மணமுடிப்பதாகும். இம்மணமுறையினைக் குறிஞ்சிக்கலியில் காணலாம்.

**விலங்கு ஓரார் சமய ஓர்ப்பின், இவள் வாழாள்!**
**புலம் புகழ் அருள! யானும் வாழேன்!**
**அதனால்! பொதி அவிழழ வைகறை வந்து நீ குறை கூறி**
**வதுவை அயர்தல் வேண்டுவல்! ஆங்குப்**
**புதுவை போலும் நின் வரவும், இவள்**
**வதுவை நாண் ஒழுக்கமும் காண்குவல்யானே[28]**

இங்குத் தோழி அறத்தொடுநின்று தலைவியின் களவினைக் கற்பொழுக்கமாக மாற்றுகிறாள்.

**கொடைமணம்**

தலைவனோ தலைவனின் பெற்றோரோ வந்து, தம் பெண்ணைக் கேட்க அவளுடைய பெற்றோர் மகிழ்வுடன் நல்குவது கொடை மணம் எனப்படும். இக் கொடை மணம் தானக் கொடை விலைக்கொடை, நிலைப்பாட்டுக் கொடை என மூவகைப்படும்.

தானக் கொடை என்பது, ஒருவர் தம் பெண்ணைத் தக்க ஏழை மகனுக்குத் தாமே செலவுகள் செய்து மணம் புரிந்து வைப்பதாகும். விலைக் கொடை என்பது,

தம் பெண்ணிற்கு ஈடான தொகையினையோ, பொருளையோ மணமகன் வீட்டாரிடம் பெற்றுக் கொண்டு மணமுடிப்பது ஆகும். நிலைப்பாட்டுக் கொடை என்பது கொல்லேறு கோடல், புலிப்பால் கறத்தல், பகைவரையழித்தல், வில் நாணேற்றல் பெருங்கல் தூக்கல் போன்ற நிபந்தனைகளில் ஒன்றினை செய்து வெல்லும் மணமகனுக்குத் தம் பெண்ணை மணமுடித்துக் கொடுப்பதாகும்.

**காதல் மணம்**

ஒரு தலைவனும் தலைவியும் பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் தெரியாது ஒருவரையொருவர் காதலித்து கணவனும் மனைவியுமாக வாழ்வதாகும். இக்காதல் மணம் களவில் தொடங்கி கற்பில் முடிவதாகும். இக் காதல் மணம் களவு மணம் எனப்படும். உடன்போக்கு, அறத்தொடுநிலை எனும் இருவகைகளுள் ஒன்றால் இக்களவு மணம் வெளிப்படும்.

**உடன்போக்கு**

தலைவன் தலைவியின் களவொழுக்கம் பெற்றோர்க்குத் தெரியவர அவர்கள் மணமுடிக்க மறுக்கிறார்கள். தலைவன் தலைவி களவொழுக்கம் கற்புமணத்தில் முடிய வேண்டும் என விரும்பி இருவரும் உடன்போக்குச் செல்வர்.

உடன்போக்கினை மேற்கொண்ட தலைவன் திருமணத்தைத் தன் வீட்டிலேயே வைத்துக் கொள்வான். யார் வீட்டில் திருமணம் நடப்பதாக இருப்பினும், அதற்கு முன்பு மணமகள் காலில் அவள் பெற்றோரால் அணியப்பட்ட சிலம்பை நீக்குவதற்கு ஒரு சடங்கு செய்யப்படும். அதுவே சிலம்பு கழி நோன்பு' எனப்படும். இதனை,

**நும்மனைச் சிலம்பு கழிஇய அயரினும்**
**எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்**
**சொல்லின் எவனோ மற்றே வென்வேல்**
**மையற விளங்கிய கழலடிப்**
**பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே**[29]

என ஐங்குறுநூறு சிறப்பித்துள்ளது.

**கவர்ந்துசென்று மணத்தல்**

ஒரு பெண்ணை, அவளின் விருப்பம் இன்றியும் அவள் பெற்றோரின் இசைவுமின்றியும் கவர்ந்து சென்று மணத்தல் இம்முறைச் சார்ந்ததாகும்.

ஒரு மறக்குடிப் பெண்ணை மணக்க விரும்பிய வேந்தன் அம்மறக்குடியார் இசையாததால் அவர்களிடம் போர் புரிவான். அம்மறவர்கள் தம் குடியின் மானத்தைக் காக்கும் பொருட்டு வேந்தனை எதிர்த்து போரிடுவர் இதனையே 'மகட்பாற் காஞ்சி' என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்.

**மடலேறி மணத்தல்**

தலைவன், தலைவயின் மேல் காதல் கொண்டு அது மணத்தில் முடியா நிலையில் மடலேறவும் துணிவான் உடம்பெல்லாம் சாம்பல்பூசி எருக்கமாலையணிந்து தலைவியின் உருவை ஒரு துணியில் வரைந்து அதனைக் கையில் ஏந்தி பன மட்டையால் செய்த ஒரு பொய் குதிரையின் மேல் ஏறித் தெருத் தெருவாகச் சென்று நான் நேசிப்பவள் இவளே, இவளை எனக்கு மணமுடித்துத் தாருங்கள் என்பான். அவனின் மன உறுதியயையும் தலைவிமேல் அவன் கொண்ட காதலையும் உணர்ந்த தலைவியின் பெற்றோர்கள் மணமுடிக்க இசைவர். இம்முறையே மடலேறி மணமுடித்தலாகும்.

திணைப் பிரிவினாலும், நிலப்பிரிவினாலும் தொழில் பிரிவினாலும் சங்ககாலத்து ஊரக மக்களிடம் திருமண முறைகள் பலவாறு இருந்தன. இருப்பினும் அவர்களிடம் ஒருமுறையே திருமணம் செய்து கொள்ளும் உயரிய பழக்கம் இருந்தது.

**நகரியத் திருமண முறை**

சங்ககாலத்தில் நகரங்களில் வாழும் மக்கள் கடைபிடித்த திருமண முறைகள் ஊரகங்களில் கடைபிடித்த திருமணமுறைகளினின்றும் வேறுபட்டிருந்தது. நகரியத் திருமண முறைக்குச் சிலப்பதிகாரம் காட்டும், கோவலன் கண்ணகி திருமணம் ஓர் அரிய சான்றாகும்.

ஆரியர்களின் மணவினைகள் நகரிய மக்களிடம் காணப்பட்டன. அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல், தீ வலம் வருதல் போன்ற மணநிகழ்வுகள் நகரிய மக்களிடம் புகத் தொடங்கின. ஆரியர் மணவினை தமிழகத்தில் புகுந்துவிட்ட குறிப்பைக் கலித்தொகை முதன் முதலில் சுட்டுகின்றது.

**போதவிழ் பணிப் பொய்கைப் புதுவது தரைவிட்ட**
**தாதுசூழ் தாமரைத் தனிமலர்ப் புறம் சேர்பு**
**காதல்கொள் வதுவைநாள் களங்கத்துள் ஒருங்கிய**
**மாதர்கொள் மானோக்கின மடந்தைதன் துணையாக**
**ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான் போல்**
**ஆய்தூவி அன்மைதன் அணிநடைப் பெடையோடு**
**மேதகத் திரிதருஉம் மிகுபுனல் நல் ஊர்**[30]

ஆரியர்களின் வேள்வியும் மணவினையும் நகரிய மக்களிடம் போற்றப்பட்டன. பூம்புகார் நகர அரசர், வணிகர் முதலானோர் அவற்றினைப் பின்பற்றினர். சிலப்பதிகாரத்தில் கோவலன் – கண்ணகி திருமணத்தில் மாமுது பார்ப்பான் மறைவழிகாட்டுதலும் தீவலம்வருதலும் குறிப்பிடப்பட்டுள்ளமை கொண்டு பூம்புகார் நகரிய மக்களின் திருமண நிகழ்வுகளை அறிய முடிகிறது.

ஆரியர்களின் வேள்வியும் மணவினையும் நகரிய மக்களிடம் போற்றப்பட்டன. பூம்புகார் நகர அரசர், வணிகர் முதலானோர் அவற்றினைப் பின்பற்றினர். சிலப்பதிகாரத்தில் கோவலன்–கண்ணகி திருமணத்தில் மாமுதுபார்ப்பான் மறைவழி காட்டுதலும் தீவலம் வருதலும் குறிப்பிடப்பட்டுள்ளமை கொண்டு பூம்புகார் நகரிய மக்களின் திருமண நிகழ்வுகளை அறிய முடிகிறது.

**இப்பெருங் குரவரும் ஒருபெரு நாளால்**
**மணவணி காண மகிழ்ந்தனர்; மகிழ்ந்து**
**யானை எருத்தத்து அணியிழையார் மேலழிரீஇ**
**மாநகர்க் கீந்தார் மணம்...**
**அவ்வழி,**
**முரசியம்பின; முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம்**
**வெண்குடைவெண்குடை**

அரசெழுந்ததோர் படியெழுந்தன அகலுள்
மங்கல அணிபெழுந்து
விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
ஏந்திள முலையினர் இடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்
போதொடு விரிகூந்தல் பொலனறுங் கொடி அன்னார்
காதலன் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல்
தீதறு கென ஏத்திச் சின்மலர் கொடுதூவி
அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார்.[31]

எனும் சிலப்பதிகாரத்தின் மங்கலவாழ்த்துப் பாடலில் அடிகளில் கோவலன்–கண்ணகி திருமணக் குறிப்புகள் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

சிலம்பு காட்டும் மணவினைச் செய்திகள் ஊரக மக்களிடம் காணப்படாத புதியனவாகக் காணப்படுகின்றன.

மணமக்களின் வயதுக் குறிப்புகள் (கோவலன்–16, கண்ணகி–12), மங்கல அணி பற்றிய குறிப்பு, மணச் செய்தியை மகளிர் யானை மீது அமர்ந்த நகரத்தில் உள்ளவர்களுக்கு அறிவித்தல், மங்கல அணியை ஊர்வலமாக எடுத்த வருதல், மணப்பெண்ணை அருந்ததியோடு இணைத்து நினைத்தல், முதிய பார்ப்பனன் திருமண மறைவழிகாட்டல், மணமக்கள் தீவலம் வருதல் முதலியவை நகரியத் திருமணமுறைகளாக விளங்கின.

ஒருவனுக்கு ஒருத்தி என்ற தமிழர் கொள்கை நகரிய மக்களிடம் வழுவியதையும் (கோவலன்–மாதவி) காணமுடிகிறது. மேலும் நகரிய மக்களிடம் பரத்தையர் செல்வாக்கு மிக்கு இருந்துள்ளது.

ஊரக மக்களிடம் மறம் சார்ந்த மணமுறைகள் காணப்பட்டன. இல்வாழ்க்கையில் எளிய முறை கடைப்பிடிக்கப்பட்டு குடும்பத்தில் இன்பம் நிலவியது

விருந்தோம்பல் மிகச் சிறந்த பண்பாகப் போற்றப்பட்டது. தொழில் முறை அடிப்படையிலேயே பிரிவுகள் இருந்தன. தொழில் சார்ந்த வாழ்க்கையாக இருப்பதால் கூட்டுக்குடும்பம் பேணப்பட்டது. உயிரினும் சிறந்தது நாண், நாணினும் சிறந்தது கற்பு என்ற கோட்பாடு ஒவ்வொருவரிடமும் நிலவியது. பெண்களும் வீரம் செறிந்தவர்களாக இருந்தனர்.

நகரங்களுக்கு உரிய தேவை சங்க காலத்தில் குறைவாகவே இருந்தது. நகரங்களுக்குச் செல்வாக்கும் குறைவாக இருந்தது. ஊர்கள் அதிகமாகவும், செல்வாக்குப் பெற்றும் விளங்கின. தொழில்களில் மரபுவழித் தொழில் ஊரகங்களில் பின்பற்றப்பட்டன. நகரங்களின் புதுப்புதுத் தொழில்களும் அதனால் வழக்குகளும் ஏற்பட்டன. ஆகையால் நடுவுநிலைமை தவறக்கூடாது என்றும் ஏமாற்றுதல் கூடாது என்றும் அறிவுறுத்தப்பட்டனர். கொள்வதும் மிகை படாது, கொடுப்பதும் குறைபடாது இருக்க வேண்டும் என்று எழுதவேண்டிய சூழ்நிலை நகரிய மக்களிடம் காணப்படும் பல வகை வாணிகங்களால் ஏற்பட்டது எனலாம். எனவே சங்க காலத்தில் நகரிய வாழ்க்கையினை விட ஊரக வாழ்க்கைமுறை பெரிதும் போற்றப்பட்டது, விரும்பப்பட்டது.

## அடிக்குறிப்புகள்

1. புறம் பா. 279
2. Thaninayagam x.s. Landscape and Poetry, Asia Publishing, London p.39
3. பொருநர். பா. 214–216
4. புறம் பா. 52, 13–14
5. புறம் பா. 375, 1–3
6. பொருநர். பா. 177–182
7. பொருநர். பா. 246–248
8. ப. பா. 20
9. ப. பா. 40–41
10. ப. பா. 57
11. ப. பா. 105
12. ப. பா. 182–185
13. ப. பா. 218
14. புறம் பா. 393, 4–6
15. புறம் பா. 69, 5
16. குறும். பா. 283, 5–7
17. கு. அருணாசலம்கவுண்டர், 'பண்டைத் தமிழக வேளாண்மை வணிக வாரியங்கள்', ப. 7
18. புறம் பா. 183, 4–8
19. அ. அருணாசலம், 'தென்பாண்டி தமிழரின் சிலம்ப வரலாறும்', ப. 23
20. அகம். பா. 86, 1–5
21. கலி. பா. 14, 12–2
22. அ. அருணாசலம், 'தமிழர் வீர விளையாட்டு', ப. 31
23. கலி. பா. 104
24. கலி. பா. 14
25. அகநானூறு, பாடல் எண். 140, 6–10
26. குறும். பா. 40, 6–9
27. கலி. பா. 26, 8–9
28. கலி. பா. 16, 9–13
29. ஐங்குறு. பா. 399
30. கலி. பா. 3
31. சிலம்பு. புகார்க்காண்டம் 40–64

# இயல் ஐந்து

# சங்க கால மக்களின் நாகரிகமும் பண்பாடும்

அ. அன்றாட வாழ்க்கை

ஆ. பழக்க வழக்கங்கள்

இ. நம்பிக்கைகளும் சடங்குகளும்

ஈ. விழாக்களும் பண்டிகைகளும்

உ. பொழுது போக்கும் விளையாட்டும்

ஊ. வாழ்வியல் மதிப்பும் மானமும்

# சங்க கால மக்களின் நாகரிகமும் பண்பாடும்

சங்க காலத்தில் மக்களின் வாழ்க்கை முறை நகரங்களிலும் சிற்றூர்களிலும் வேறுவேறு விதமாய் அமைந்திருந்தது. அவர்களின் வாழ்க்கை முறையிலிருந்து நாகரிகமும் பண்பாடும் வெளிப்பட்டன. நகரங்களில் வாழ்ந்த மக்களிடம் காணப்பட்ட நாகரிகமும் பண்பாடும் ஒருவிதமாகவும், சிற்றூர்களில் வாழ்ந்த மக்களிடம் காணப்பட்ட நாகரிகமும் பண்பாடும் பிறிதோர் விதமாகவும் இருந்தன.

நகரங்களில், வாணிகம், ஏற்றுமதி, இறக்குமதி காரணமாக வெளிமாநிலத்தவர்களின் தொடர்பும், வெளிநாட்டவர்களின் தொடர்பும் அதிகமாகக் காணப்பட்டன. வெவ்வேறு மொழி பேசுபவர்கள் நகரங்களில் அதிகமாக இருந்தனர். நகரங்களில் வாழ்ந்த மக்களிடம் நாகரிகக் கலப்பும் பண்பாட்டுக் கலப்பும் காணப்பட்டன. பண்பாட்டு வளர்ச்சிக்கு ஒருவிதத்தில் நகரங்கள், காரணமாக இருந்தாலும் பண்பாட்டுத் தேய்விற்கும் நகரங்களே ஒருலிதத்தில் காரணமாக அமைந்தன.

சிற்றூர்களில் வாழ்ந்த மக்களிடம் நாகரிகப் பண்பாட்டுக் கலப்பு சிறிதும் காணப்படவில்லை. ஊரகங்களில் வாழும் மக்களின் தொழில்கள் குடும்பம் சார்ந்து காணப்பட்டதால் அங்குக் கட்டுக்கோப்பு நிலவியது. ஊரக மக்களின் கட்டுக்கோப்பு அவர்களிடம் பண்பாட்டுச் சிதைவின்மை ஏற்படாமல் இருக்க வழிகோலியது.

நாகரிகத்திலும் பண்பாட்டிலும் சங்ககால மக்கள் சிறந்து விளங்கினர். அவர்கள் அகப்புற வாழ்க்கையில் உயர்ந்த நெறிகளைக் கடைபிடித்து செம்மாந்து வாழ்ந்தனர். பலதரப்பட்ட மக்கள் கலந்துறவாட நகரவாழ்க்கை ஏதுவாயிருந்தது. பண்பாட்டில் சிறந்து விளங்கிய மக்கள் நகரங்களில், நாகரிகத்தின் உச்சக்கட்ட நிலையிலும் சிறந்து விளங்கினர்.

சங்கத் தமிழக நகரங்களிலும், நகரங்களைச் சார்ந்த ஊரகங்களிலும் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்கள், அவர்களின் நம்பிக்கைகள், சடங்குகள், விழாக்கள், பண்டிகைகள், பொழுதுபோக்குகள், விளையாட்டுகள் முதலியன பற்றியும் விரிவாகவும் விளக்கமாகவும் ஆய்தல் அவசியமானதாகும்.

ஒரு நாட்டில் வரலாற்றாராய்ச்சியும், பண்பாட்டாராய்ச்சியும் சிறப்பாக வளர வேண்டுமானால் அந்நாட்டின் வரலாற்றினையும் அந்நாட்டு மக்களின் பண்பாடு நாகரிகம் பற்றியச் செய்திகளையும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ள வேண்டும்.

**பண்பாடு**

தனி மனிதர்கள் சேர்ந்து குடும்பமும், பல குடும்பங்கள் சேர்ந்து சமுதாயமும் உருவாகின்றன. தனி மனிதர்கள் சமுதாயத்தின் ஆணிவேராக அமைகின்றனர். அவர்களின் நடத்தை, ஒழுக்கம், நம்பிக்கை, செயல், குறிக்கோள் முதலியன சமுதாயத்தைத் திருத்தமுடையதாக ஒருங்கமைக்கின்றன. இத்தகைய ஒருங்கமைப்பே பண்பாடு ஆகும்.

பண்பாடு என்னும் சொல் சங்க இலக்கியங்களில் இடம் பெறவில்லை. பண்பு என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது. நாகரிகம் என்ற சொல் பண்பாட்டினைக் குறிப்பதற்குச் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**பண்பு எனப்படுவது தன் கிளை அறிந்து ஒழுகுதல்**[1]

பண்பு என்பது, உலக ஒழுக்கங்களை அறிந்தொழுகுதல் என்ற பொருளில் வந்துள்ளது.

"**பாடறிந்து ஒழுகும் பண்பினர்**"[2] என்ற புறநானூற்று வரியில் பண்பினர் என்பது செய்யும் முறைமையை அறிந்து நடக்கும் குணமுடையவர் என்ற பொருளைக் குறிக்கிறது.

திருவள்ளுவர் 'பண்புடைமை' என்ற அதிகாரத்தில், பண்பெனப்படுவது நற்குணமும் நல்லொழுக்கமும் ஆகும் என்று விளக்கியுள்ளார். பண்படுத்தப்பெறும் நிலமானது நல்ல விளைச்சலைத் தருவதைப் போன்று பண்படுத்தப்படும் உள்ளமும் நல்ல பயனைத் தரும். பண்புடையவர்கள் இருப்பதால்தான் உலகம் வாழ்கின்றது என்கிறார்.

இதனை,

பண்புஉடையார்ப் பட்டுண்டு உகலம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்[3] என்றும்,

கல்வி கேள்விகளால் சிறந்து விளங்கும் மதியை உடையவராயினும் மக்களுக்கே உரிய பண்பினைப் பெற்றிராவிடின் அவர் மரத்துக்கே ஒப்பாவார் என்பதை,

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்[4]

ஒருவர் பெருஞ்செல்வத்தினைப் பெற்றிருப்பினும் பண்புடைமை இல்லையெனில் அவர் பெற்ற செல்வம் அனைத்தும் மாசுடைய கலத்தில் ஊற்றிய பால்போல் பயனற்றுவிடும்.

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று[5]

என்றும் குறிப்பிடுவதன் மூலம் பண்புடைமையின் சிறப்பினை எடுத்துக்காட்டுகின்றார்.

சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட அகராதியிலும், வின்ஸ்லே என்பவர் வெளியிட்ட தமிழ் ஆங்கில அகராதியிலும் பண்பாடு என்ற சொல் இடம் பெறாமல் பண்பட்டவன், பண்பாளன், பண்பு ஆகிய சொற்களே இடம் பெற்றுள்ளன.

கலைக்களஞ்சியத்தில், பண்பாடு என்பதற்கு விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. பண்பாடு என்பது சமுதாயத்திடமிருந்து பெறப்படும் செல்வமாகும். பண்பட்ட சமுதாயம் எனப் பெயர்பெறும் சமுதாயம், உலகில் புகழ் என்ற செல்வத்தைப் பெறுகின்றது. மனிதனை பிறவற்றிலிருந்து வேறுபடுத்துவது பண்பாடே. சமயம், மொழி, கலைகள், நீதிநூல்கள் போன்றவற்றின் மூலம் பண்பாடு மக்களிடம் பரவுகின்றது.

பண்பாடு பொருள் பற்றியது, ஆன்மா பற்றியது என இருவகைப்படும். கருவிகள், அணிகள், ஆடைகள் முதலியன பொருள் பற்றிய பண்பாட்டினைக் குறிக்கின்றன. விருந்தோம்பல் போன்ற பழக்கவழக்கங்கள், ஒழுக்கத்திற்காக உயிர்விடும் கொள்கைகள், இன்னாசெய்தாருக்கும் இனியனசெய்தல் போன்ற மனப்பான்மைகள், உயர்ந்த கருத்துகளைக் கற்பிக்கும் கலைகள் முதலியன, ஆன்மா பற்றிய பண்பாட்டினைக் குறிக்கின்றன.

நாகரிகம்

**எகிப்திய நாகரிகம் உலக நாகரிகங்களுள் மிகவும் பழமை வாய்ந்தது. அதற்கும் நீண்ட காலத்திற்கு முந்தியது தமிழர்களின் நாகரிகமாகும். உலகின் பழைய நாகரிகங்களைப் படைத்த பல்வேறு இனத்தினர் நாடோடிகளாய்த் திரிந்த காலத்திலேயே தமிழர்கள் நாடும் நாகரிகமும் நற்கலைகளும் கண்டு உயர்ந்திருந்தனர். அறிவார்ந்த அரசியல் அமைப்பும், அன்பார்ந்த சமுதாய ஒருமைப்பாடும், அறமார்ந்த தொழில், வணிகச் சிறப்பும், அழகார்ந்த இலக்கியச் சிறப்பும் அக்காலத்திலேயே தமிழர்கள் கண்டவைகளாகும்.”[6]**

சங்க இலக்கியங்களில் நாகரிகம் என்ற சொல் பண்பாடு என்ற பொருளைக் குறிக்கின்றது.

இதனை,

> **முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின்**
> **நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்[7]**

என்று நற்றிணையும்

> **பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க**
> **நாகரிகம் வேண்டு பவர்[8]**

என்று திருக்குறளும் குறிப்பிட்டுள்ளன.

ஐவகை நிலங்களின் இயற்கை அமைப்புகளுக்குத் தக்கபடி பண்பாடுகளைப் பெற்ற மக்கள் நகர்களில் சென்று வாழ்ந்தபோது ஐவகை நிலங்களின் பண்பாடுகளும் கலந்தன. அத்தகைய பண்பாட்டுக்கலப்பிலும் வாழ்க்கை முறைகளிலும் நாகரிகம் வெளிப்பட்டது.

"நாகரிகம் உணவிலும் உடையிலும் இதுபோன்ற பிற வாழ்க்கையின் ஆரவாரங்களிலும் தோன்றும் ஒன்றாகும். பண்பாட்டில் நாகரிகம் என்ற சொல்லுக்கு இடம் உண்டு. சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப்பாங்கின் வெளிப்பாட்டையே பண்பாடு என்கிறோம். அந்த வெளிப்பாடு சுவையுணர்வாகவும், நடை உடை பாவனைகளாகவும் தோன்றும். அப்பண்பாடில்லாதவனைக் காட்டுமிராண்டி என்கிறோம். வாழ்வின் பலப்பல போக்குகள் அமைந்த பல்வேறு நிலைகளையும் இந்தப்பண்பாடென்பது குறிக்கும். உடலைப்பற்றிய நன்னிலை, மனத்தைப் பற்றிய தூய்மைநிலை, பேச்சின் இனிமை இவையெல்லாம் பண்பாட்டில் அடங்கும்"[9] என்பர் தெ.பொ.மீ

நாகரிகமும் பண்பாடும்

"உலகிலுள்ள பல்வேறு மக்கள் தொகுப்புகளின் அருமை பெருமைகளையும், சீரையும், சிறப்பையும் அளவிட்டு எடைபோட்டுப் பார்ப்பதற்கு, இரண்டு அளவைகளை வைத்திருக்கிறார்கள் அறிஞர் பெருமக்கள். ஒன்று நாகரிகம் (Civilization) மற்றொன்று பண்பாடு (Culture) என்பதாகும். நாகரிகம் மாந்தரது புறத்தோற்ற வளர்ச்சியின் செம்மையைக் குறிப்பது. பண்பாடு என்பது மாந்தரது அகவுணர்வு வளர்ச்சியின் சீர்மையைக் குறிப்பது."[10]

நாகரிகம் என்பதும் நகர் என்பதும் தூயத் தமிழ்ச் சொற்களாகும். நாகரிகம் நாட்டுக்கு நாடு, இனத்துக்கு இனம், காலத்துக் காலம் மாறுபடும் இயல்புடையது. பண்பாடு என்பது பொதுவாகக் கடைப்பிடிக்க வேண்டிய ஒன்றாகும். பண்பாடு அகத்தின் தொடர்புடையது.

உள்ளத்தின் சிறப்பாலும் செயலாலும் சொல்லாலும் பண்பாட்டினை அறியலாம். நாகரிகம் உணவு, உடை, வசதி வாய்ப்புகள், அணிகலன்கள், வீடு, ஊர்தி நகர வாழ்க்கைமுறை போன்ற புறத்தோற்றத் தொடர்புடைய வெளிப்பாடுகளால் வெளிப்படும்.

பண்பாட்டின் அடிப்படையில் நாகரிகம் மாற்றமுறுதலும், நாகரிகத்தின் மூலம் பண்பாடு வெளிப்படுதலும் உண்டு. அதே போன்று நாகரிக வளர்ச்சிக்கு பண்பாடு துணைபுரியும்; பண்பாட்டு வளர்ச்சிக்கு நாகரிகம் உறுதுணையாக விளங்கும்.

**தமிழில் நகர் அல்லது மருதநிலப் பேரூரில் வளர்ந்த பண்பாடே நாகரிகம் எனப்பட்டது. ஆயினும் நகர நாகரிகம் தாண்டி பட்டின நாகரிகம் நாடு கடந்த உலகப் பண்பாக வளர்ந்தது. தமிழர் நாகரிகத்துக்கு அடிப்படையான பண்பு இவ்வுலகப் பண்பேயாகும்.**[11]

நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை. பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம். இலக்கணப்பிழையின்றி பேசுவது, எல்லா வகையிலும் துப்புரவாயிருப்பது. உடல் நலத்திற்கு ஏற்ற வீட்டில் குடியிருப்பது. நன்றாய்ச் சமைத்து உண்பது போன்றவற்றினை நாகரிகக் கூறுகளாகக் கருதலாம்.

எளியாரிடத்து இனிதாகப் பேசுவது, விருந்தோம்புவது, இரப்போர்க்கிடுவது, இயன்றவரை பிறர்க்கு உதவுவது, மானம்கெடின் உயிரைவிடுவது போன்ற கொள்கைகளைப் பண்பாட்டின் கூறுகளாகக் கருதலாம்.

தமிழர்கள் பிறநாட்டினருடன் தொடர்பு கொள்வதற்கு முன்பே நாகரிகத்தில் சிறந்து விளங்கினர் என்பதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

இலக்கியம் என்பது மக்களின் வாழ்வில் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்தாகக் காணப்படுவதால் அவை மக்களின் பண்பாட்டினையும் நாகரிகத்தையும் பறைசாற்றுகின்றன.

**இலக்கியம் என்ற ஒன்று மக்கள் வாழ்வியலில் எப்பொழுதும் தவிர்க்க முடியாத ஒன்றாக, வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்ததாகக் கலந்து கிடக்கிறது. உலக வரலாற்றிலே எந்தவொரு மொழிக்கும் இலக்கியம் இல்லாமல் போனதில்லை. எல்லா மொழிகளுக்கும் இலக்கியம் உண்டு. எல்லா சமுதாயங்களுக்கும் இலக்கியம் உண்டு.**[12]

சங்ககாலச் சமுதாய அமைப்பையும் அக்காலத்து மக்களிடம் தோன்றிய பண்பாட்டினையும் இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன. சங்கப்பாடல்கள் குறிப்பிடும் பண்பு நலன்களின் மூலம் அக்காலச் சமூகத்தின் மேம்பாட்டினை நன்கு அறியலாம்.

சங்க காலத்து மக்கள் நேர்மை, எளிமை, தெளிவு போன்றவற்றினை இயற்கையாகப் பெற்றிருந்தனர். வாழ்வியல் கொள்கைகள், கடவுட் கொள்கைகள், உலகக்கண்ணோட்டம் முதலியன உயர்ந்த நிலையில் இருந்தன.

சான்றாண்மைக்குரிய இயல்புகளான அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை, பணிவுடைமை, விருந்தோம்பல், இன்னாசெய்தார்க்கும் இனியனசெய்தல் போன்ற நற்குணங்கள் மக்களிடம் நிறைந்து காணப்பட்டன.

நல்லந்துவனார் என்னும் சங்கப்புலவர் நெய்தற் கலிப்பாவில்,

> **"ஆற்றுதல்" என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்,**
> **"போற்றுதல்" என்பது புணர்ந்தாரைப் பிரியாமை,**
> **"பண்பு" எனப்படுவது தன்கிளை அறிந்து ஒழுகுதல்,**
> **"அன்பு" எனப்படுவது தன்கிளை செறாஅமை,**
> **"அறிவு" எனப்படுவது பேதையர் சொல் நோன்றல்,**
> **"செறிவு" எனப்படுவது கூறியது மறாஅமை,**
> **"நிறை" எனப்படுவது மறைபிறர் அறியாமை,**
> **"முறை" எனப்படுவது கண்ணோடாது உயிர் வௌவல்**
> **"பொறை" எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்**[13]

என்று குறிப்பிடுகிறார்

சங்ககால மக்களிடம் அனைத்து நற்பண்புகளும் விளங்கியதை இப்பாடல் வழி அறியலாம்.

சங்ககால மக்கள் தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்தல், கிடைத்தற்கரிய அமுதமே கிடைப்பினும் பிறருடன் பகிர்ந்துண்ணுதல், செய்யும் செயலால் புகழ் உண்டாகுமானால் உயிரையும் கொடுத்து அந்தச் செயலைச்செய்தல், உலகையே கொடுத்தாலும் பழிநேரும் செயலை செய்யாதிருத்தல், வாழ்வில் வெறுப்பற்று இருத்தல் போன்ற உயர் பண்புகளைப் பெற்று நாகரிகத்திலும், பண்பாட்டிலும் சிறந்து விளங்கி மகிழ்வோடு வாழ்ந்தனர்.

சங்ககால மக்களின் நாகரிகமும், பண்பாடும் என்னும் இவ்வியலினை,

1. அன்றாட வாழ்க்கை
2. பழக்க வழக்கங்கள்
3. நம்பிக்கைகளும் சடங்குகளும்
4. விழாக்களும் பண்டிகைகளும்
5. பொழுதுபோக்கும் விளையாட்டும்
6. வாழ்வியல் மதிப்பு மானமும்

என்னும் பகுப்பில் ஆராயலாம்.

**அன்றாடவாழ்க்கை**

**சங்ககால மக்களின் அன்றாட வாழ்க்கை பண்பாட்டினை வெளிப்படுத்துகிறது. 'பண்பாடு என்பது, மக்கட்கு வேண்டிய உண்டியும் உடையும் உறையுளுமாகிய அடிப்படைத் தேவை முதலாக வாழ்வியலின் அனைத்துக் கூறுகளிலும் விரவி நிற்பதாகும்.**[14] என்று குறிப்பிட்டுள்ளார்.

சங்ககால மக்களின் வாழ்க்கை முறை இடத்துக்கு இடம் மாறுபட்டிருந்தது. அம்மாறுபாட்டிற்கு அந்நிலமக்கள் செய்யும் தொழிலே காரணமாக அமைந்தது.

அவர்களின் வாழ்க்கை முறைக்கு முக்கிய தேவைகளான உணவு, உடை, உறையுள், தொழில், கல்வி, கலைகள் முதலியன அன்றாட வாழ்க்கையின் தேவைகளாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**உணவு**

உணவு வகைகள் வீட்டுக்கு வீடு மாற்றமுற்று இருந்தது. மறைக்காப்பாளர் வீட்டில் மரக்கறி உணவு இடப்பட்டது. கறிவேப்பிலையுடன் வெண்ணெயில் வறுக்கப்பட்ட மாதுளங்காய்ப் பொறியலும் மாங்காய்வடு ஊறுகாயும் சோறுடன் இடம் பெற்றிருந்தன.

மன்னர்களும் குறுநில மன்னர்களும் தம்மிடம் வந்த புலவர்களுக்கும், பாணர்களுக்கும், கறியும் மீனும் என வகைவகையாக விருந்து அளித்துள்ளனர். வட்டில் நிறைய மான் இறைச்சியை எடுத்துக்கொண்டு வேட்டுனும், கலம் நிறையத் தயிரை எடுத்துக் கொண்டு ஆய்ச்சியும், நெல்லுக்காக உழவனிடம் செல்வதை புறநானூறு சுட்டுகிறது.

> **மான்தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்**
> **தயிர்கொடு வந்த தசும்பும் நிறைய**
> **ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்**
> **குளக்கீழ் வளைந்த களக்கொள் வெண்ணெல்**
> **முகந்தனர் கொடுப்ப உகந்தனர்...**[15]

சோறு, கஞ்சி, கூழ், பால் முதலியன உணவாகக் கொள்ளப்பட்டன. காய், கனிகளும், இறைச்சியில் மீனும், கருவாடும் முக்கிய உணவாயின. தயிர்ச்சோறு, புளிச்சோறு, புலால் உணவு (கறியும், நெய்யும் கலந்த கலவை உணவு) போன்ற சோற்றுவகைகளும், புட்டு அப்பம் போன்ற மாவுப் பொட்களும் விருப்பமுடன் சமைக்கப்பட்டன. கிணற்று நீரைப் பானையில் வைத்துப் பயன்படுத்தினர். யானை வேட்டையாடியவர்கள் கறித்துவையலுடன் வரால் மீன் குழம்பு செய்து சோற்றுடன் சேர்த்து உண்டனர்.

உடல் நலத்தைக் காக்கக் கூடியதும் உணவைச் செரிக்கச் செய்யக் கூடியதுமான கொத்தமல்லி, சீரகம், மிளகு போன்றவை கலந்து கறிவகைகள் செய்யப்பட்டன. காய், கனி, கிழங்கு, பூ, பிஞ்சு, கீரை போன்றவை அருஞ்சுவையுடன் ஆக்கப்பட்டன. கறிவேப்பிலை, கடுகு முதலியவற்றைப் உணவிற்குத் தாளிதம் செய்ய பயன்படுத்தினர்.

**"நெய்யில்லா உண்டிபாழ் என்றமையால் நெய்கலந்த உணவைத் தமிழ்மக்கள் நாள் உணவாகக் கொண்டனர். பருப்புணவு, தயிர்ச்சோறு, பலவகைப் பொரியல்கள் முதலியன பத்துப்பாட்டு, புறநானூறு முதலிய சங்க இலக்கியங்களில் பேசப்படுகின்றன. சேனைகளுக்குச் சூடு தணிக்கத் தயிர்ச்சோறு வழங்கப்பட்டது. மிளகு, உப்பு, புளி, சர்க்கரை, வெல்லம் முதலிய பொருட்கள் முதன் முதல் தயார் செய்யப்பட்டது."[16] தமிழ்நாட்டில்தான் என்பது குறிப்பிடத்தக்கது.**

சமய அடிப்படையில் ஊன் உணவு கொள்ளாத வழக்கம் பௌத்தர் சமணர் காலத்துக்குப் பின் உண்டானதாகக் கருதப்படுகிறது. சங்க காலத்தில் புலால் உணவையே விரும்பி உண்டமையை கபிலரின் பாடல் வழி அறியலாம்.

இதனை,

> **புலவு நாற்றத்த பைந்தடி**
> **பூநாற் றத்த புகைகொளீஇ ஊன்துவை**
> **கறிசோறு உண்டு வருந்துதொழில் அல்லது**
> **பிறிதுதொழில் அறியா....[17]**

எனக் குறிப்பிடுகின்றார்.

சமைக்கப்பட்டது இன்னது என்று அறியா வண்ணம் அக்காலத்தில் சமையல் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தனர். உணவு முறைகள் நாகரிக முறையில் சமைக்கப்பட்டன.

அரிசிச் சோற்றை நண்டும், பீர்க்கங்காயும் சேர்த்துச் சமைத்த குழம்புடன் விருந்தினர்க்கு வழங்குவர். வயல்வெளிகளில் வேலை செய்யும் மக்கள் சோர்வு நீங்க, மாங்காய் ஊறுகாயுடன் கொள்ளும், பயிறும், பாலுடன் கலந்து சமைத்த சோற்றுக்கூழைக் குடித்தனர் என்பதை

**கொள்ளோடு பயறு பால் விரைஇ, வெள்ளிக்**
**கோல் வரைந்தன்ன வால் அவிழ் மிதவை**
**வாங்கு கை தடுத்த பின்றை[18]**

என்ற பாடலும்,

**நெல்என்னாம் பொன்என்னாம்**
**மனைமன்னா அவை பலவும்**
**யான்தண்டவும் தான்தாண்டான்**
**நிணம்பெருத்த கொழுஞ்சோற்றிடை**
**மண்நாணப் புகழ்வேட்டு**
**நீர்நாண நெய்வழங்கி[19]**

என்ற பாடலும், காணமும் பயிறும் தேனும் நெய்யும் சேர்த்துப் பக்குவமாய்ப் பொங்கிய நெய்ச் சோற்றை, சேர்த்து வெள்ளி வட்டிலில் வைத்து உண்டனர் என்பதைக் காட்டுகின்றன.

**மதுவகைகள்**

சங்ககால மக்களிடையே குடி வகைகள் மிகுதியாக இருந்துள்ளன. கள், தேறல், மது, மட்டு என பலவகைப்பட்ட பெயர்களில் வழங்கப்பட்டன. இவற்றினைத் தாமே செய்தும், வெளிநாடுகளிலிருந்து வரவழைத்தும் பல நாட்பட வைத்திருந்து விறுவிறுப்புச் சுவையுடன் பருகினர். கள் குடித்தலுக்கு மறுப்பு சங்க காலத்தில் இல்லை.

**சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே,**
**பெரியகட் பெறினே**
**யாம்பாடத் தான்மகிழ்ந்து உண்ணும் மன்னே[20]**

என்ற பாடல் அதியமானின் வள்ளல்தன்மை பற்றிய ஔவையார் பாடலாகும்.

**தேகடுப்பு அன்ன நாட்படு தேறல்**
**கோண்மீன் அன்ன பொலங்கலத்து அளைஇ**
**ஊண்முறை ஈத்தல் அன்றியும் கோண்முறை**
**விருந்திறை நல்கி யோனே[21]**

என்ற பாடல் வழி

விருந்தினர்க்கு மதுவை விருந்தோடு வழங்கினர் என்பதை அறியலாம்.

**பாம்பு வெகுண்டன்ன தேறல் நல்கி[22]**

பொதுமக்கள் விழா, விருந்து ஆகிய நாட்களில் மதுவருந்தி மகிழ்ந்தனர். மதுரை இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை மதுரைகணக்காயனார் வாழ்த்தும் பொழுது.

**யவனர் நன்கலம் தந்த தண்கமழ் தேறல்**
**பொன்செய் புனைகலத்து ஏந்தி நாளும்**
**ஒண்தொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து**
**ஆங்கினிது ஒழுகுமதி ஓங்குவாள் மாற[23]**

என வாழ்த்துதல் குறிப்பிடத்தக்கது.

மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனார்,

**மணம் கமழ் தேறல் மடுப்ப நாளும்**
**மகிழ்ந்து இனிது உறைமதி பெரும**
**வரைந்து நீ பெற்ற நல் ஊழியையே[24]**

என வாழ்த்துதல் குறிக்கத்தக்கது.

உண்பதற்கும் பருகுவதற்கும் பொன்னாலும், வெள்ளியாலும் செய்த அழகிய

வேலைப்பாடுகள் நிறைந்த கலன்களைப் பயன்படுத்தினர்.

இதனை,

**இளங் கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து**
**விளங்கு பொற்கலத்தில் விரும்புவன பேணி**[25]
**மீன் பூத்தன்ன வான்கலம்பரப்பி**[26]
**பெறல் அருங் கலத்தில் பெட்டாங்கு உண்க எனப்**
**பூக் கமழ் தேறல் வாக்குபு தரத்தர**[27]

என்று

பொற்கலம், வான்கலம், பெறலருங்கதலம் என மதுவருந்தும் கலன்கள் சங்க இலக்கியங்களில் சிறப்பிக்கப்பட்டுள்ளன.

**உடைகள்**

மிகப்பழங்காலத்தில் பூவையும், தழையையும், மரவுரி, தோல் முதலியனவற்றையும் மக்கள் ஆடையாக அணிந்தனர். பின்பு கம்பளி ஆடையையும் பஞ்சு ஆடையையும் உடையாக கொண்டனர். புலித்தோல், மான்தோல் முதலியன இன்றும் புனிதமுடையனவாகக் கருதப்படுகின்றன.

வேட்டி, துணி, துண்டு, கீரை, மெய்ப்பை, உடை, அறுவை, கலிங்கம் முதலியவை ஆடையைக் குறிக்கும் தமிழ்ச் சொற்கள் ஆகும். 'உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்' என்று நல்வழி கூறுகிறது. மேலாடை, கீழாடை என இரண்டு ஆடைகளை சங்ககாலத்தார் அணிந்திருந்தனர். என்பதை,

**உண்பது நாழி உடுப்பவை இரண்டே**[28]

என்று புறநானூறும் குறிப்பிடுகின்றது.

அரசரும் புலவரும் செல்வரும் மேலாடையின்றி வெளியில் செல்லார். மேற்சட்டை மெய்ப்பை எனப்பட்டது. போர் வீரர்களும், மன்னர்களும் அணிந்திருந்த

கால் சட்டையில் பூவேலைப்பாடுகள் மிக்கிருந்தன.

**நீலக் கச்சை பூவார் ஆடைப்**

**பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்[29]**

என புறநானூற்றில் வந்துள்ளது.

மேலாடை ஆடவர்க்கு மதிப்பிற்குரிய ஆடையாகக் கருதப்பட்டது. உயர்குடியில் பிறந்த ஆண்மக்கள் இடையில் வேட்டியுடன் சட்டையும் அணிந்தனர். சங்க காலத்திலேயே, மக்கள் தாம் ஈடுபடும் வேலைக்கு ஏற்ப ஆடையை அணியும் நாகரிகம் பெற்றிருந்தனர். மகளிர், பட்டுடையையும், பாலாவியன்ன மேலுடையையும் விரும்பி அணிந்தனர். மார்பினை மறைக்கக் கச்சு அணிந்திருந்தனர். பூங்கரை நீலம், புடைதாழ உடுத்தியிருந்தனர்.

செவ்வண்ணம் மூட்டிய, பூவேலை செய்யப்பட்ட மிக மிக நுண்ணிய வேலைப்பாடுகள் கொண்ட புடவைகள் மதுரையின் அங்காடிகளில் விற்பனையாயின, கோசிகம், பீதகம், நுண்துகில், சித்திரக்கம்பி, பொன்னெழுத்து, தேவாங்கு என முப்பதுக்கு மேற்பட்ட ஆடைவகைகள் கடைகளை அலங்கரித்தன.

பொதுமக்கள் முழங்காலுக்குச் சிறிது கீழ் நீண்டு இருக்கும்படி ஆடையை உடுத்தினார்கள். அரசரும் பெருமக்களும் கெண்டைக்கால்வரை நீண்டிருக்கும்படி உடுத்தினர். ஆடவர், அரையில் ஒன்றும் தோளில் ஒன்றும் தலையில் ஒன்றுமாக மூன்று ஆடைகளை அணிந்தினர்.

சங்க கால மக்கள் மெல்லிய ஆடைகளையே விரும்பினர். ஆவியன்ன அவிர் நூற்கலிங்கம் பல்கலைச் சில் பூங்கலிங்கம் நேர்கரை நுண்ணுற்கலிங்கம் இழை மருங்கறியா நுழைநூற் கலிங்கம் காம்பு சொலித்தன்ன அறுவை நூலாக் கலிங்கம் என்று குறிப்பிடும் வகையில் அவர்களின் ஆடைவகைகள் சிறந்திருந்தன.

பஞ்சு மலையெலிமயிர் போன்றவற்றாலான ஆடைகளை நெய்தனர். துணிகள்

மிக மிக நுண்ணிய நூல்களினால் நெய்யப்பட்டன. புகை, பனி, பாம்பின்தோல், அருவிநீர், பாலாவி இவற்றை உவமையாகக் கூறத்தக்க வகையில் மிக மெல்லிய ஆடைகளும் நெய்யப்பட்டன.

**நூலினும் மயிரினும் நுழைநூற் பட்டினும்**
**பால்வகை தெரியாப் பன்னூறு அடுக்கத்து**
**நறுமடி செறிந்த அறுவை வீதி[30]**

என்றும்

கொட்டைக் கரை (பொருநர்ஆற்றுப்படை, 153), அரவு உரி அனை அறுவை (பொருநர்கற்றுப்படை வரி 83); மெய்ப்பை (முல்லைப்பாட்டு, 60) என்றும் ஆடை குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆடைவகைகளை வெளுத்தும், கஞ்சியிட்டும் அணிந்தனர். ஆடைகளுக்குச் சாயம் ஏற்றுவதிலும் கைத்தேர்ந்து விளங்கினர்.

**நலந்தகைப் புலைத்தி தோய்த்து எடுத்துத்**
**தலைப் புடைப் போக்கித் தண்கயத்து இட்ட**
**நீரின் புரியாப் பரூஉத்திரி கடுக்கும்[31]**

என்று நெடுநல்வாடை ஆடை பற்றிக் குறிப்பிடுகின்றது.

**உறையுள்**

சங்க மக்கள் குடில்களை வரகு, வைக்கோல், செந்நெல் கதிர், கரும்பு, கடலை இலை, பனை இலை, தென்னங்கீற்று ஆகியவற்றால் வேய்ந்திருந்தனர். வீட்டில் மஞ்சள் வளர்ந்து பூந்தோட்டம் சூழ்ந்து இருக்கும். சில குடில்களில் தானிய சேமிப்புக் குதிர்கள் இருக்கும். பந்தலில் திரிகை, கலப்பை, சக்கரங்கள் முதலியனவற்றைச் சார்த்திவைத்திருப்பர். முகடுவரை அடுக்கப்பட்ட மிடாக்களில் செந்நெல் நிரம்பியிருக்கும்.

தொழில்கள் அடிப்படையில் மக்களின் இருப்பிடம் அமைந்திருந்தன. கடற்கரையிலிருந்த மக்கள் குச்சு வீடுகளை வேழக்கோலைப்பரப்பித் தாழை நாரிலே கட்டித் தருப்பைப் புல்லை வேய்ந்திருந்தனர். மீன் வாரும் பறி கிடக்கின்ற முற்றம் மணல் நிரம்பியதாய் இருந்தது. அங்கே மீன் பிடிக்கும் வலைகள் காயவைக்கப்பட்டிருந்தன.

உழவர்கள், மருத நிலத்தில் வாழ்ந்தனர். செழிப்பான இடத்தில் வாழ்ந்து வேளாண்மைத் தொழில் மேற்கொண்டனர். பெரிய வீடுகளை அமைத்தனர். அவ்வீடுகளில் நெடிய கூடுகள் இருந்தன. அக்கூடுகளில் நெல்லைச் சேமித்தனர். வீட்டின் முன் மாடுகளையும் கன்றுகளையும் கட்டி வைத்தனர்.

“ஓவத்தன்ன வினைபுனை நல்லில்”, “ஓவத்தன்ன உருகெழு நெடுநகர்”, “கதிர் விடு மணியல் கண்பெரு மாடம்” வீடுகளின் கதவுகளுக்குத் தாழ்ப்பாள்களும், பூட்டுகளும் இருந்தன. பூட்டுக்குரிய திறவுகோல் தாழ்க்கோல் எனப்பட்டது.

**பீடுகெழு சிறப்பின் பெருந்தகை அல்லது**
**ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பின்**
**வரைகண் டன்ன தோன்றல வரைசேர்பு**
**வில்கிடந் தன்ன கொடிய பல்வயின்**
**வெள்ளி அனை விளங்கும் கதை உரீஇ**
**மணிகண் டன்ன மாத்திரள் திண்காழ்**
**செம்புஇயன் றன்ன செய்வுஉறு நெடுஞ்சுவர்**
**உருவப் பல்பூ ஒருகொடி வளைஇ**
**கருவொடு பெயரிய காண்பு இன் நல்இல்**[32]

என்று நெடுநல்வாடை குறிப்பிடுகின்றது,

இல்லத்தின் சுவரில் ஓவியங்கள் வரையப்பட்டிருந்தது. வீடுகள் உயர்ந்து விளங்கின.

**குறும் பல் குழுவின் குன்று கண்டன்ன**
**பருந்து இருந்து உகக்கும் பல் மாண் நல் இல்**[33]

என்று மதுரைக்காஞ்சியும்

**மழை தோயும் உயர் மாடத்து**[34]

என்று பட்டினப்பாலையும் குறிப்பிடுகின்றன.

மாடங்களில் பாவை விளக்குகள் ஒளியூட்டின. இவை யவன நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்டவையாகும். உறங்குவதற்குரிய கட்டில்களும் படுக்கைகளும் மலரைப் போலவும் எண்ணெயின் நுரையைப் போலவும் மென்மையாக இருந்தன. இதனை,

**வரை குயின்றன்ன வான் தோய் நெடு நகர்**
**நுரை முகந்தன்ன மென் பூஞ் சேக்கை**
**நிவந்த பள்ளி, நெடுஞ் சுடர் விளக்கத்து**[35]

என்று அகநானூற்றுப் பாடல் சுட்டியுள்ளது.

வீடுகள் வரிசை வரிசையாக அமைந்திருந்தன. தெருக்கள் ஆறுபோன்று அகன்று இருந்தன. அத்தெருக்களில் விழாக்கள் நடைபெற்றன.

இதனை,

**ஆறுகிடந்தன்ன அகல்நெடுஞ் தெருவில்**
**சாறுஎன நுவலும் முதுவாய்க் குயவ**[36]

என்று நற்றிணை குறிப்பிடுகிறது.

**பொருளீட்டல்**

தொழில் அடிப்படையில் பொருள் வருவதற்குரிய வாயில்களாக, அந்தணர்க்கு ஓதலும் தூதும், அரசர்க்குப் பகைவரும், வேளாளருக்கு உழவும், வணிகர்க்கு வணிகமும் அமைந்தன என தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

சங்க காலத்தில் பொருளீட்டல் என்பது தலைவன் கார்காலத் தொடக்கத்தில் வருவேன் என்றுகூறி தலைவியைப் பிரிந்து பொருள் தேடுதலைக் குறித்தது. இப்பிரிவினை பொருள் வயிற்பிரிவு என்றும் அதற்கான காலவரையறை ஓராண்டு என்றும் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

பொருளீட்டலில் சங்ககால மக்கள் அறத்தினைக் கடைபிடித்தனர். இரப்போர்க்கு ஈயாத செல்வம் நம்மைவிட்டுப் பிரிந்து விடும் என்று நம்பினர். இதனை.

**கேளிர்கள் நெஞ்சு அழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்**
**தாள் இலான் குடியேபோல், தமியவே தேயுமால்**[37]

என்ற அடிகளால் அறியலாம்.

**இரப்போர் ஏந்து கை நிறைய, புரப்போர்**
**புலம்புஇல் உள்ளமொடு புதுவ தந்து உவக்கும்**[38]

என்று அகநானூறும் சுட்டுகின்றது.

சுற்றத்தை நாடுதலும், இரப்போர்க்கு ஈதலும் பொருள் தேடுதலின் நோக்கமாகக் கொண்டனர். இவ்வுலகத்தில் நிறைந்துள்ள பொருள்கள் அனைவருக்கும் பொதுவானவை என்ற எண்ணமும் அவர்களிடம் சிறந்து விளங்கியது.

**தென்கடல் வளாகம் பொதுமை இன்றி**
**வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்**
**நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்**
**கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்**
**உண்பது நாழி உடுப்பவை இரண்டே**
**பிறவும் எல்லாம் ஓரோக் கும்மே**
**செல்வத்துப் பயனே ஈதல்**
**துய்ப்பேம் எனினே தப்புந பலவே.**[39]

பொருட்பற்று

**விட்டோரை விடாஅள் திருவே**
**விடாஅ தோர்இவள் விடப்பட் டோரே**[40]

பொருட்பற்று மிக்கிருந்தாலும், பொருளீட்டுவதில் வழிதவறிச் சென்றாலும் அவ்வகையில் பெற்ற செல்வம் இம்மையில் மட்டுமின்றி மறுமையிலும் பகையாய் வரும் எனச் சங்ககால மக்கள் அஞ்சினர்.

**"செம்மையின் இகந்து ஒரீஇப் பொருள் செய்வார்க்கு, அப்பொருள்**
**இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ"**[41]

என்று கலித்தொகை குறிப்பிடுகின்றது.

**பொருட்சிறப்பு**

சிறப்புடைய பொருளால் அறம் பொருள் இன்பம் மூன்றினையும் பெறலாம் என்றும், முயற்சி உடையர்களிடம் செல்வமானது பெருகிப் பலருக்கும் பயனுடையதாய் அமையும் என்றும் நம்பினர்.

ஈட்டிய பொருளைச் சுற்றத்துக்கும் கொடுத்து மகிழ்ந்தனர். மேலும் இவ்வுலகம் நிலையாமையுடையது. ஆதலால் பொருளை இரப்போருக்குக் கொடுத்தலைப் பெரிதும் விரும்பினர்.

**கிழவர் இன்னோர் என்னாது, பொருள்தான்**
**பழவினை மருங்கின் பெயர்பு பெயர்பு உறையும்**[42]

தொழில்திறமே மக்களது உயிராற்றலாகப் பேணப்பட்டது. ஒரு தொழிலும் செய்யாத சோம்பர் உயிரற்ற பிணம்போல் இழிந்துரைக்கப்பட்டனர்.

சங்ககாலப் பொருளாதாரம் பெரும்பாலும் தன்னிறைவுடையதாகக் காணப்படுகிறது. மக்கள், தொழில் முயிற்சியுடையோராகவும், செல்வம் ஈட்டி நல்வாழ்க்கை வாழ்வதிலும், இரப்போர்க்கு ஈவதிலும் சிறந்து விளங்கினர். அவர்கள்

தங்களது அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்றவாறு தொழில் செய்தனர். தன் முயற்சியால் தம் நாட்டிலுள்ள பொருளைப் பிற நாட்டிற்கு அனுப்பியும், பிற நாட்டிலுள்ள பொருளைத் தம் நாட்டிற்குக் கொண்டு வந்தும் கடல்வழியாகவும் தரை வழியாகவும் வாணிகம் செய்து பொருளைச் சேர்த்தனர். பண்டைத் தமிழகத்தின் பொருளாதாரம் கிராமத்தை அடிப்படையாகக் கொண்டது. உழைப்பை உயர்வாகக் கொண்டது. பொருளாதார வாழ்க்கையைத் திணைக்கும் நிலத்துக்கும் ஏற்றவாறு மக்கள் அமைத்துக் கொண்டனர். உற்பத்தியைப் பெருக்கித் தன்னிறைவு அடைந்தனர். சங்ககால மக்கள் தங்கள் தொழில்களில் தளராது உழைத்து வந்தமையால் தமிழர் வாழ்வு நாகரிக முறையில் நலம்பெற்றுத் திகழ்ந்தது. தொழில் அடிப்படையில் உழவு, நெசவு, வாணிகம், கைத்தொழில்கள் இன்றியமையாதவைகளாகக் கருதப்பட்டன.

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" என வள்ளுவரும், "உழுதுண்டு வாழ்வதற்கு" ஒப்பில்லை என ஔவையாரும் கூறியுள்ளனர். சங்ககால மக்களின் உயிர்த்தொழிலாக பயிர்த்தொழில் விளங்கியது.

நெல், கரும்பு, வரகு, தினை, எள், அவரை, பயிறு போன்றவற்றினைப் பயிரிட்டனர். மருத நிலத்தில் நெல்லையும், கரும்பையும், முல்லை நிலத்தில் வரகையும், தினையையும், குறிஞ்சி நிலத்தில் பழங்களும், கிழங்குகளும் பயிரிடப்பட்டன.

உழவர்கள் மரத்தால் ஆன கலப்பையைப் பயன்படுத்தினார்கள். அதில் கூர்மையான இரும்பைப் பொருத்தி நிலத்தை ஆழமாக உழுதனர். களையகற்றுவதற்குப் பள்ளியாடல் என்ற கருவியைப் பயன்படுத்தினர். பயிரிடும் நிலத்திற்கு எரு இடப்பட்டது. நிலத்தை உழுது, வெயிலும் காற்றும் பட்டு மண் உலரும்படி விடுதலும், எருவிடுதலும் சிறந்ததெனக் கடைபிடித்தனர். நீர் வசதிக்கு அணை கட்டினர்; கால்வாய்களை அமைத்தனர். குளங்களும், கேணிப்பாசனமும் இருந்தன.

உழவர்களுக்குப் புழுதியும், வெயிலும், மழையும் பொருட்டன்று. உழவர்கள்

செல்வச்செழிப்பில் இருந்தார்கள். அறுவடைக்குப் பின் விருந்து வைத்தார்கள். மக்களில் சிலர் பெரிய அளவில் நிலம் உடையராக விளங்கினர். அவர்களின் கீழ், நிலத்தை உழுது பயிரிடும் குடிகளும் இருந்தனர். அவர்களுக்குக் கூலி தானியமாகக் கொடுக்கப்பட்டது.

நாற்று நடுதல், களைவெட்டுதல் முதலிய வேலைகளைப் பெரும்பாலும் பெண்கள் செய்தார்கள். அவ்வாறு வேலை செய்யும் பொழுது களைப்புத் தோன்றாதிருக்கும் பொருட்டுப் பாடல்களைப் பாடினர். அவை பின்னர் பள்ளுப்பாடல்களாக கருதப்பெற்றன.

நெசவு குடிசைத்தொழிலாக நடந்தது. நெசவாளர் குடும்பங்களில் அனைவரும் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். பருத்தியிலிருந்து பெண்கள் நூல் நூற்றனர். 'பருத்திப் பெண்டிர் பனுவலன்ன' எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. பெண்கள் நூற்றநூலை ஆண்கள் பாவோட்டி ஆடை நெய்தனர். பெண்களும் இவ்வேலையைச் செய்தனர். கைம்பெண்களுக்கு நெசவுத் தொழிலே பிழைப்பாய் இருந்தது.

சாளரத் திரைகள், படுக்கை விரிப்புகள், நடை விரிப்புகள் முதலியவற்றையும் தயாரித்தனர். ஆடைகளின் நுனியில் பின்னல் வேலைப்பாடுகளும் மிக்கிருந்தன. ஆடைகள் நீளமாக நெய்யப்பட்டுப் பின்பு துண்டுகளாகக் கிழிக்கப்பட்டன. அவை துண்டு, அறுவை எனப்பட்டன.

மிகப்பழங்காலத்திலேயே ஆடைகள் எகிப்து பாபிலோன் முதலிய நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. இந்தியாவில் இருந்து சென்ற பஞ்சு ஆடை பாபிலோனில் "சிந்து" என வழங்கப்பட்டது. சிந்து என்பது கன்னட மொழியில் ஆடைத்துண்டையும் தமிழில் கொடியையும் குறிக்கின்றது.

கொரநாடு, உறையூர், காஞ்சி, ஆரணி, மதுரை முதலிய இடங்கள் நெசவுக்கு பேர் போன இடங்களாக விளங்கின. இன்றும் பட்டுடை என்றால் காஞ்சிபுரமும், ஆரணியும், கைத்தறிச் சேலைகள் என்றால் மதுரை சின்னாளம்பட்டியும் பெயர்பெற்றுத் திகழ்வதைக் காணலாம்.

**வணிகச்சாத்துக்கள்**

வணிகர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று தம் பண்டங்களைப் பல ஊர்களுக்கு விற்பனைக்கு எடுத்துச் செல்வர். இவ்வாறு கூட்டம் கூட்டமாகச் செல்பவர்களுக்குச் சாத்துக்கள் என்று பெயர். வணிகர்கள் ஆறலைக் கள்வர்களுக்கு அஞ்சியும் கூட்டம் கூட்டமாகச் செல்வார்கள்.

திரை கடல் ஓடியும் திரவியந்தேடு என்ற பழமொழிக்கு ஏற்ப பண்டைக் காலத் தமிழர், இந்தியாவில் மட்டுமன்றிக் கிழக்கே பிலிப்பைன் தீவுகள் வரையும் மேற்கே இங்கிலாந்து வரையும் கடல் வழியாகச் சென்று வாணிகம் நடத்தினார்கள். வாணிகத்தின் பொருட்டுச் சென்ற மக்கள் அந்நாட்டிலேயே குடியேறித் தமது பண்பாடுகளைப் பரப்பவும் செய்தனர்.

**கைத்தொழில்கள்**

அபிதான சிந்தாமணி தொழில் என்பதற்கு கீழ்வரும் வரையறைகளைத் தந்துள்ளது.

"அந்தணர் : ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்

அரசர் : ஓதல், வேட்டல், ஈதல், உலகோம்பல், படைபயிற்றல், பொருதல்

வைசியர் : ஓதல், வேட்டல், ஈதல், பொருளீட்டல், பாதுகாத்தல், ஏருழல்

**சூத்திரர் : முதன் மூவர்க்கும் ஏவல் செயல், உழுதல், பொருளீட்டல், பசுக்காத்தல், குயிலுவத் தொழில் செய்தல், காருகவினை செயல்"[43]**

எனவும் வரையறுத்துள்ளது.

**தச்சர்**

தச்சர்கள் தச்சுப்பணியில் ஈடுபட்டனர். இதனை

**தச்சன் செய்த சிறு மா வையம்[44] என்றும்**
**தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த**
**ஊரா நல் தேர் உருட்டிய புதல்வர்[45] என்றும்**

........................வைகல்

எண்தேர் செய்யும் தச்சன்[45] என்றும்

சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன.

நெடுநல்வாடையில், தச்சன் ஒருவன் செய்த கட்டில் சிறப்பிக்கப்பட்டுள்ளது. நாற்பது வயதான, போரில் விழுப்புண்பட்டு இறந்துபோன யானையின் கொம்பினால் தச்சுக்கட்டில் செய்யப்பட்டிருந்ததை குறிப்பிடுகின்றது.

தச நான்கு எய்திய பணை மருள் நோன் தாள்
இகல் மீக்கூறும் ஏந்து எழில் வரி நுதல்
பொருது ஒழி நாகம் ஒழி எயிறு அருகு எறிந்து
சீரும் செம்மையும் ஒப்ப வல்லோன் [46]
கூர் உளிக் குயின்ற ஈர் இலை இடை இடுபு
தூங்கு இயல் மகளிர் வீங்கு முலை கடுப்பப்
புடை திரண்டிருந்த குடத்த இடை திரண்டு
உள்ளி நோன் முதல் பொருத்தி அடி அமைத்து
பேர் அளவு எய்திய பெரும் பெயர்ப் பாண்டில்[47]

**கொல்லர்**

கொல்லனின் கொடிறு என்ற கருவி நண்டின் கால்களைப் போன்று பிளவுடையது. அது கொறடு எனவும் வழங்கப்படும். நெடுநல்வாடையில் இக்கொறடானது நண்டின் கால்களுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

மென்தோல்
மிதி உலைக் கொல்லன் முறி கொடிற்றன்ன
சுவைத் தாள் அவலன்[48]

உலைக்களத்தில் கல்லின் மீது காய்ந்த இரும்பினை வைத்துச் சம்மட்டியால் கொல்லன் அடித்ததைப் புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது.

**இரும்புபயன் படுக்குங் கருங்கைக் கொல்லன்**
**விசைத்துஎறி கூடமொடு பொரூஉம்**
**உலைக்கல் அன்ன வல்லா ளன்னே[49]**

என்பதனால் அறியலாம்.

ஒரு போர் வீரனுக்கு வேல் வடித்துக் கொடுப்பது கொல்லற்கு கடமையாக இருந்தது. வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லர்க்குக் கடனே என்று பொன்முடியாரும் குறிப்பிட்டுள்ளார்.

பொற்கொல்லன் கைத்திறமையால் செய்த பொன் மலர்க்கண்ணி, வேங்கையின் மலர்களை ஒத்திருந்தது.

இதனை,

**கருங்கால் வேங்கை நாள் உறு புதுப் பூ**
**பொன் செய் கம்மியன் கைவினை கடுப்ப**
**தகை வனப்புற்ற, கண்ணழி கட்டழித்து[50]** என்றும்

நற்றிணை குறிப்பிட்டுள்ளது.

**குயவர்**

மண்பானை சேவை செய்வோர் குயவர்கள் என்றழைக்கபட்டனர். பண்டைத்தமிழர்கள் பொங்கலின் போது புதுப்பானைகள் வைத்தே பொங்கலிடுவதை வழக்கமாக் கொண்டனர். குயவர்கள் பற்றிப் புறநானூறும் (பாடல் 228, 256); அகநானூறும் (பா. 308) குறிப்பிடுக்கின்றன.

**ஆடைவெளுப்போர்**

ஆடைவெளுப்போர் காழியர், புலைத்தி என்றழைக்கப்பட்டனர். இவர்களைப்

பற்றி அகம் (89, 397), புறம் (311), நற்றிணை (90), கலித்தொகை (72) முதலிய நூல்களில் குறிப்புகள் உள்ளன.

பிணம் சுடுபவன் புலையன் என்றழைக்கப்பட்டான் (புறம் : 360). நெல்லரியும் தொழுவரைப் புறநானூற்றுப் பாடல்கள் (24, 209, 379) சிறப்பிக்கின்றன. மதுரைக்காஞ்சி (80) நீரிறைக்கும் தொழுவர்பற்றிக் கூறுகிறது. உழவு வேலை செய்பவர் கடைசியர் என்றழைக்கப்பட்டதாகப் புறம் (61) புலப்படுத்துகிறது.

மேலும், விறகு விற்போர், (புறம்: 70), ஆட்டு வணிகர் (பதிற்றுப்பத்து : 21,27), சாணைப்பிடிப்போர் (அகம் :12), செக்கர் (நற்றிணை : 328), சங்கறுப்போர், பொன்மாற்றுக் காண்போர், ஆடை விற்போர், கச்சுமுடிவோர், பூ, சாந்து விற்போர் பற்றிய குறிப்புகளை மதுரைக் காஞ்சி (511–515) தருகிறது.

சங்க காலத்தில் கைத்தொழில்கள் புரிவோர் நிறைய இருந்தனர் என்பதை மேற்கூறிய சான்றுகளிலிருந்து நாம் அறியலாம். ஆற்றுப்படைப் பாடல்கள் மக்களின் வாழ்வைக் காட்டுவனவாக இருக்கின்றன. எட்டுத் தொகை நூல்கள் மக்களிடம் பலதரப்பட்ட வேலைப் பிரிவுகள் இருந்ததைக் காட்டுகின்றன.

### அணிகலன்கள்

சங்க காலத் தமிழகத்தில் பொன்னும், மணியும் மலிந்து கிடந்தன. முத்து, பவளம் போன்றவற்றினால் பலவகையான அணிகள் செய்யப்பட்டன. வெள்ளியாலும் அணிகள் செய்யப்பட்டன.

பெண்கள் தொய்யகம், புல்லகம், வலம்புரி, சிலம்பு போன்றவற்றை விரும்பினர். காதுக்குப் பூங்குழலையும், கழுத்துக்கு மாலையையும் விரும்பி அணிந்திருந்தனர்.

கால்விரல் மோதிரம், பரியகம், நூபுரம், அரியகம், பாடகம், சதங்கை, குறங்கு செறி, அரையில் அணியும் முத்துவடமான முப்பத்திரண்டு வடத்தாலான முத்துமேகலை, மாணிக்கமும் முத்தும் இழைக்கப்பட்ட தோள்வளையங்கள், நவமணிவளை, சங்கவளை, பவளவளை போன்ற அணிகளை மகளிர் விரும்பி

அணிந்தனர்.

நெல்லிக்காய் மணிமாலை, வலம்புரிச்சங்கு தென்பல்லி வடபல்லி போன்ற அணிகளையும் அணிந்தனர். இடையில் அணியும் மேகலையில் ஐந்து வகைகள் இருந்தன. அவை காஞ்சி, கலியம், பருமம், வரிசனை, மேகலை எனப்பட்டன.

மணமாகாத பெண்கள் கூந்தலை ஐந்து வகையாகக் கோதி முடிந்தார்கள். நெற்றியில் திலகம் இட்டனர். உதடுகளுக்கு அரக்கினால் செய்யப்பட்ட சாயம் பூசி அழகுபடுத்தினர். மார்பிலும் தோளிலும் தொய்யிலெனும் ஒருவகைக் குழம்பினால் கரும்பு, பூங்கொடி முதலியவற்றை வரைந்து மகிழ்ந்தனர். அவர்களின் அணிகலன்களில் சுறாமீன், வலம்புரிச் சங்கு, பிறைபோன்ற மாதிரிகள் பெரிதும் காணப்பட்டன. காதில் தோடும், காலில் சிலம்பும், கைவிரல் மோதிரமும், அரையில் மேகலையும் மகளிரை அழகு செய்தன.

மகளிர், அணிகள் பலவற்றை அணிந்திருப்பர். தெளிந்த உள் மணிகளையுடைய பொன்னால் செய்த, ஒலிக்கும் சிலம்புகளைக் காலில் அணிந்திருப்பர். ஒளி பொருந்திய மகரக் குழையைக் காதில் அணிந்திருப்பர்.

**"தோடு, காரோலை, முத்துமாலை, பவளமாலை, சங்கிலி, குறங்கு செறி, பட்டிகை, சதங்கை, கிண்கிணி, சிலம்பு, கழல், வளை, மோதிரம், மேகலை, திருப்பதம், திருமுடி, பள்ளித் தொங்கல், கொற்றக்குடை, காறை, அடிக்காறை, அன்னம், கிளி, மகுடம், வாளி, வடுகவாளி, கண்மலர், பொட்டு, பதக்கம், ஏகவல், கால்வடம், கமலம், வாகுவலயம், துடர், திருப்பட்டி, திருமணிவடம், கைக்காறை (புயவளை), பாதசாலம், பத்திரம், காண்டதுடர் (மாலை) கொக்குவாய் (கழுத்து ஆபரணங்களை எல்லாம் சேர்த்துப் பிடிக்கும்படி அணியும் சங்கிலி) கட்டகம் (பவளம் பதித்த கைவளை) இரத்தின வளையல், சிறு சந்தம், பாசமாலை, சப்தசாரி, கலாவம் (பதக்கத்தின் பகுதி) பிரபை, கபலம், செடி, சுரப்பள்ளி, தெய்வவுத்தி, வலம்புரிச்சங்கு, பூப்பாளை, தென்பல்லி, கடுக்கன், கடகம், சன்னவீரம், உதர பந்தம்."**[50]

போன்று அணிகலன்களில் பலவகைகள் இருந்தன.

கரிகாலன் உயிரோடு இருந்தபோது அவனது வெற்றிச் சிறப்புகளைப் பாடிய கருங்குழலாதனார் அவன் இறந்தபின் அவனது மனைவியர் தம் அணிகலன்களைக் களைந்து நின்ற அவலக் காட்சியையும் வருந்திப் பாடியுள்ளார்.

ஆடவர், குழை, கடகம், தண்டை போன்ற அணிகளை அணிந்தனர். மணமகளுக்குக் கையுறையாக அணிகலன்களை அளித்தல் உண்டு. அவற்றுள் காதலை அறிவிக்கும் அடையாளம் பொருந்திய மோதிரமும் உண்டு.

மணமகளுக்குத் தாலி அணிவித்தலும் உண்டு. அவ்வணியை ஈகையரிய இழையணி என்று அழைத்தனர் என்பதைப் புறநானூற்றுப்பாடல் மூலம் அறியலாம்.

**ஈகை அரிய இழையணி மகளிரொடு**
**சாயின்று என்ப ஆஅய் கோயில்**[52]

குழந்தை அணிகலன்கள் சங்ககாலத்தில் மிகுந்து இருந்தன. மணியும், பவளமும் கோத்த அரைஞாண் குழந்தைக்கு இடையில் அணிவிக்கப்பட்டது.

சங்க காலத்தில் ஆண் பெண் இருபாலரும் கூந்தல் வளர்த்து அழுகு படுத்திக் கொண்டனர். மகளிரின் முடி கூந்தல், கூழை, குழல் என்றும் ஆண்களின் தலைமயிர் குடுமி என்றும் குஞ்சி என்றும் கூறப்பெற்றது.

**கல்வி**

மரத்தடி, கோவில், பொது மண்டபம், ஆசிரியரின் வீட்டுத் திண்ணை போன்றவை கல்வி பயிலும் இடமாகத் திகழ்ந்தன. கல்வி ஐந்து வயதில் தொடங்கியது. எழுத்தும் எண்ணும் படிப்பதே தொடக்கக் கல்வியாக இருந்தது. அடுத்ததாக இலக்கியக் கல்வியும் கணித அறிவும் போதிக்கப்பட்டன. இவை வாய்ப்பாடாகப் படித்து மனப்பாடம் செய்யப்பட்டன. எழுதுவதற்குப் பனையோலையைப் பயன்படுத்தினர். சேர்த்துக் கட்டிய பனையோலை, சுவடி எனவும், நூல் எனவும்

அழைக்கப்பட்டது. சிறுவர்கள் மணலில் எழுதிப் பழகினார்கள். கோயில்களும், மடங்களும் கல்வி கற்பிக்கும் நிலையங்களாகத் திகழ்ந்தன.

மக்கள் இலக்கியக் கல்வியையும், தெய்வீகக் கல்வியையும் பயின்றனர். வேதம் புராணம் இதிகாசம் முதலியவற்றைப் படித்தனர். அக்காலக் கல்வி முறையில் பொதுக் கல்வி, சமயக் கல்வி, பல்கலைக் கல்வி என முத்திறக்கல்வி இருந்தது.

கணக்காயர், ஆசான், குலபதி போன்ற பெயர்களாலும் ஆசிரியர்கள் அழைக்கப்பட்டனர். மாணவர்கள் ஆசிரியர்களையும் புலவர்களையும் மிகவும் மதித்தனர். ஆசிரியனின் முதல் மாணவன் மற்ற மாணவர்களுக்குக் கல்வி கற்பிப்பதில் உதவி புரிந்தான். ஒரு மாணவன் சொல்ல, மற்ற மாணவர்கள் கேட்டுப் பின் சொல்லும் முறை பின்பற்றப்பட்டது. மாணவர்கள் ஆசிரியருக்கு ஊதியமாக ஆண்டில் ஒரு முறை அல்லது பலமுறை, வயலில் விளையும் பொருள்களைக் கொடுத்தார்கள்.

ஆசிரியருடைய மனம் உவக்குமாறும், அவருக்குத் துன்பம் வரும் பொழுது பொருள் உதவி புரிந்தும் அவருக்கு அடங்கி இருந்தும் கல்வி கற்றனர்.

வானநூற்புலமை, நாடிநூல்கள், வகுத்தல், பெருக்கல் போன்ற கணக்கு வகையைக் கற்றனர் உயர்கல்விக் கூடங்கள் வெளியூர்களில் இருந்தமையால் அங்குச் சென்று தங்கியும் கல்வி கற்றனர்.

பெண்களும் கல்வியில் சிறந்து விளங்கினர், ஆண்களும் பெண்களும் அக்காலத்திலேயே இணைந்து கல்வி கற்றனர். ஔவையார் பெருங்கோப்பெண்டு, வெள்ளிவீதியார், காக்கைப்பாடினியார், பாரிமங்கையார் போன்றோர் கல்வியில் சிறந்த பெண்பாற் புலவர்களாய் விளங்கினர்.

பழக்க வழக்கங்கள்

**மக்களின் தேவைகள் அடிப்படையிலேயே பழக்கங்கள் தோன்றுகின்றன. அவை சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்படுகின்ற நிலையில் வழக்கங்களாக உருப்பெறுகின்றன."[52]**

சங்ககால மக்கள் ஒழுக்கம், ஈகை, விருந்தோம்பல், இல்லறக்கடமை முதலியவற்றில் சிறந்து விளங்கினர். அவர்களின் நம்பிக்கைகள், சடங்குகள், வழிபாடு, கொள்கைகள் முதலியன அவர்களின் பழக்கவழக்கங்களை எடுத்துரைக்கின்றன.

தங்கள் இனத்துப் பெரியவர்களைத் தெய்வமாக எண்ணி வழிபட்டனர். அப்பெரியவர்கள் இருக்கும்பொழுதே அவர்களைத் தெய்வமாக எண்ணி வழிபடுதலும் அப்பெரியவர்கள் வாழ்த்தைப் பெறுதலும் இயற்கையாகவே அவர்களிடம் காணப்பட்டன. அப்பெரியவர்கள் இறந்தபின்னர் அவர்களை ஓவியங்களாக வரைந்து வைத்து வழிபடத் தொடங்கினர். அப்பெரியவர்களின் பெயர்களைத் தம் குழந்தைகளுக்கு வைத்து மகிழ்ந்தனர். பெரியவர்களைக் கடவுளாக வணங்கி வழிபட்டு வாழ்த்துப் பெறும் வழிபாடு அன்றுபோல் இன்றும் சமுதாயத்தில் பலரிடம் இருந்து வருகின்றது.

சங்க கால மக்கள், காலத்தை ஆண்டு, திங்கள், கிழமை, நாள் எனப் பகுத்திருந்தனர். ஓராண்டு பன்னிரண்டு திங்களும், ஒரு திங்கள் நான்கு கிழமைகளும், ஒரு கிழமை ஏழு நாட்களையும் ஒரு நாள் ஆறு சிறு பிரிவுகளும் கொண்டிருந்தன. ஓராண்டானது ஆறு பெரும் பருவங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒரு நாளின் பொழுது அறிந்து கடனாற்றுவதற்கு குறுநீர்க்கன்னல் எனும் நாழிகை வட்டில் பெற்றிருந்தனர். அரண்மனைகளிலும் அரசியல் அலுவலகங்களிலும் பொழுதறிந்து சொல்லுவதற்குப் பணியாட்கள் இருந்தனர்.

பெண்கள் தினைப்புனத்தில் கிளிகடி கருவியாகிய குளிர் என்ற கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். கருப்பம் தரித்த பெண்கள் பச்சைப் புளியின் சுவையை

மிகவும் விரும்பினர். தலைவனின் வரவைப் பெண்டிர் கோடிட்டுக் கணக்குப் பார்த்தனர்.

சங்ககால மக்களிடையே விருந்தோம்பல் சிறந்து விளங்கியது. திருமணம், இல்லறக்கடமை, இல்வாழ்க்கை, சொத்து, துறவு முதலிய பழக்கவழக்கங்கள் சங்ககால மக்களிடம் இயல்பிலேயே நிறைந்து காணப்பட்டன.

## திருமணம்

குழுமணம், இணைமணம் போன்ற நாகரிகமற்ற நிலைகளிலிருந்து விடுபட சமூகம் வரையறுத்த, ஒருவன் ஒருத்தி வாழ்க்கை முறையின் தொடக்கமாகத் திருமணம் அமைகிறது. திருமணம் என்ற நிகழ்ச்சிதான் நாகரிகக் குடும்பத்தின் தொடக்கமாக அமைந்தது.

சங்க காலத்தில் காதல் மணம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. காதல் செய்து மணமுடிப்பது களவு மணம் எனப்பட்டது.

களவு மணம் செய்கின்ற பெண்கள் கற்புமணம் செய்துகொள்ள இயலாவிடின் இறக்கவும் துணிவர். மறந்தும் வேறொருவனை மணக்க விரும்பமாட்டார். திருமணத்தில் தீ வளர்த்தல் போன்ற சடங்குகள் எல்லாம் அக்காலத்தில் இல்லை. வயதில் முதிர்ந்த, புதல்வர்களைப் பெற்ற பெண்களே திருமணம் செய்து வைத்தனர். இன்றும் கொங்குநாட்டுச் செட்டியார்களுள் மணமக்களுக்கு நீராட்டும் சடங்கைப் பெண்களே செய்து வருகின்றனர். கொங்கு வேளாளர் திருமணங்களில் தீ வளர்த்தலும் பார்ப்பனச் சடங்குகளும் இன்றி மங்கல வாழ்த்துப் பாடித் திருமணம் நடத்துகின்றனர்.

சங்க காலத்தில், ஒத்த வயதும் ஒத்த அறிவும் ஒத்த வளர்ச்சியும் உள்ள ஆடவரும் பெண்டிரும் உடல், உணர்வு, உயிர் மூன்றாலும் இரண்டறக்கலந்து வாழும் அன்பு வாழ்க்கையே திருமணம் எனக் கொள்ளப்பட்டது.

திருமணம் என்ற சொல்லுக்குப் பண்டைத் தமிழர்கள் கடி, மன்றல், வதுவை, மணம், வரைவு போன்ற வேறு சொற்களையும் பயன்படுத்தினர்.

சமுதாயத்தை உருவாக்குகிற இத்தகைய திருமண அமைப்புகள் குறித்தும் தொல்காப்பியர் தம் காலத்துக்கு முந்திய அகத்திணைக் கருத்துக்களைக் கொண்டு தொல்காப்பியத்தில் வரையறை செய்துள்ளார். முதல்பொருள் கருப்பொருள் உரிப்பொருள்கள், திணைப்பாகுபாடுகள் நிலவாரியாக மக்கள் வாழ்ந்த வாழ்வியல் நெறிகள் இவற்றின்மூலமே திருமண மரபுகள், குடும்பம் முதலியவைப் பற்றிய சிந்தனைகள் வெளிப்படுகின்றன.

பண்டைக்காலத்தில் இயற்கை மணமே பெரும்பாலும் வழக்கில் இருந்தது. ஒன்றுபட்டு வாழ எண்ணும் ஓர் ஆணும் பெண்ணும் தாமும் தம்மைச் சார்ந்தவர்களும் தமது இணைப்பினால் ஒன்றுபட வேண்டும் என்று எண்ணியபோது அவரவர்களுக்கு ஏற்ப மணமுறைகள் தோன்றலாயின. வாழ்க்கைத் துணையைத் தாமே தேர்ந்தெடுக்கும்பொழுது ஒரு சிலர் நெறி தவறத் தலைப்பட்டனர். அதனைக் கண்ட சான்றோர்கள் அத்தகைய குற்றம் மேன்மேலும் பெருகாமலிருக்கும் பொருட்டு பலரின் முன்னிலையில், பெற்றோர்கள் உடன்பட்டுக் கொடுக்கும் திருமண முறையை உண்டாக்கினார்கள்.

சங்க இலக்கியங்களில் மணவினை குறித்த செய்திகள் பல்வேறு இடங்களில் காணப்படுகின்றன. நானிலச் சூழல், திணைநிலை, மக்களின் ஒழுக்கம், வாழ்க்கை அமைப்பு, அவர்களின் இனமரபு, பண்புகள் ஆகியவற்றிற்கேற்பத் திருமணச் சடங்குகள் அமைக்கப்பட்டிருந்தன.

கலித்தொகை பாடல்வழி இருமணம் கூடுதல் இல் இயல்பு அன்றே என்ற கருத்து நிறுவப்படுகின்றது. ஆனேறுகளைத் தழுவி திருமணம் நடைபெற்றது. கொல்லேற்றி நினைத் தழுவிய ஆண்மகனையே பெண்மகள் விரும்பினர்.

மனைவியன்றி வேறு பெண்களோடு தலைவன் மணந்து கொள்ளலும் பரத்தையோடு உறவு கொள்ளலும் காணப்பட்டன ; என்றாலும் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாடே மிக உயர்ந்ததாகக் கருதப்பட்டது.

**இல்வாழ்க்கை**

தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே உள்ள அன்பினைச் சங்க இலக்கியங்கள் மிகவும் நயமுடன் கூறியுள்ளன. தலைவனும், தலைவியும் ஒன்றுபட்ட கொள்கையோடு இல்லறம் நடத்துவதையே இன்பமெனக் கொண்டனர்.

இதனை

> **அன்னாய் வாழிவேண்டன்னை நம் படப்பைத்**
> **தேன் மயங்கு பாலினும் இனிய அவர் நாட்டு**
> **உலலைத் கூவல் கீழ்**
> **மான்உண்டு எஞ்சிய கலுழி நீரே[53]**

என்ற ஐங்குறுநூற்றுப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

தலைவன் குடும்பம் வறுமையுள்ள நிலையிலும் தலைவி செம்மாந்து வாழ்க்கை நடத்தியதை நற்றிணை தெரிவிக்கிறது.

> **கொண்ட கொழுநன்குடி வறன் உற்றென,**
> **கொடுத்த தந்தை கொழுஞ் சோறுஉள்ளாள்,**
> **ஒழுகுநீர் நுணங்கு அறல் போல,**
> **பொழுது மறத்து உண்ணுஞ் சிறு மதுகையளே[54]**

இப்பாடலில் தலைவி தனது கணவனுடைய குடி வறுமையுற்றதாக இருப்பினும் தன்னை ஈன்ற தந்தை வீட்டிலுள்ள வளம் பொருந்திய உணவை விரும்பாதவளாய் விளங்குகிறாள். இதன்வழி வறுமைத் துன்பத்தின் போதும் தலைவி தலைவன்பால் கொண்ட அன்பு புலப்படும்.

கணவனும் மனைவியும் மிகவும் ஒன்றி வாழ்ந்தமையால் அன்புடைய இருவர் மீண்டும் பிறந்து நல்வினையின் செயலால் எதிர்படுவாராயின் தலைவன் தலைவியின் நெஞ்சம் செம்மண் நிலத்தில் பெய்த மழைநீரைப் போலக் கலந்து ஒன்றாகும்

இயல்பையுடையதாகிறது.

**இம்மை மாறி மறுமை ஆயினும்,**
**நீ ஆகியர் எம் கணவனை**
**யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே**[55]

என்ற பாடல் தலைவி தலைவன் பால் கொண்ட அன்பின் எல்லை மறுமைக்கும் மேலானது என்பதை விளக்கும்.

**இல்லறக் கடமை**

இல்வாழ்க்கையின் இல்லறக் கடமையில் தலைசிறந்த அறமாக விருந்தோம்பல் பேணப்பட்டது. சங்ககால மக்கள் தங்களை நாடி வரும் விருந்தினர்களை அன்புடன் வரவேற்று உபசரித்தனர். அவர்கள் தாங்கள் ஈட்டிய செல்வத்தினை விருந்தோம்பலுக்குச் செலவிடுவதைப் பெரிதும் விரும்பினர். விருந்தினரைக் கவனிக்க இயலாத சூழ்நிலை நேருமானால் அவர்கள் பெரிதும் வருந்தினர். அக்காலத்தில் வியாபாரம் நிமித்தமாக ஊர்விட்டு ஊர் செல்லும் அவசியம் இருந்தது. வெளி ஊர்களுக்குச் செல்லும் இடத்தில் உணவுவிடுதிகள் எல்லாம் அக்காலத்தில் கிடையாது. ஆகையால் பசியைத் தீர்த்து, படுத்து உறங்க இடமளிப்பதைச் சங்க கால மக்கள் பெருமையாகக் கருதினர்.

தலைவி தலைவனிடத்து ஊடலில் இருந்தால், தலைவன் விருந்தினரோடு இல்லம் திரும்புவான். உடனே தலைவி தன் ஊடலையும் மறந்து விருந்தினரை வரவேற்று அன்புடன் விருந்தளிப்பாள்.

சங்ககால மக்கள் விருந்தினர்க்கு அசைவ உணவு வகைகளை விருந்தாக அளிப்பதில் பெரிதும் நாட்டம் கொண்டனர். பெட்டைக் கோழிக்கறியை முல்லைப் பூ போன்ற சமையலுடன் பரிமாறினர். வாழை இலையையும் ஆம்பல் இலையையும் உணவு பரிமாறப் பயன்படுத்தினர்.

**இருங் கிளை ஞெண்டின் சிறு பார்ப்பு அன்ன**
**பசுந் தினை மூரல் பாலொடும்**[56]

என்று பெரும்பாணாற்றுப்படை அரிசிச்சோற்றை நண்டுக் கலவையுடன் சமைத்தும், தினையால் ஆக்கிய சோற்றைப் பால்சோறாக்கியும் விருந்தினர்க்குப் பரிமாறியதைக் குறிப்பிடுகிறது.

சங்ககால மக்கள், வறுமையுள் செம்மையைப் போற்றினர். தாம் எவ்வளவுதான் எளிய வருவாயில் இருப்பினும் மனநிறைவோடு வாழும் வாழ்க்கையை விரும்பினர்.

**விருந்து உண்டு எஞ்சிய மிச்சில் பெருந்தகை**
**நின்னோடு உண்டலும் புரைவது என்று ஆங்கு**
**அறம் புனை ஆகத்தேற்றி,**[57]

என்ற குறிஞ்சிப்பாட்டின் அடிகள் விருந்தோம்பலின் சிறப்பை விளக்குகிறது.

**நம்பிக்கைகளும் சடங்குகளும்**

“சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிக்கவல்லன அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள் ஆகும். நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுகின்றன. சங்க கால மக்கள் அவரவர் சமூக, சூழ்நிலைக்கு ஏற்ப வழிபாட்டுச் சடங்குகளையும், பலியிடுதல், படைத்தல் போன்ற வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் கடைபிடித்தனர்.

**வேள்வி**

சங்க காலத்தில் யாகம் மன்னர்கள் மத்தியில் பரவலாகக் காணப்பட்டுள்ளன.

இதனை

**ஆன்ற வேள்வி அடங்கிய கொள்கை**
**நான்மறை முதல்வர் சுற்ற மாக**
**மன்னர் ஏவல் செய்ய மன்னிய**
**வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே**[58]

என்ற பாடல், ஐம்புலன் அடக்கிய நோன்பினையும் அந்தணர்கள் வேள்வி செய்ததையும் குறிப்பிடுகிறது. மற்றொரு பாடல் யாகத்தூண்கள் பல நாட்டப்பட்ட நாட்டை உடையவன் என்று முதுகுடுமிப் பெருவழுதியைச் சிறப்பிக்கின்றது.

**கேள்வி கேட்டுப் படிவம் ஒடியாது**
**வேள்விவேட்டனை உயர்ந்தோர் உவப்ப**[59]

என்றும்,

**தொலையாக் கொள்கைச் சுற்றம்சுற்ற**
**வேள்வியில் கடவுள் அருந்தினை கேள்வி**
**உயர்நிலை உலகத்து ஐயர் இன்புறுத்தினை**[60]

என்றும்,

அந்தணர் கூறிய விரதங்களில் தவறாமல், தேவர்கள் மகிழ வேள்வி செய்தவன் பெருஞ்சேரலிரும்பொறை எனப் பதிற்றுப்பத்தும் கூறுகின்றன.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார்

**களம்தோறும் கள் அரிப்ப**
**மரம்தோறும் மை வீழ்ப்ப**
**நிண ஊன் கட்டு உருக்கு அமைய**
**நெய் கனிந்து வறை ஆர்ப்ப**
**குருஉக் குய்ப் புகை மழை மங்குலின்**
**பரந்து தோன்றா வியல் நகரால்**
**பல் சாலை முது குடுமியின்**
**நல் வேள்வித் துறை போகிய**[61]

வேள்விகள் செய்வாயாக எனக் கூறுகிறார்.

பருந்து வடிவமாகச் செய்யப்பட்ட வேள்விக்களத்தில் வேள்வித்தூண் நட்டு வேள்வி செய்ததை,

**பருதி உருவின் பல்படைப் புரிசை**
**எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்**
**வேத வேள்வித் தொழில் முடித்ததூஉம்**[62]

என்றபுறப் பாடல் அடி தெளிவுபடுத்துகிறது.

சங்க காலத்தில் போர் வெற்றிக்கு யாகபலிகள் இன்றியமையாதனவாக இருந்தது.

### பலியிடுதல்

சங்க கால மக்கள் அச்சத்தின் காரணமாகவும், கிடைத்த வெற்றிக்கு நன்றிக்கடன் செலுத்தும் காரணத்திற்காகவும் பலி கொடுத்தல் என்ற பழக்கத்தைக் கடவுளுக்குச் செய்வதில் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். அவ்வாறு காணிக்கையாகச் செலுத்தப்படும் பலியிடுதலை, அவிப்பலி, நவகண்டம், தூங்குதலைக் கொடுத்தல் என அழைத்தனர்.

### அவிப்பலி

“தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி” எனத் தொல்காப்பியர் தொல்காப்பியப் புறத்திணையில் கூறியுள்ளார். போரின் போது வெற்றியைத் தருமாறு வேண்டி உயிரை விடுவது அவிப்பலி எனப்படும்.

செஞ்சோற்றுக் கடனுக்காக மறவர்கள் வாட்போரில் தம் உயிரைக் கொடுப்பது அவிப்பலி எனப்படும் என்று புறப்பொருள் வெண்பாமாலையும் கூறியுள்ளது.

**வெள்வான் அமருட் செஞ்சோ றல்லது**
**உள்ளா மைந்தர் உயிர்ப்பலி கொடுத்தன்று**[63]

### தூங்கு தலைகொடுத்தல்

போர்க்களத்துக்கு உரிய தெய்வமாகிய கொற்றவைக்கு உயிர்பலி கொடுப்பததைத் தூங்கு தலைகொடுத்தல் என்பர். இதனை மணிமேகலையும்

கலிங்கத்துப்பரணியும் குறிப்பிட்டுள்ளது.

உலையா உள்ளமோடு உயிர்க்கடன் இறுத்தோர்
தலைதூங்கு நெடுமரத் தாழ்ந்து புறஞ்சுற்றிப்
பீடிகை யோங்கிய பெரும்பலி மூன்றில்"

என்று மணிமேகலையும்,

வீங்குதலை நெடுங்கழையில் மிசைதோறும்
திசைதோறும் விழித்து நின்று
தூங்குதலை சிரிப்பின் கண்டு உறங்குதலை
மறத்திருக்கும் சூழல்கள் சூர்ப்பேய்
அரிந்த தலையுடன் அமர்ந்தே கடுகழை
அலை குருதிப் புனலில் மூழ்கி இருந்த உடல்
இருந்த உடல் கொளக்காலன் இடுகின்ற
நெடுந்தூண்டில் எனத் தோன்றும்"

பலியாகக் கொடுத்த வீரர்களின் தலைகள் மூங்கில்களின் நுனியில் தொங்கிப் பார்ப்பதற்குச் சிரிப்பன போலவும், வீரர்களின் உடல்களை எமன் தூண்டில் போட்டுக் கைப்பற்றுவது போலவும் காட்சியளிப்பதாகக் கலிங்கத்துப்பரணி கூறுகிறது.

வளைந்த மூங்கிலில் வீரனின் தலை முடி பிணைக்கப்பட்டு வலக் கையால் தலையை அறுத்துக் கொற்றவைக்கு இடும் உயிர்ப்பலியாக இந்த தூங்குதலை கொடுத்தலைக் கல்வெட்டுகள் சித்திரிக்கின்றன. இதை ப. வெங்கடேசன் விளக்கியுள்ளார்.

மதுரையிலிருந்து முப்பது கிலோமீட்டர் தொலைவிலுள்ள மடப்புறம் என்னும் ஊரில் அய்யனார் கோயிலில் கருவறைக்குச் செல்லும் நுழைவு வாயிலில் இருபுறமும் வாயிற்காவலர்கள் போன்று இரண்டு நடுகற்கள் வைக்கப்பட்டுள்ளன. வலப்புறம்

உள்ள நடுகல்லில் வீரன் ஒருவன் இடக் காலை மண்டியிட்டு வலப்பக்க முழங்காலைத் தரையில் வைத்து இடக்கையால் தம் குடுமியைப் பிடித்து, வலக்கையில் பிடித்துள்ள கத்தியால் தம் தலையை அறுக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளான். இச்சிற்பத்தின் தலைக்கு மேல்,

1. தூங்கு தலை குடுத்தான்
2. சித்திர சரிதன்

என இரண்டு வரியில் கல்வெட்டு ஒன்று செதுக்கப்பட்டுள்ளது.

இது சித்திர சரிதன் என்பவன் கொற்றவைக்குத் தூங்கு தலை கொடுத்தலைக் குறிப்பிடுகிறது.

இதே கோயிலின் கருவறையின் இடப்புறமுள்ள மற்றொரு நடுகல்லில், வீரன் வலதுக் காலை மண்டியிட்டு இடப்பக்க முழங்காலைத் தரையில் வைத்து, இடக் கையில் தனது குடுமியைப் பிடித்து வலக்கையில் பிடித்துள்ள கத்தியால் தம் தலையை அறுக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளன. இச்சிற்பத்திற்குப் பக்கத்தில் இரண்டு வரியில் கல்வெட்டு ஒன்று வெட்டப்பட்டுள்ளது.

1. தூங்கு தலை குடுத்தான்
2. வல்லபன்

இதில் வல்லபன் என்பவன் கொற்றவைக்குத் தூங்கு தலை கொடுத்தான் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பால் (ஊழ்)

வாழ்க்கையில் விதி பற்றிய நம்பிக்கையினைச் சங்க கால மக்கள் பால், ஊழ் என்று சுட்டினர். குறுந்தொகையில் ஊழ் பற்றிய செய்திகள் வந்துள்ளன. அவை பால் என்றே குறிக்கப்பட்டுள்ளன. நாம் செய்யும் நல்வினை நல் ஊழினையும் தீயசெயல் தீய ஊழினையும் உண்டாக்கும் எனச் சங்ககால மக்கள் நம்பினர்.

தலைவன் தலைவியின் நினைவால் வருத்தம் அடைகிறான். அவ்வருத்தத்திற்கு ஊழ்வினையே காரணம் என எண்ணுகிறான். இதனைக் குறுந்தொகை,

**குண கடல் திரையது பறை தபு நாரை**
**திண் தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை**
**அயிரை ஆர் இரைக்கு அணவந்தா அங்குச்**
**சேயள் அரியோள் படர்தி**
**நோயை நெஞ்சே! நோய்ப் பாலோயே"[64]**

என்று குறிப்பிட்டுள்ளது,

ஊழ்வினையின் வலிமையினால் தலைவனும் தலைவியுமாகச் சேர்ந்தனர் என்று மற்றொரு குறுந்தொகைப்பாடல் கூறுகிறது.

**இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவள்இவன்**
**புன் தலை ஓரி வாங்குநள் பரியவும்,**
**காதற் செவிலியர் தவிர்ப்பவும் தவிராது,**
**ஏதில் சிறு செரு உருபமன்னோ**
**நல்லை மன்றம்ம பாலே மெல் இயல்**
**துணை மலர்ப் பிணையல் அன்ன இவர்**
**மணம் மகிழ இயற்கை காட்டியோயே[65]**

ஊழானது, பால், முறை, பொறி என்ற பெயர்களாலும் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்**
**முறைவழிப் படூஉம் என்பது திறவோர்**
**காட்சியின் தெளிந்தனம்.[66]**

எனும் புறநானூற்றுப் பாடல் அடிகள், ஆற்றின் நீரின் வழியே செல்லும் தெப்பத்தைப்போல உயிரானது ஊழின் வழியே செல்லும் என்கிறது.

இப்பிறப்பில் மட்டுமன்றி மறுபிறப்பிலும் கூடி வாழ்வதற்கு விதியினை நம்பினர் என்பதை,

**இம்மை போலக்காட்டி உம்மை**

**இடையில் காட்சி நின்னொடு**

**உடன் உறைவு ஆக்குக உயர்ந்த பாலே[67]**

புறநானூற்றின் பாடல் அடிகள் விளக்குகின்றன.

வேள்வி, ஊழ், பலியிடுதல், முதலியவற்றில் மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். இதுபோன்ற நம்பிக்கைகளும், அச்சமுமே சடங்குகள் பலவற்றிற்குக் காரணமாக இருந்தன. குழந்தை பிறந்தவுடன் 16ஆவது நாளிலோ ஓராண்டு நிறைவிற்குள்ளோ குழந்தைக்குக் காது குத்துதல் என்ற சடங்கைச் செய்தனர். பெண்கள் பருவமடைந்ததை ஒட்டிப் பூப்புனித நீராட்டு என்னும் சடங்கினையும் செய்தனர். தினமும் இல்லங்களில் விளக்கேற்றுதல் புனிதச் சடங்காக மதிக்கப்பட்டது. புதிதாக இல்லம் கட்டிப் புதுமனை புகும்போதும், திருமணம் போன்ற எல்லா நிகழ்ச்சிகளுக்கும் விளக்கேற்றுதல் முக்கியச் சடங்காகக் கருதிச் செய்யப்பட்டது.

## இறப்பு

குழந்தை இறந்து பிறந்தாலோ (உருவமற்றுப் பிறந்தாலோ) அதனைக் அடக்கம் செய்யும் வழக்கம் இன்றும் பல இடங்களில் பின்பற்றப்படுகின்றன. இறந்தவர்கள் உடம்பினைத் தாழியிற் கவிழ்த்துப் புதைத்தலும், விறகிட்டு எரித்தலும் ஆகிய இருவகைப் பழக்கங்களும் நிலவின. வீரர்கள் போர்க்களத்தில் உயிர் துறத்தலையே தங்களுக்குரிய சிறப்பாகக் கருதினார்கள். அரசர்களும், வீரர்களும் போர்க்களத்தில் இறவாமல் நோயினால் இறந்தால் அவர்கள் உடம்பினை வாளினால் சிறிது பிளந்து பின்னரே அடக்கம் செய்தனர். சங்க மக்கள் போர்த்துறையில் கொண்ட மதிப்பும் வீர உணர்ச்சியும் இதன் மூலம் நன்கு விளங்குகிறது.

ஈமச்சடங்கு

**காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்**
**சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்**[68]

ஒருவர் இறந்தபின் அவரது உடலை காட்சிக்கு வைத்து உற்றார் உறவினர் துக்கத்தினை வெளிப்படுத்துவர். பின்னர் அடக்கஞ் செய்வதற்குரிய நல்ல நேரத்தினைப் பார்த்து அவ்வுடலை நீராட்டி ஈமச்சின்னத்தில் அடைக்கலஞ் செய்வர். பின்னர் பெருஞ்சோறு படைத்து வணங்குவர் என்று தொல்காப்பியர் இறந்தவர்களின் உடலை அடக்கம் செய்யும் முறைமையினை குறிப்பிட்டுள்ளார்.

இறந்தவர்களை வழிபடுவது என்பது பழங்காலத்தில் இருந்தே வரும் பழக்கமாகும். போரில் இறந்த வீரர்களுக்கு வீரக்கல் நட்டு அதில் அவர்களின் பெயர்களையும் செயல்வீரத்தையும் எழுதி அவர்களின் நினைவாக வணங்கி வந்தார்கள். இறந்தவர்களின் நினைவால் பெரும்பிடி, பெருஞ்சோற்றுப்பதம் போன்ற நிகழ்ச்சிகளை நடத்தி வணங்கினார்கள். புறநானூற்றுப் பாடல்கள் சில இந்நிகழ்ச்சிக்குச் சான்றாக அமைந்துள்ளன.

இறந்த வீரர்களுக்கு நடுகல் வைத்து வணங்குதல் ஈமச்சடங்கில் ஒன்றாய் இருந்தது. கள், தேன் ஆகியவற்றை இறந்தவர்க்குப் படைத்து ஆடு பலியிடப்பட்டதை கீழ்வரும் அகப்பாடல் அடிகள் காட்டுகின்றன.

**நடுகல் பீலி சூட்டி, துடிப்படுத்து**
**தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும்**[69]
**பெயரும் பீடும் எழுதி, அதர்தொறும்**
**பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்**[70]

**கல்பதுக்கை**

இறந்தவர்களின் உடல்களைத் தாழியிலிட்டுப் புதைத்த இடத்தைச் சுற்றிப் பெருங்கற்களை அரணாக வைப்பதைப் பதுக்கை என்றனர்.

பிணமோ, ஈமத்தாழியோ புதைக்கப்பட்ட இடத்தைச் சுற்றிப் பெருங்கற்களை வட்ட வடிவில் நிறுத்தி உட்புறத்தே கற்களைக் குவித்து விடுதல் அக்காலத்தில் வழக்கில் இருந்தது.

இறந்தவர்களை எரித்தல் பற்றிய செய்திகள் புறநானூற்றின் வழிப் புலனாகின்றன. நடுகல்லுக்குப் பலி கொடுத்து நெய்விளக்கு ஏற்றும் பழக்கமும் இருந்தது. இறந்தவர்களின் உடல் மீது விறகினை அடக்கிச் சுடுதலும் பின்பற்றப்பட்டன.

இதனை,

**எரிபுனக் குறவன் குறையல் அன்ன**
**கரிபுற விறகின் ஈம ஒள் அழல்**[71]

என்ற புறநானூற்றின் பாடல் வழி அறியலாம்.

**கலம்செய் கோவே கலம்செய் கோவே**
**அச்சுடைச் சாகாட்டு ஆரம்பொருந்திய**
**சிறுவெண் பல்லி போலத் தன்னொடு**
**சுரம்பல வந்த எமக்கும் அருளி**
**வியன்மலர் அகன்பொழில் ஈமத் தாழி**
**அகலிது ஆக வனைமோ**
**நனந்தலை மூதூர்க் கலம் செய் கோவே**[72]

எனவரும் புறநானூற்றுப் பாடல் இறந்தவர்களின் உடலைத் தாழியில் வைத்துப் புதைக்கப்பட்டமையைச் சுட்டுகின்றது.

**நிமித்தங்கள்**

சங்க கால மக்கள் ஒரு செயலைச் செய்யத் தொடங்கும்முன் நிமித்தம் பார்ப்பதை மரபாகக் கொண்டிருந்தனர். இதனைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. அவ்வாறு நிமித்தம் பார்ப்பதை அவர்கள் முக்கியமாகவும்

எச்சரிக்கையாகவும் கருதினர். பின்னிகழ்வதை முன்பே அறிவிப்பது நிமித்தம் என நம்பினர். நிமித்தம் பார்ப்பதை மக்கள் புள் என்றழைத்தனர். பறவைகள், ஓணான், பல்லி போன்றவற்றினைக் கொண்டும் நிமித்தங்களை அறிந்தனர்.

**நற்சொல்கேட்டல்**

நெல்லையும் நீரையும் கொண்டு தெய்வத்தை வணங்கி முதிய பெண்கள் விரிச்சி கேட்பதை,

**நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்**
**செம்முது பெண்டின் சொல்லும்**[73]

என்ற புறநானூற்று அடிகள் கூறுகின்றன.

தன்னைப் பிரிந்த தலைவனை நினைத்துப் புலம்பிய தலைவி கடவுள் வழிபாடு, நிமித்தம் பார்த்தல் போன்றவை செய்து என்ன பயன் என வருந்துவதாகக் குறுந்தொகைப் பாடல் கூறுகிறது.

**விடர் முகை அடுக்கத்து விறல் கெழு சூலிக்குக்**
**கடனும் பூணாம் கைந் நூல் யாவாம்**
**புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம்**[74]

என்ற பாடல் வாயிலாக நிமித்தம் பார்த்தல் அக்காலத்தே பெருவழக்காக விளங்கியமையை அறியலாம்.

மலை படுகடாம் என்னும் சங்க நூல், பரிசில் பெறச் சென்ற பரிசிலர் ஒருவரைப் பரிசு பெற்ற ஒருவர் நிமித்தம் பார்த்துச் செல்வாயாக எனக் கூறுவதாக வந்துள்ளது.

**நன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையொடு**
**உள்ளினீர் சேறிராயிற் பொழுதெரிந்த**
**புள்ளினர் மன்ற**[75]

புள்நிமித்தம்

சங்க கால மக்கள் பறவைச் சகுனம் பார்ப்பதை 'புள்நிமித்தம்' என வழங்கினர். ஓணான் கொண்டு பார்க்கப்படும் சகுனத்தையும் புள்நிமித்தம் என்றே அழைத்தனர்.

தலைவன், பொருள்தேடும் பொருட்டு வெளியூர் செல்லும் போது பாலை நிலத்தில் முதிய ஆண் ஓணான் தங்கியிருப்பதைப் பார்த்து நன்னிமித்தமாகக் கருதினான். இதனைக் குறுந்தொகைப் பாடல்,

**வேதின வெரிநின் ஓதி முது போத்து**
**ஆறு செல் மாக்கள் புள் கொளப் பொருந்தும்**
**சுரனே சென்றனர்...[76]**

என்ற பாடல் ஆண் ஓணானைப் பார்த்துச் செல்லல் நன்னிமித்தங்களில் ஒன்றாகும் என்பதைச் சுட்டுகிறது.

**மகளிர் நிமித்தம்**

செம்மையான அணிகலன்களை அணிந்த மகளிர், எதிரில் வருவதை நல்லதொரு காரியத்தை நிறைவேற்றும் பொருட்டு வெளியில் செல்லும்போது நன்னிமித்தமாகக் கருதினர். மேலும் பெண்களின் இடக்கண் துடிப்பதும் இடத்தோள் துடிப்பதும் வளையல்கள் இறுகுவதும் நன்னிமித்தங்களாகக் கருதப்பட்டதை,

**நுண்ணோர் புருவத்த கண்ணும் ஆடும்**
**மயிர்வார் முன்கை வளையும் செறூஉம்**
**களிறுகோள் பிழைத்த கதழ்சிறந்தெழு புலி**
**எழுதரு மழையின் குழுமும்**
**பெருங்கல் நாடன் வருங்கொல்? – அன்னாய்[77]**

எனும் ஐங்குறுநூற்றின் பாடல் தெரிவிக்கின்றது.

பெண்களே பெரும்பாலும் நிமித்தம் பார்ப்பவர்களாக இருந்துள்ளனர். குழந்தை பிறந்ததும் நன்னிமித்தம் பார்த்தனர் என்பதை நற்றிணைக் குறிப்பிடுகிறது.

**திருத்து இழை மகளிர் விரிச்சி நிற்ப,**
**வெறிஉற வரிந்த அறுவை மெல் அணைப்**
**புனிறு நாறு செவிலியோடு புதல்வன் துஞ்ச[78]**

பல்லி சகுனம்

பல்லி சொல்லுக்குப் பலன் பார்ப்பதும், பல்லி உடலின் மீது விழுந்தால், எந்தப் பாகத்தின் மீது விழுகிறதோ அதற்கு ஏற்ற சகுனத்தைப் பார்ப்பதும் இன்றும் நடைமுறையில் கடைபிடிக்கும் சகுனங்களில் ஒன்றாகும். முள்ளம்பன்றி ஒன்று பல்லியடித்ததை நிமித்தமாகப் பார்த்ததை

**எய்ம்முள் அன்ன பரூஉமயிர் எருத்தின்**
**செய்யய்ம்ம சிறு கட் பன்றி**
**ஓங்கு மலை வியன் புனம் படீஇயர், வீங்கு பொறி**
**நூழை நுழையும் பொழுதில், தாழா**
**பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென**
**மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்து தன்**
**கல் சுளைப் பள்ளி வதியும் நாடன்[79]**

என்ற நற்றிணைப்பாடல் குறிப்பிட்டுள்ளது.

காக்கை கரைதல் நிமித்தம்

விருந்தினர் வருகையைக் காக்கை கரைவதன் மூலம் உணர்ந்தனர். காக்கை கரைதலின் நிமித்தம் பார்த்தல் இன்றும் வழக்கில் உள்ள ஒன்றாகும்.

"விருந்து வரக்கரைந்த காக்கையது பலியே"[80]

என்ற குறுந்தொகைப் பாடல் 'காக்கை கரைதல்' நிமித்தம் பற்றிக் குறிப்பிட்டுள்ளது.

## தீயநிமித்தங்கள்

நன் பகலில் தும்பி பறத்தல், ஏற்றி வைத்த விளக்கு நின்று எரியாமை, கோட்டானின் கூக்குரல், நெடுந்தூக்கம் ஏற்படுதல் இவற்றையெல்லாம் தீய நிமித்தமாக சங்ககால மக்கள் கருதினர். இதனை,

யானை கையை நிலத்தில் இட்டு உறங்குவதும், முரசுகள் கிழிந்து உருள்வதும், குதிரைகள் ஓயாமல் முடங்கிக் கிடப்பதும், அரசக்குடை ஒடிந்து விழுவதும் தீயநிமித்தங்களாகக் கருதப்பட்டன.

எண் திசைகளிலும் எரிகொள்ளி எரிந்து விழுதலும், பசுமையான மரங்கள் தீப்பற்றி எரிதலும், ஞாயிறானது பல இடங்களில் தோன்றுதலும், பற்கள் நிலத்தில் விழுதலும், பன்றியானது ஏற்றின் மீது ஏறுவதும் ஆகியவைகளும் தீய சகுனங்களாகக் கருதப்பட்டன.

## விழாக்களும் பண்டிகைகளும்

சங்க கால மக்கள் விழாக்களிலும் பண்டிகைகளிலும் சுற்றத்தாருடன் கூடி மகிழ்ந்தனர். கடவுள்வழிபாட்டுக்குப் பெரிய கட்டிட அமைப்புகள் தேவையில்லை எனக் கருதினர்.

## கோயில்

தமிழக் கோயில்கள் நமது பழம்பெரும் நாகரிகத்தையும் பண்பாட்டுச் சிறப்புகளையும் விளக்கிக் கூறும் அடையாளங்களாகத் திகழ்ந்தன.

கட்டிடக் கலையும் சிற்பக்கலையும் கோயில்களில் சிறந்து விளங்கின. தமிழகத்தில் எண்ணிறந்த கோயில்கள் உள்ளன. காஞ்சிபுரம், திருவண்ணாமலை, சிதம்பரம், திருவரங்கம், கும்பகோணம், தஞ்சாவூர், மதுரை, இராமேசுவரம் போன்ற பல இடங்களில் உள்ள கோயில்கள் மக்களின் நம்பிக்கை வளர்ப்பனவாகவும் அவர்களின் நாகரிகப்பண்பாட்டுச் சின்னமாகவும் திகழ்கின்றன.

கோயிலானது வணங்குவதற்குரிய இடமாக மட்டுமல்லாமல் பண்பாட்டினை விளக்குவதாவும் அமைந்திருந்தது. கல்லும் காடும் கிணறும் சேர்ந்த இடமாகக் கோயில்கள் திகழ்ந்தன. கடவுள் உருவங்கள் தொடக்கத்தில் மரத்தினால் செய்யப்பட்டன. பின்னர்க் கல்லிற் செதுக்கப்பட்டன. அதன் பின்னரே வெண்கலம் போன்ற உலோகங்களால் செய்யப்பட்டன. குளித்தபின்னரே கோயிலுக்குச் செல்லுதல், காலை மாலை இருவேளையிலும் செல்லுதல், கோயிலை வலம் வருதல் போன்ற பழக்கங்கள் சிறந்ததெனக் கடைபிடிக்கப்பட்டன.

பெண்கள், வீட்டில் தெய்வம் உறைகின்ற இடமென்று தனி இடம் ஒன்றை ஒதுக்கினர். அங்குத் தூய்மைப்படுத்தி விளக்கேற்றிப் பூத்தூவி மாலையில் தெய்வ வணக்கம் செய்தனர். சமயச் சடங்குகளில் பூவும் நீரும் பயன்படுத்தப்பட்டன. பெரிய கோயில்களில் பலர் பணியாற்றினர்.

கடவுளுருவங்களை ஆபரணங்களால் அலங்கரித்தனர். ஆபரணங்கள் தங்கம், வெள்ளி, முத்து, இரத்தினம் முதலியவற்றால் செய்யப்பட்டன.

பண்டைக் காலங்களில் கோயில்களில், இசை நடனம் போன்ற கலைகள் போற்றி வளர்க்கப்பட்டன. அக்காலத்தில் கோயில்களே நீதிமன்றங்களின் பணிகளைச் செய்துவந்தன. பொது மக்களின் குறைகளையும் முறையீடுகளையும் விசாரித்து ஊர்ப் பெருமக்கள் கோயில்களிலேயே நீதி வழங்கினர். திருவெண்ணெய் நல்லூர்க் கோயிலில் இன்றும் நீதிவழங்கும் வழக்கு மண்டபங்கள் இருத்தலை அறியலாம். நீதி வழங்குதல் மட்டுமின்றி மருத்துவமனையாகவும் கோயில்கள் செயல்பட்டுவந்தன. காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள திருமுக்கூடல் என்னும் ஊரில் வீரசோழன் ஆதுலர் சாலை என்னும் மருத்துவமனை இருந்ததாக கல்வெட்டுகள் கூறுகின்றன. கோயில்களின் சார்பில் சித்த மருத்துவர்கள் பொது மக்களுக்கு மருத்துவம் பார்த்து வந்துள்ளனர்.
கோயில்கள் நாட்டின் பண்பாடு, கலை, சமயம் போன்றவைகளின் வளர்ச்சிக்கு உறுதுணையாக விளங்குவதால் சமுதாய நல நிலையங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன.

கல்வி சம்பந்தப்பட்ட போட்டிகளும், மற்போர்களும் விழாக்காலங்களில் கோயில்கலில் நடத்தப்பட்டன. புராணம், இதிகாசம் முதலியன படிக்கப்பட்டன. பொதுமக்கள் நாட்டு நடப்பைப் பற்றி ஆலோசிக்கக் கோயிலுக்குச் சென்றனர். சில கோயில்கலின் எல்லைக்குள் பள்ளிக்கூடமும் மருத்துவமனையும் இருந்தன. கோயிலுக்கு நிலங்களையும் பொருள்களையும் தலைமுறை தலைமுறையாக, தானம் செய்வதை மக்கள் பெருமையாகக் கருதினர்.

## வழிபாடு

சங்க கால மக்களுக்குக் கடவுளின் மீது அன்பும் பயமும் மிகுந்து இருந்தன. எல்லாவற்றிக்கும் தலைவன் இறைவனே என்ற கொள்கையுடையவர்களாகத் திகழ்ந்தனர். நிலத்தை ஐந்து பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு தெய்வத்தைத் தலைமையாகக் கொண்டு வழிபாடு நடத்தினர்.

குறிஞ்சிநில மக்கள் முருகனையும், முல்லைநில மக்கள் திருமாலையும், பாலைநில மக்கள் கொற்றவையையும், மருதநில மக்கள் இந்திரனையும், நெய்தல் நிலத்தவர் வருணனையும், தம் நிலத்துக்குரிய தெய்வங்களாகக் கருதி விரும்பி வழிபட்டனர். இந்தத் தெய்வங்களேயன்றி வேறு பல தெய்வங்களையும் அவர்கள் வழிபட்டு வந்தனர். ஊரில் பல கோயில்கள் இருந்தன.

**"தமிழருக்கு முன்பு தமிழகத்தில் வாழ்ந்திருந்த ஆதி குடிகளின் கடவுட் கொள்கைகளும், தமிழ் மக்களின் சமயக் கொள்கைகளும், ஆரியரின் சமயக் கொள்கைகளும் ஒன்று கலந்து சங்க காலத்து மக்கள் சமுதாயத்தில் இடம் பெற்றிருந்தன. வீர வணக்கம், சிவலிங்க வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு போன்றன சுட்டத்தக்கன. கடவுட் தொடர்பான புராணக் கதைகள் பலவும் காணப்பட்டன."**[81]

## சிவ வழிபாடு

சங்க இலக்கியங்களில் சிவன் பல பெயர்களால் வழங்கப்பட்டார். முக்கட்செல்வன், செஞ்சடைக்கடவுள், வெளியன், ஆலமர்ச் செல்வன், கடைமிடற்றண்ணல், காரியுண்டக் கடவுள், பிறவாயாக்கைப் பெரியோன்,

ஏறூர்தியான் போன்ற பெயர்களில் தமிழர்கள் சிவனை வழிபட்டனர். சிவன் தமிழர்களின் முக்கியமான கடவுள் எனப்பட்டார். பிறையும் உடுக்கையும் புலித்தோலும் சிவனுக்குரியதாக விளங்கியது.

செம்பொருளாகிய இறைவனைக் குறித்து வழிபடுதற்குரிய அடையாளமாக ஊர் மன்றத்திலே தறியினை நிறுத்தித் தமிழக மக்கள் வழிபட்டனர். இதனைக் 'கந்து' என்பர். மரத்தால் அமைந்த இத்தூண், பின்னர்க் கருங்கல்லால் அமைக்கப்பட்டு இறைவனைக் குறித்து வழிபடுதற்குரிய அடையாளமாகக் கொள்ளப்பட்டுது. எல்லா நிலத்தவர்க்கும் பொதுவாகிய இந்தக் 'கந்து' வழிபாடே பின்னர்ச் சிவலிங்க வழிபாடாக வளர்ச்சி பெற்றிருக்கவேண்டும்.

## முருக வழிபாடு

முருகவழிபாடு சிவவழிபாட்டின் துணை வழிபாடாக விளங்கியது. குறிஞ்சி நிலத்து மக்கள் முருகனை முதன்மையாக வைத்து வழிபட்டனர். முருகனை வெற்றிக் கடவுளாகவும், சேவற்கொடி உடையவனாகவும் கொண்டு வழிபட்டனர். திறந்த வெளிகளில் சேவற் கொடியினை நட்டு வேலாட்டம் முதலியவை செய்து பூசை நடத்தினர்.

**கடம்பு கொடி யாத்து, கண்ணி சூட்டி**
**வேறு பல் குரல ஒரு தூக்கு இன் இயம்**
**காடு கெழு நெடு வேட் பாடு கொளைக்கு ஏற்ப**
**அணங்கு அயர் வியன் களம் பொலிய, பையத்**
**தூங்குதல் புரிந்தனர், நமர் என...**[82]

என்ற பாடல் வழி வெறியாட்டம் நடந்ததைக் குறிப்பிடுகிறது.

## இந்திர வழிபாடு

சக்கரக் கடவுள் வழிபாடு இந்திர வழிபாட்டுடன் தொடர்புடையதாய்த் திகழ்ந்தது. சக்கரக் கடவுள் என்பது இந்திரனைக் குறித்தது. சக்கரக்கடவுள்

வழிபாடும், வேந்தன் வழிபாடும் ஒன்றுபட்டு இந்திர வழிபாடு ஆயின.

## சூரற மகளிர் வழிபாடு

அச்சத்தின் காரணமாக மக்களிடையே பேய், பிசாசு, நிழற்கடவுள், குட்டிச்சாத்தான் முதலியவற்றில் நம்பிக்கை ஏற்பட்டது. மந்திர தந்திர முறைகளின் வளர்ச்சிக்கு மக்களின் அச்சம் பெருங்காரணமாக அமைந்தது. அச்சமேற்படுத்தக் கூடியது எனவும் அபாயத்தைத் தரவல்லது எனவும் கருதி அணங்கில் நம்பிக்கை வைத்தனர். சூரறமகளிர் அச்சம் தரும் தெய்வமகளிர் எனக் கருதினர். பாலை நிலத்திலும் மலைநாட்டுப் பகுதியிலும் அச்சம்மூட்டும் கடவுளாகச் சூலி, கொற்றவை முதலிய தெய்வங்கள் வணங்கப்பட்டன. வேப்பந்தழை, இரவம் தழை, வெண்சிறுகடுகு முதலியவை பேய் பிசாசை விரட்டக்கூடியவை என்றும், ஆல், வேல் கடம்பு, வில்வம், கொன்றை முதலியவை கடவுள்களுக்கு விருப்பமானவை என்றும் நம்பி வழிபட்டனர்.

## கொற்றவை வழிபாடு

மனித இனத்திற்கு மிகவும் தேவையான கல்வி செல்வம், வீரம் என்றும் முப்பொருள்களுக்கும் உரிய கடவுள்களாகக் கொண்டு நாமகள், திருமகள், கொற்றவை முதலிய பெண் தெய்வங்களைத் தமிழர் வணங்கினர். கொற்றவை வழிபாடு மிகவும் தொன்மை வாய்ந்ததாகும் கொற்றவையை வீரக்கடவுளாகவும் வெற்றிக்கடவுளாகவும் வழிபட்டனர்.

கொற்றவையின் வடிவினைப் பரிபாடல் தந்துள்ளது :

**பாய் குழை நீலம் பகலாகத் தையினாள்**
**குவளை குழைக்காதின் கோலச் செவியின்**
**இவள் செரீஇ நான்கு விழி படைத்தாள் என்று**
**நெற்றி விழியா நிறை திலகம் இட்டாளே**
**கொற்றவை கோலம் கொண்டு ஓர் பெண்** [83]

### ஆயுத வழிபாடு

தெய்வங்களை மட்டுமின்றி அவர்களது ஆயுதங்களை வழிபடும் முறையும் இருந்து வந்தது. இந்திரனது வச்சிராயுதம், சிவனின் சூலம், முருகனின் வேல் முதலிய பல ஆயுதங்களைத் தூய்மைப்படுத்தி மலர் முதலியன சூட்டிப் பூசை செய்து வழிபட்டனர்.

### நடுகல் வழிபாடு

வீரர்களுக்கு நாட்டப்பட்ட நடுகற்களும் வழிபாட்டிற்குரியனவாகத் திகழ்ந்தன. நடுகற்களுக்குப் பூசை செய்யப்பட்டன. ஆடும், மதுவும் பலியாகத் தரப்பட்டன. காத்தவராயன், மதுரைவீரன், கறுப்பண்ணன், பாவடைராயன் போன்றவழிபாடுகள் இவ்வகையில் வந்தவைகளேயாகும்.

### இயற்கை வழிபாடு

மரங்கள், ஆறுகள், காடுகள், மலைகள் இவற்றிலும் தெய்வங்கள் உறைவதாகக் கொண்டு வழிபட்டனர். ஆகாயம், காற்று, நீர், தீ, நிலமாகிய ஐம்பெரும் பூதங்களின் இயல்பைச் சங்க கால மக்கள் நன்கு அறிந்திருந்தனர். அவற்றைக் கடவுளாக வடிவம் அமைத்து வணங்கவும் செய்தனர். இயற்கையை ஒப்புயர்வில்லாக்கடவுளாகக் கொண்டனர். சங்ககால மக்கள் ஐம்பெரும் பூதங்களின் தோற்றத்தை நன்கு உணர்ந்திருந்தனர்.

கடவுள் நம்பிக்கையே, இயற்கை வழிபாட்டின் அடிப்படையில்தான் தோன்றியது எனலாம். பிறைதொழுதல் என்னும் இயற்கை வழிபாடு இன்றும் நடைமுறையில் உள்ளது. பிறைதொழுதல் என்பது மூன்றாம்பிறை சந்திரனை தொழுதல் ஆகும். பிறைதொழுதல் பற்றிய குறிப்புகள் குறுந்தொகையில் வந்துள்ளன.

**தொழுது காண் பிறையின் தோன்றி, யாம் நுமக்கு**
**அரியம் ஆகிய காலைப்**
**பெரிய தோன்றினிர் நோகோ யானே[84]**

என்னும் குறுந்தொகைப் பாடல் கன்னிமகளிர் தொழும் மூன்றாம் பிறை காண்பதற்கு அரியது என்று கூறுகிறது. மேலும்,

**வளை உடைத்தனையது ஆகிப் பலர் தொழச்**

**செவ் வாய் வானத்து ஐயெனத் தோன்றி**[85]

என்னும் குறுந்தொகைப் பாடல் மூலம் வளை உடைந்தாற் போன்று தோன்றும் பிறை கன்னி மகளிர் தொழுகைக்கு உரியது என்ற கருத்தினையும் அறியலாம்.

**"முதலில் தமிழர் இறந்த முன்னோரையும், ஞாயிறு திங்கள் யானை பாம்பு முதலியவற்றையும் வழிபட்டனர். பின்னர், முன்னோர் வழிபாடும் ஞாயிற்றின் வழிபாடும் கலந்த சிவவழிபாடாக மாறிற்று தெய்வத்தை ஆண் வடிவிலும் பெண் வடிவிலும் அவர்கள் வழிபட்டமையால் திங்கள் வழிபாடு சக்தி வழிபாட்டில் அடங்குவதாயிற்று, யானை வழிபாடு பிள்ளையார் வழிபாடாயிற்று. யோக நெறிகள் வந்தபின் பாம்பு ஆதார சக்திக்கும் குண்டலி சக்திக்கும் அறிகுறியாயிற்று கருநிறமுடைய மாயோன் வழிபாடு மாயோன் வழிபாடாயிற்று. எனவே ஒரு காலத்தில் சிவன், அம்மை, திருமால், பிள்ளையாா, முருகன், கதிரவன் என்ற ஆறு தெய்வங்களும் சிறந்த முறையில் வழிபடப்பட்டனர். அவர்களுக்குரிய நெறி அறுவகைச் சமய மெனப்பட்டது."**[86]

இயற்கை வழிபாட்டின் எச்சங்களாகக் கிராமப்புறங்களில் இன்றும் பல நிகழ்வுகள் நிகழ்கின்றன. மழை வேண்டி யாகம் வளர்த்தல், மழை வேண்டிக் கழுதைக்குத் திருமணம் செய்வித்தல் போன்றவை குறிப்பிடத்தக்கன.

**விழாக்கள்**

உள்ளத்திற்கு மகிழ்ச்சியையும் உறவிற்குள் பிணைப்பையும் ஏற்படுத்துவது விழாக்களும் பண்டிகைகளும் ஆகும். ஆண்டு முழுவதும் ஊர்கள் தோறும் விழாக்கள் கொண்டாடப்பட்டன. விழாக்கள் விழவு எனவும் சாறு எனவும் வழங்கப்பட்டன. பண்டிகைகள் எல்லாமே பக்தியை அடிப்படையாகக் கொண்டே விளங்குவதால் கடவுள் வழிபாடு இல்லாத பண்டிகைகள் அரிது எனலாம்.

விழாக்களிலும் பண்டிகைகளிலும் கடவுள் வழிபாட்டுடன் கலை நயமும் சிறந்து காணப்படும்.

**புதுப்புனல் விழா**

'ஆடி அழைக்கிறது பூசம் போகச் சொல்கிறது' என்று சொல்லும் வழக்கம் உண்டு. ஆண்டு தொடங்கியவுடன் ஆடி மாதத்தில் பண்டிகைகள் ஆரம்பமாகின்றன. ஆடியில் தொடங்கித் தையில் பண்டிகைகள் எல்லாம் முடிகின்றன.

ஆண்டுதோறும் ஆடித்திங்களில் ஆறுகளில் புதுநீர் வருவது வழக்கமாகும். நீர் மக்களின் வாழ்வை வளப்படுத்தவது. அதனால் மக்கள் புதுநீர் வரவை விழாவாகக் கொண்டாடுவதை மரபாகக் கொண்டிருந்தனர். காவிரி வையை போன்ற ஆறுகளில் புது வெள்ளம் வரும்பொழுது புதுப்புனல் விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவில் புனல் தெய்வத்தை வழிபட்டு நீராடி மகிழ்ந்தனர்.

புதுப்புனல் விளையாட்டினைப் பரிபாடல் மிகவும் அழகாக எடுத்துக் காட்டியுள்ளது. நீராட விரும்புகின்ற மகளிர் பூ, ஆராதனைப் பொருட்கள், பொன் மீன் முதலியவற்றை ஏந்தி தத்தம் கணவன்மார்களுடன் சேர்ந்து நீர் விழாவிற்குச் சென்று மகிழ்கின்றனர். 'வையையே யாம் நின்னிடத்தே இன்று ஆடி அகமகிழ்ந்தாற்போல, என்றும் இன்புற்று நின்னைப் பாராட்டி மகிழவேண்டும்' என்று பெண்கள் வேண்டிக் கேட்டுக்கொள்வர். அங்கு ஊடலும் கூடலும் நிரம்பி வழியும்.

**மாரியம்மன் விழா**

மழையை வேண்டி மக்கள் மாரியம்மனுக்கு விழா எடுத்தனர். இவ்விழாவும் ஆடி மாதத்திலேயே வருகின்றது. இவ்விழாவின் பொழுது, கரக ஆட்டம், சிலம்பாட்டம், தெருக்கூத்து போன்றவையெல்லாம் நடத்தப்படும். எல்லா ஊர்களிலும் மாரியம்மன் விழா நடத்தப்படும். மழை வேண்டியும், அம்மை காலரா போன்ற நோயைத் தடுக்கவும் மக்கள் மாரியம்மனுக்கு விழா எடுத்துள்ளனர். மாரி என்றால் மழை என்று பொருளுண்டு. ஆகையால் மக்கள் மாரியம்மனை மழைக்கடவுளாக

வணங்குகின்றனர். கிராமம் நகரம் என்ற வேறுபாடு இன்றி எல்லா ஊர்களிலும் இவ்விழா கொண்டாடப்படுகிறது.

**திருவோணவிழா**

ஆவணி மாதத்தில் நடத்தப்படும் விழாவாகும். திருமால் பிறந்த நாளாக இத்திருவிழா கொண்டாடப்படுகிறது. இவ்விழா மிகச்சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. இவ்விழாவின் போது மறவர்கள் தங்களுக்குள் விளையாட்டாகப் போர் புரிந்து கொள்வார். அதனால் நெற்றியில் வடு உடையவர்களாவர். அவ்வாறு விளையாடும் பொழுது கம்புகள் நிறைந்த போர்ப் பூவினை அணிந்ததாகவும், கள் தெளிவு மற்றும் விருந்துண்டு மகிழ்ந்ததாகவும் மதுரைக் காஞ்சி கூறுகின்றது. இன்று இவ்விழா கேரளா போன்ற இடங்களில் மட்டுமே சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

**கார்த்திகைத் திருவிழா**

ஒளித்திருநாளாகக் கார்த்திகைத் திருவிழாவை மக்கள் கொண்டாடினர். கார்த்திகைமாதம் முழுவதும் மாலையில் விளக்கேற்றுவர். தீபத்தைச் சக்தி தெய்வமாக மதித்து வழிபட்டனர். பண்டைக்காலத்தின் பாவை விளக்குகள் இவற்றைக் குறிப்பதாக எடுத்துக்கொள்ளலாம்.

**நலமிகு கார்த்திகை நாட்டவரிட்ட**
**தலைநாள் விளக்கில் தகைமை யுடையவாகி** [87]

என்ற கார்நாற்பதின் இருபத்து ஆறாவது செய்யுள் கார்த்திகைத் தீபத்தைப் பற்றிக் கூறுகிறது. கார்த்திகை மாதம் கிருத்திகை அன்று இவ்விழா கொண்டாடப்படுகிறது. வீட்டிலும் வாசல்களிலும் வரிசை வரிசையாக விளக்கு வைத்துத் தீபம் ஏற்றுவார்கள். தெருக்கள் முழுவதும் தீப ஒளியில் மிகவும் அழகாக இருக்கும். இன்றும் கார்த்திகைத் திருநாளானது பின்பற்றப்படுகிறது.

இந்திரவிழா போகி என்பவன் இந்திரன் மேகங்களை இயக்கும் இறைவன், தமிழ் நாட்டார் பழங்காலத்தில் இந்திரனை விளை நிலங்களின் இறைவனாக வைத்து வணங்கினார்கள். சோழ வளநாட்டில் இந்திரவிழா இருபத்தெட்டு நாள் கோலாகலமாக நடைபெற்றது. இப்பொழுது ஒருநாள் பண்டிகையாக நடைபெறுகின்றது.

**பொங்கல்**

தைத்திங்கள் முதல் தேதி பொங்கல் கொண்டாடப்படுகிறது. தமிழர் திருநாள் என்றே இவ்விழா கொண்டாடப்படுகிறது.

பொங்கலின் போது கரும்பு வாழ்வில் இனிப்பை உண்டாக்குவதற்கும், இஞ்சிக்கொத்தும் மஞ்சற்கொத்தும் ஆரோக்கியமும், நீண்ட ஆயுளை உண்டாக்குவதற்கும் எனப் பயன்படுத்தப்படுகிறது.

இப்பொங்கல் விழா நான்கு நாட்கள் நடைபெறும் முதல்நாள் போகிப்பண்டிகை அல்லது இந்திரன் பொங்கல் என்றும், மறுநாள் பெரும்பொங்கல் அல்லது சூரியன் விழாவென்றும், மூன்றாவது நாள் மாட்டுப்பொங்கல் அல்லது பட்டிப்பொங்கல் என்றும், நான்காம் நாள் கன்னிப்பொங்கல் அல்லது பூம்பொங்கல் என்றும் சில இடங்களில் காணும் பொங்கல் என்றும் கொண்டாடப்படுகின்றன.

இவ்விழாக்கள் அன்றி இளம் மாணவர்களைப் போர் முறையில் பயிற்றும் வில்விழாவும், முருகனை வணங்கிக் கொண்டாடும் வெறியாட்டு விழாவும், கொண்டாடப்பட்டன. மேலும் அரசர்க்குப் பிறந்த நாள் விழாவும் முடிசூட்டு விழவும், போர் முனையில் வீர மரணம் அடைந்தவர்களுக்குக் கல் நிறுத்தி அதனை வழிபடும் நடுகல் விழா போன்ற பல விழாக்களையும் பண்டிகைகளையும் மக்கள் கொண்டாடித் தங்களின் மகிழ்வினை மற்றவர்களுடன் பகிர்ந்து இன்புற்றனர்.

**பொழுதுபோக்கும் விளையாட்டும்**

சங்ககால மக்கள் பயனுள்ள முறையில் தங்களின் பொழுதைப் போக்கினர். சங்க காலத்தில் மன்னர்களும் செல்வரும், அறிவுரை கேட்பது, பாணர்கள் பாடல்

கேட்பது அல்லிக்கூத்து, குரவைக் கூத்து கண்டு மகிழ்வது, போர்ப் பயிற்சி எடுப்பது, வேட்டையாடுவது, யானை ஏற்றம் குதிரை ஏற்றம், புரிவது போன்ற நிகழ்ச்சிகள் மூலம் பயனுள்ள முறையில் பொழுதைப் போக்கினர்.

ஆண்கள் காடைப்போர், கௌதாரிப்போர், ஆட்டுக்கிடாய்ப்போர், முதலியவற்றிலும் ஏறு தழுவுவது, மற்போர்புரிவது, கால் பந்தாடுவது முதலியவற்றிலும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு விளையாடித் தம் பொழுதைப் பயனுள்ளதாக்கினார்கள்.

விளையாட்டு மனிதனின் உடன் பிறப்பு ஆகும். மனிதசமுதாயம் எவ்வளவு தொன்மையானதோ அவ்வளவு தொன்மையானது அச்சமுதாயத்தின் விளையாட்டு ஆகும். மனிதன் இனக்குழுவாக ஒன்று சோந்து வாழத் தலைப்பட்டபோதே விளையாட்டு கால்கொண்டிருக்க வேண்டும்"[9] என்று தமிழர் பண்பாட்டில் விளையாட்டு பெற்ற இடத்தினை அ.பிச்சை கூறியுள்ளார்.

பெண்கள் அம்மானை பந்து, கழங்கு முதலியவற்றையும் பாவைகளை வைத்தும் விளையாடினர்.

**விளையாடு ஆயமொடு ஓரை ஆடாது,**
**இளையோர் இல்லிடத்து இற்செறிந்திருத்தல்**
**அறனும் அன்றே; ஆக்கமும் தேய்ம்[88]**

எனும் நற்றிணைப்பாடல் விளையாட்டின் இன்றியமையாமையை விளக்குகிறது. விளையாடும் தோழியர் கூட்டத்தோடு ஓரை என்னும் ஆட்டம் விளையாடாமல் இளம்பெண்கள் இல்லினுள் இற்செறிக்கப்பட்டு இருத்தல் அறமும் இல்லை, ஆக்கமும் தேயும் என்பதை இப்பாடல் விளக்குகிறது.

கோலாட்டம், கும்மி, குரவை போன்ற ஆடல்களிலும் யாழ் வாசித்தல், பாட்டுப்பாடுதல் போன்றவற்றிலும் ஈடுபாடு கொண்டிருந்தனர். மேலும் தோழிகளுடன் பாறைமேல் அமர்ந்து கொண்டு மலர்களைப் பறித்துக்கலந்து தொடுத்து சூடிக் கொள்வதில் பெண்கள் மிகவும் நாட்டம் கொண்டிருந்தனர்.

துணைத்த கோதைப் பணைப் பெருந் தோளினர்
கடல் ஆடு மகளிர் கானல் இழைத்த
சிறு மனைப் புணர்ந்த நட்பே தோழி![89]

என்ற குறுந்தொகைப்பாடல் பெண்கள் சிற்றில் இழைத்தலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது.

துணங்கை என்னும் விளையாட்டு ஆண்பெண் இருபாலர்க்கும் உரியதாக இருந்தது. இருப்பினும் மகளிர் துணங்கைக் கூத்தாடியதை குறுந்தொகைப் பாடல் வழி அறியலாம்.

வணங்கு இறைப் பணைத் தோள் எல் வளை மகளிர்
துணங்கை நாளும் வந்தன[90]

மகளிர் விழாக்காலங்களில் துணங்கையாடுதலும் ஆடவர் அவர்களுக்கு முதற்கை கொடுத்தலும் சங்க காலத்தில் இருந்து வந்தன. இன்றும் ஊர்களில் விழாக்களின் போது பெண்களின் கும்மி ஆட்டத்தினை முதலில் ஆண்கள் தொடங்கிப் பின் பெண்கள் ஆடுவது இங்கு நோக்கத்தக்கதாகும்.

சிறுவர்கள், சிறுதேரோட்டியும், சிறுபறை அறைந்தும், ஊசலாடியும் அம்பு எய்தும், மணல் வீடு கட்டியும், பொம்மை வைத்து விளையாடியும், மடுவில் குதித்து மூழ்கி மண் எடுத்தும், நெல்லிக்காயை வைத்து வட்டாடியும் மகிழ்ந்தனர்.

ஊசலாடுதல் வளர்ந்தவர்களின் பொழுதுபோக்காகவும், தாயம் ஆடுதல் முதியோர்களின் பொழுதுபோக்காகவும் இருந்தன.

**கலைகள்**

"இவ்வுலகில் வழங்கும் கலைகளைக் கவின்கலையென்றும் பயன்கலை என்றும் பகுத்து தருவதுண்டு, கண்ணையும் செவியையும் கவர்ந்து அவற்றின் வாயிலாக மனதிற்கு இன்பம் ஊட்டும் கலைகள் கவின்கலைகளாகும். மக்கள்

**வாழ்க்கைக்குப் பயன்படும் பலதிறப்பட்ட பொருள்களை ஆக்கிக் கொள்வதற்குச் சாதனமாகிய கலைகள் பயன்கலைகள் எனப்படும்.**"[91]

சங்ககால மக்கள் கலை ஆர்வமும், வேலைப்பாடு நிறைந்த பொருட்களை உருவாக்கும் திறமையும் மிக்கவர்களாக விளங்கினார்கள். சிற்பம், ஓவியம், கூத்து, நடனம், நாடகம் இசை, கட்டடத் தொழில்கள் முதலிய நுண்கலைகள் சங்க கால மக்களின் வாழ்வைச் சிறப்பித்தன.

கலைகள் பொழுது போக்கிற்காக மட்டுமன்றிப் பண்பாட்டை வெளிப்படுத்துவதாகவும் அமைந்திருந்தன. சங்க கால மக்கள் ஓவியம் சிற்பம் கூத்து, நாடகம் இசை போன்றவற்றைக் கற்று பயன்பெற்று மகிழ்ந்தனர்.

**ஓவியம்**

சங்ககால நூல்களில் ஓவியக் கலையைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. கோயில் சுவர்களிலும் செல்வரின் மாளிகைச் சுவர்களிலும் அழகிய ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. இல்லச் சுவர்கள் வெண்சுதை பூசப்பட்டு ஓவியங்கள் வரைய ஏற்றனவாக இருந்தன. சன்னல்கள் மீது அரைவட்ட வடிவமான கட்டட அமைப்பானது வரையப்பட்ட ஓவியங்களை எடுப்பாகக் காட்டின. ஓவியம் தீட்டுவதற்கான வண்ணங்கள் அன்றைய காலகட்டத்தில் எளிதில் உலராததால் ஒவ்வொரு நிறமும் மிக்க கவனத்துடனும் நீண்ட நாட்கள் வேலைகளுடனும் வரையப்பட்டு நாள் கணக்கில் உலரவைக்கப்பட்டன. அதன் பின்பே அடுத்த நிறம் பூசப்பட்டன.

செல்வத்தைச் சேமித்து வைக்கும் இரும்புப் பெட்டிகளில் இலக்குமியின் உருவத்தை வரைந்தனர். அரண்மனைச் சுவர்களிலும் கோயில் சுவர்களிலும் மாளிகைச் சுவர்களிலும் அழகிய ஓவியங்கள் வரையப்பட்டன.

ஓவியம் தீட்ட நினைப்போர் முதலில் தாம் கற்பனை செய்த உருவத்தைக்

கோடுகளால் வரைவர். இதனைப் புனையாஓவியம் என்றழைப்பர். பின்னர் வரைவதற்குப் பயன்படுத்தும் துரிகையால் வண்ணக்குழம்பினை அப்புனையா ஓவியத்தின் மீது பூசி முழு ஓவியமாக ஆக்குவார்கள்.

நெடுநல்வாடையில், அரண்மனைக் கட்டிலின் ஓவியம் விளக்கப்பட்டுள்ளது. மேலும்,

மணி கண்டன்ன மாத்திரள் திண் காழ்
செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடுஞ் சுவர்
உருவப் பல் பூ ஒரு கொடி வளைஇ
கருவொடு பெயரிய காண்பு இன் நல் இல்[92]

என இல்லங்களில் ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்ததையும் நெடுநல்வாடை விளக்குகிறது.

### சிற்பம்

ஓவியக்கலை போன்று சிற்பக்கலையும் சிறந்து விளங்கின. சங்க கால மக்கள் சிற்பம் வடிப்பதில் தனி ஆர்வம் காட்டினார்கள். சிற்பங்கள், மண்ணினாலும், மரத்தினாலும், கல்லினாலும், வெண்கலம் போன்ற உலோகத்தினாலும் மிகவும் அழகாக உருவாக்கப்பட்டன. சிற்பங்கள் படிய வைக்கப்படுவதால் 'படிமை' என்று அழைக்கப்பட்டன.

கோயில்களில் கருவறையில் இருக்கும் தெய்வ உருவங்கள் கல்லினால் செதுக்கப்பட்டன. பின்பே செம்பு போன்ற பிற உலோகங்களைச் சேர்த்து உருக்கிச் சிற்பம் செய்யும் முறை உருவானது. உலோகங்களால் வார்க்கபட்ட உருவங்கள் திருவிழாக்காலங்களில் வெளியே ஊர்வலமாகக் கொண்டு செல்லப்பட்டன.

சிற்பங்களில் தெய்வ உருவங்கள் மட்டுமன்றி விலங்குகள், பறவைகள், மரச்செடிகளின் வடிவங்களும் செதுக்கப்பட்டன. அக்காலத்தில் போரில் வீரமரணம் எய்திய வீரனுக்கும் அவனது உருவத்தைச் செதுக்கினார்கள்.

பல்லவர் காலக் கற்கோவில்களும். குகைக் கோவில்களும் சித்தன்னவாசல்

போன்ற கோவில்களிலும் விலங்கு, பறவை, மனிதர் போன்ற உருவங்களில் செதுக்கப்பட்ட சிற்பங்களும் தமிழரின் சிற்பத்திறனை எடுத்துக் காட்டுகின்றன.

**கூத்து**

சங்ககால மக்கள் கூத்து பார்ப்பதில் மிகுந்த நாட்டம் கொண்டிருந்தனர். விழாக் காலங்களில் ஆண்கள் பெண்கள் அனைவரும் சேர்ந்து கூத்து பார்க்கச் செல்வர். அல்லிக்கூத்து, குரவை கூத்து முதலிய கூத்துகளைப் பார்த்துத் தம் பொழுதினைக் கழிப்பர்.

ஒரு கதையினை எடுத்துக் கொண்டு அந்தக் கதையின் கருத்தினை உடல் அசைவு, பார்வை, அபிநயம் போன்றவற்றால் ஆடியும் பாடியும் கதையினைப் புரிய வைப்பதே கூத்து எனப்பட்டது. கூத்துக் கலையே பிற்காலத்தில் நாடகம் எனவும் நாட்டியம், சதிராட்டம் எனவும் வளர்ச்சியடைந்தது எனலாம்.

தெய்வங்களையும் தெய்வப் புராணக் கதைகளையும் தம் உடல் அசைவினாலும், மெய்ப்பாட்டினாலும் வெளிப்படுத்தி ஆடி நடிப்பதையே கூத்து என்றனர். அத்தகைய கூத்தினை மக்கள் பெரிதும் விரும்பி நடித்தனர்.

சிவனுக்குக் கொடுகொட்டி பாண்டுரங்கம் ஆட்டத்தையும், திருமகளுக்கென பாவை ஆட்டத்தையும், திருமாலுக்கு என அல்லிஆட்டத்தையும் முருகனுக்கு எனத் துடிக்கூத்தையும் குடக்கூத்தினையும் இணைத்து ஆடி நடித்தனர்.

கூத்து, குரவை என்பன சங்க இலக்கியங்களில் வந்துள்ளன. ஐந்து நிலத்திற்கும் தனித்தனியே குரவைகள் ஆடப்பட்டன. அவை அந்நிலப் பெயராலேயே அழைக்கப்பட்டன.

**இசை**

சங்ககாலத்தில் இசையை வளர்த்த பெருமை பாணர்க்கே உரியதாகும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலத்திற்கும் தனித்தனியே பண்கள் இருந்தன. குறிஞ்சிப் பண், முல்லைப் பண், மருதப்பண், நெய்தல்பண், பாலைப்பண் என அவை வழங்கப்பட்டன.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பவற்றின் பண்கள் முறையே சங்கராபரணம், சாதாரி, கல்யாணி, இந்தோளம், சாரங்கம் எனவும் சொல்லப்படும். அக்காலத்தில் துளைக்கருவி வாசிப்போர், தோற்கருவி வாசிப்போர், நரம்புக் கருவி வாசிப்போர், கண்டத்தாற் பாடுவோர் என நால்வகைப் பிரிவினர்கள் இசையை வளர்த்தனர்.

பாணர்கள் கையில் எடுத்துச்சென்று அடித்துப்பாடும் சிறிய மேளங்கள் தாரை, உடுக்கை எனப்பட்டன. வெவ்வேறு ஓசைகளை எழுப்பும் பறைகள் வெவ்வேறு செயல்கள் புரியும் காலங்களில் கொட்டப்பட்டன.

நரம்புக் கருவிகளில் சிறந்ததாக யாழ் போற்றப்பட்டது. யாழும், வீணையும் இருவேறு இசைக் கருவிகளாகும். குழல்களும் அக்கால இசைக்கருவிகளில் ஒன்றாய் இருந்தன. அவை மூங்கில், தண்டு முதலியவற்றால் செய்யப்பட்டன.

பறை, முரசு, மத்தளம், எல்லரி, ஆகுளி, கிணை முதலியன மேள வகைகளுள் சிலவாகும். இசையின் காலத்தை அளப்பதற்குத் தாளம் வழக்கில் இருந்தது தாளத்தைப் பற்றிய நூல்களான தாளஒத்து, தாள சமுத்திரம் முதலிய நூல்களும், இசையைப் பற்றிய நூல்களாக இசை நுணுக்கம், முது நாரை, முது குருகு, இந்திர காளியம், பஞ்சமரபு, பரத சேனாபதியம் முதலிய நூல்களும் இருந்தன.

புலவர்கள் நூல்களைப் பாடல் வடிவில் செய்து இசையோடு பாடி வந்தனர். சங்க காலத்தில் பாட்டு என்பது மக்களிடையே பரவலாய்க் காணப்பட்டது.

**வாழ்வியல் மதிப்பும் மானமும்**

சங்க கால மக்களின் வாழ்க்கையானது, மதிப்பும் மானமும் நிறைந்ததாக விளங்கியது. சங்ககால மக்களின் குறிக்கோள், உயர்ந்த லட்சியம், கடமை, கொள்கை, ஒழுக்கம் முதலியன அவர்களின் வாழ்வை மதிப்பு மிக்கதாகக் காட்டுகின்றன. ஈகை, கொடை, வீரம் போன்றவை அவர்களின் மான உணர்ச்சிக்குத் தூண்டுதலாக இருந்ததையும் அறிய முடிகின்றது.

**குறிக்கோள்களும், கொள்கையும்**

சங்க கால மக்கள் தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான பொருளை ஈட்டுவதில் அறத்தினைக் கடைபிடித்தனர், பொருள் தேடுவதும் இன்பம் துய்ப்பதும் அறத்தின் வழியே உண்டானதாக இருத்தல் வேண்டும் என்ற குறிக்கோளுடன் இருந்தார்கள்.

இதனை,

> **சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்**
> **அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல**[93]

என்று புறநானூற்றுப் பாடலும்.

அறத்தின் வழியே பொருளீட்ட விரும்பிய சங்க கால மக்கள் பொருளீட்டலில் தன் முயற்சியால் உழைத்துப் பொருள் தேடுதலையே பெரிதும் விரும்பினர். மற்றவர்கள் இகழ்வதைப் பொறுத்துக் கொள்ளாமல் நடுங்கச் செய்யும் காட்டினைக் கடந்து பொருளீட்டச் சென்றனர். இதனை,

> **உள்ளுநர்ப் பனிக்கும் ஊக்கு அருங் கடத்திடை**
> **எள்ளல் நோனாப் பொருள் தரல் விருப்போடு**
> **நாணுத் தளை ஆக வைகி, மாண் வினைக்கு**
> **உடம்பு ஆண்டு ஒழிந்தமை**[94]

என்னும் அகநானூற்றுப் பாடலும் தெளிவுபடுத்துகின்றன.

அறத்தோடு தம் முயற்சியில் சேகரித்த பொருளைக் கொண்டு ஈதலைப்

போற்றுதல், புகழ் பெற வாழ்தல் என்பனவற்றைக் குறிக்கோளாய்க் கொண்டு வந்தனர்.

வேந்தர் முதல் தொழிலாளர் ஈறாக அனைவரும், முயற்சியால் ஈட்டிய பொருளை வறுமையால் வாடுபவர்களுக்கு ஈதலையே பேரின்பமாகக் கருதினார்கள். சங்ககால மக்கள் தங்களை நாடி வருபவர்களின் வயிற்றுப்பசியைத் தணித்தலே வாழ்க்கையின் முதற் குறிக்கோளாய்க் கொண்டிருந்தனர்.

சங்ககால மக்கள் தாம் ஈட்டிய பொருளை, ஈதலை அறமாய்க் கொண்டு செலவிட்டாலும் அதைக் கொள் எனக் கொடுப்பது உயர்வு என்றும், ஈயேன் என்பது இழிவு என்றும் நன்கு அறிந்திருந்தனர்.

சங்ககால மக்களிடம் ஈகை, விருந்தோம்பல், நன்முறையில் பொருளீட்டல் முதலிய பல நல்ல குறிக்கோள்கள் நிறைந்திருந்தன. மக்கள் செய்யும் தொழில் காரணமாக அவர்களுள் வேறுபாடு இருந்ததே அன்றி மக்களுள் சாதியின் அடிப்படையில் பிரித்து வேறுபாடு கற்பிக்கும் இழிநிலை இல்லை என்பதும் புலனாகிறது.

**கடமையுணர்வு**

சங்ககால மக்கள் கடமையுணர்வு மிக்கவர்களாக இருந்தனர். புறநானூற்றுப் பாடல்

> **ஈன்று புறந்தருதல் என்தலைக்கடனே**
> **சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**
> **வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
> **நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே**
> **ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
> **களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே**[95]

இது போன்ற கடமையுணர்வுகளையும் மற்றும் பல உயர்ந்த இலட்சியங்களையும்

கொண்டு சங்க கால மக்கள் தங்கள் வாழ்வினை மதிப்பு மிகுந்ததாக விளங்கிடச் செய்தார்கள்.

## உயர்ந்த இலட்சியங்கள்

சங்க கால மக்களிடம் பல உயர்ந்த இலட்சியங்கள் காணப்பட்டன. சங்ககால மக்கள் தேவர்கள் உண்ணும் அமிழ்தமே கிடைத்தாலும் அதைப் பலருக்கும் பகிர்ந்து உண்பாரே அல்லாமல் தனித்திருந்து உண்ணார். பிறர் வருத்தப்படும் துன்பங்களுக்குத் தாமும் வருத்தப்படுவர். அது மட்டும்மல்லாது, அத்துயரினைப் போக்கும் வழிமுறைகளை மேற்கொள்வர். புகழ் உண்டாகும் என்றால் அதற்காக உடல் பொருள் அனைத்தையும் தருவதோடு தம் உயிரையும் தருவர். அதே சமயத்தில் பழிச் செயல் ஒன்று செய்வதன் மூலம் இந்த உலகமே தமக்குக் கிடைக்கும் என்றாலும் அதைச் செய்யார். தமக்கென்று இல்லாமல் பிறர் நலம் பேணும் சான்றோராகத் திகழ்வர் என்பதும் யாதும் ஊரே யாவரும் கேளிர் என்றும் நன்மை தீமை அவரவரின் செய்கையினாலலே வருகின்றன என்பதும், வாழ்வானது இனிமையாக இருக்கும்பொழுது மிகவும் மகிழ்ச்சியடைவதோ துன்பத்திற்குள்ளானபோது வாழ்க்கையை வெறுப்பதோ கூடாது என்பதும் புறநானூற்றுப்பாடல் மூலம் நாம் அறிந்து கொள்ள வேண்டியவை ஆகும். இத்தகைய உயர்ந்த இலட்சியங்களே அவர்களின் வாழ்வை மதிப்பு மிக்கதாகக் காட்டுகின்றன.

## வீரம்

சங்க கால மக்கள் வாழ்க்கையின் மதிப்பு அவர்களின் குறிக்கோள், கடமை, உயர்ந்த இலட்சியம் போன்றவற்றால் புலனாவது போல அவர்களின் மான உணர்ச்சி, வீரம், ஒழுக்கம், கொடை, ஈகை முதலிய நற்பண்புகளால் வெளிப்படுகின்றன. சங்ககால மக்களின் வீர உணர்வைப் பல பாடல்கள் எடுத்துக்காட்டியுள்ளன.

சிறுவன் உட்படத் தன் குடும்பத்தில் அனைவரையும் போருக்கு அனுப்புகிறாள் ஒருத்தி. அவளின் மறப்பண்பினை, புறநானூற்றுப்பாடல் அழகுறக் காட்டியுள்ளது.

முதல்நாள் போரில் தன் தந்தையையும் மறுநாள் போரில் கணவனையும் இழந்த அத்தலைவி தன் ஒரே மகனைப் போர்க்களம் நோக்கிச் செல்வாயாக என அனுப்புகிறாள். மறக்குடியில் பிறந்த இப்பெண்ணின் மறப்பண்பினை,

**வேல் வைக்கொடுதத்து வெளிது விரித்து உடீஇப்**
**பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி**
**ஒரு மகன் அல்லது இல்லோள்**
**செருமுக நோக்கிச் செல்க என விடுமே[96]**

என்னும் பாடல் வழிக் காணலாம், தன் மகன் போர்க்களத்துத் தோன்றும் இயல்பை உடையவன் என்பதை, புலி தங்கியிருந்து நீங்கிய கற்குகையைப் போன்றது தன் வயிறு என்றும் அவன் போர்க்களத்தில் தோன்றுவான் என்றும் கூறுகிறாள் ஒரு தாய், இங்குத் தன் மகனை புலிக்குட்டியாய்க் கூறி அத்தகைய வீரமகனைப் பெற்றவளாக மறக்குடியின் மாண்பினை சிறப்பிக்கிறாள் அத்தாய்.

**புலிசேர்ந்து போகிய கல்அளைபோல**
**ஈன்ற வயிறோ இதுவே**
**தோன்றுவன் மாதோ போர்க்களத்தானே[97]**

தன் மகன் போர்க்களத்தில் இறந்துப்பட்டான் எனும் செய்தியைக் கேள்வியுற்ற தாயின் நிலையினைப் புறநானூற்றின் மற்ற இரு பாடல்கள் (277, 278) விளக்குகின்றன.

தன் மகன் பகைவரின் படையைக் கண்டு அஞ்சிப் புறம் கொடுத்தான் என்று, அறியாதவர் சிலர் வந்து சொல்ல அதனைக் கேட்ட வீரத்தாய் தன் மகன் புறம் கொடுத்து இறந்தது உண்மையானால் அவன் வாய் வைத்து உண்ட என் மார்பை அறுத்தெறிவேன் எனக் கூறிப் போர்க்களம் சென்று பார்க்கிறாள். தன் மகன் விழுப்புண்பட்டுச் சிதைந்து கிடப்பதைப் பார்த்து அவனை ஈன்றநாளில் தான் பெற்ற மகிழ்ச்சியைவிடப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறாள்.

மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என்
முலை அறுத் திடுவென் யான் எனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுஉவந் தனளே[98]

ஆண்மகனைப் பெற்று வளர்ப்பது தாயின் கடமையாகவும், போர்க்கல்வி அளித்து அவனை வீரனாக்குவது தந்தையின் கடமையாகவும், போர்க்களத்தில் களிறு எறிந்து பெயர்வது வீரனின் கடமையாகவும், காணப்பட்டதால் சங்க காலத்தில் போர் வீரம் முதலியவை வாழ்க்கையை மையப்படுத்தப்பட்டிருந்த சூழ்நிலை புலனாகும்.

சங்க காலத்தில் போர்புரியும் முறையும் அறத்தோடு பின்பற்றப்பட்டது. இதனைப் புறநானூற்றுப்பாடல்.

ஆவும் ஆனியர் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம் அம்பு கடிவிடுதும் நும் அரண சேர்மின்[99]

என போரினை அறிவித்து அறத்தோடு போர்புரிந்ததைக் குறிப்பிடுகின்றது.

விழுப்புண்படாத நாட்களை வீரர்கள் பயனில் நாட்களாகவே கருதினர். மறக்குடியில் பிறந்த பெண் மக்கள் அனைவரும் தங்கள் பிள்ளைகள் மிக்க வீரர்களாக இருத்தலையே பெருமையாகக் கருதினர்.

வீரர்களிடத்தில், அரசர்களுக்கும் மக்களுக்கும் நன்மதிப்பு இருந்தது, பாசறையில் இருந்த அரசன் ஒருவன் நள்ளிரவில் முதல்நாஜ் போரில் புண்பட்ட வீரர்களைப் பார்த்து ஆறுதல் கூற வாடைக்காற்றையும் மழையையும் பொருட்படுத்தாது சென்றதை நெடுநல்வாடை,

**களிறுகளம் படுத்த பெருஞ்செய் யாடவர்**
**ஒளிறு வாள் விழுப் புண் காணிய புறம் போந்து**
**நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்**
**சிலரோடு திரிதரும் வேந்தன்**[100]

எனும் வரிகள் விளக்குகின்றன.

போரின்பொழுது இறந்த வீரர்களின் நினைவுக்காக வீரக்கல் நாட்டி அதில் அவ்வீரர்களின் பெயர்களையும் செய்த செயல்களையும் எழுதி வழிபட்டு வந்தனர்.

சங்ககால மக்கள் 'ஈதலறம்' என்பதையும் ஈதலே வாழ்வின் பயன் என்பதையும் அறிந்திருந்தனர். மற்றவர்க்குத் தம்மால் இயன்ற உதவியைச் செய்யும்போது பொறாமை, ஆசை, கோபம், இன்னாச்சொல் முதலியன இன்றி இன்முகத்தோடு உதவி செய்தனர்.

ஒரு மனிதனுக்கு உண்டாகும் துன்பத்துள் இரத்தலே பெரியது ஆகும். அத்துன்பத்தைவிடக் கொடியதாகக் கருதப்படுவது ஈயாமை ஆகும்.

**சாதலின் இன்னாதது இல்லை இனிதுஅதூஉம்**
**ஈதல் இயையாக் கடை**[101]

ஈகைக்கு அடுத்தபடியாகச் சங்ககால மக்கள் பெரிதும் கடைபிடித்தது ஒழுக்கமாகும். ஒழுக்கத்தைத் தம் உயிரினும் சிறந்ததாகக் கருதினர். பொய்யாமை, நன்றியறிதல் போன்ற பல இயல்புகளைச் சங்க கால மக்கள் ஒழுக்கமாகக் கருதிப் பின்பற்றினர். பாவங்களுள் உய்தி இல்லாதது நன்றி மறத்தல் என்பதை அவர்கள் உறுதியாக நம்பினர்.

**எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வுஇல்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு**[102]

என்ற திருக்குறளும் நன்றி மறத்தலின் விளைவைச் சுட்டியுள்ளது.

சங்ககால மக்கள் உள்ளதைக் கொண்டு மகிழ்ச்சியடைதலாகிய சிறந்த குணத்தை ஒழுக்கமாகக் கருதினர். அது அவர்களின் இன்ப வாழ்விற்கு அடிப்படையாக அமைந்தது. சங்ககால மக்கள் நற்பண்புகள் பல பெற்று சான்றோர்களாகத் திகழ்ந்துள்ளனர். அவர்களிடம் தொழில் அடிப்படையிலேயே பிரிவு முறைகள் காணப்பட்டுள்ளன. சாதி அடிப்படையில் பிரிவு முறைகள் காணப்படவில்லை. சங்ககால மக்கள் அக வாழ்க்கையிலும் புறவாழ்க்கையிலும் சிறந்த நெறிமுறைகளைக் கொண்டு செம்மாந்து வாழ்ந்துள்ளனர்.

## அடிக்குறிப்புகள்

1. கலி. 133, 8
2. புறம். பா. 129, 5
3. திருக்குறள். 996
4. திருக்குறள். 997
5. திருக்குறள். 1000
6. கே. ஏ. கிருஷ்ணசாமி, 'பழந்தமிழர் தம் தொழில் வாணிக வளம்' ப,12
7. நற். பா. 355
8. திருக்குறள். 580
9. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், 'தமிழும் பிறபண்பாடும்', ப.12
10. இரா. நெடுஞ்செழியன், 'அருந்தமிழர் போற்றிய அழகுக்கலைகள்', ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு – கருத்தரங்கு ஆய்வுக் கட்டுரைகள், ப.1.
11. கா. அப்பாதுரை, 'தென்னாடு', ப.35.
12. பொற்கோ (பொன். கோதண்டராமன்), 'தமிழக வரலாற்றில் திருக்குறள்', ப. 2
13. கலி. பா. 133, 6–14
14. கா.சு. பிள்ளை, 'தமிழர் சமயம்', ப.46.
15. புறம். பா. 33, 2–6
16. ந.சி. கந்தையா, 'தமிழர் பண்பாடு', ப.81.
17. புறம். பா. 14, 12–15
18. அகம். பா. 37, 12–14
19. புறம். பா. 384, 11–17
20. புறம். பா. 235, 1–3
21. புறம் பா. 392, 21–24
22. சிறுபாண். 237
23. புறம். பா. 56, 18–21
24. ம.கா. 780–782

25. சிறுபாண். 243–244

26. பொருநர். 477

27. பொருநர். 156–157

28. புறம். பா. 189, 5

29. புறம். பா. 274, 7–8

30. சிலம்பு. காதை 14, 205–207

31. குறுந். 330, 3–5

32. நெடுநல். 106–114

33. ம. கா. 301–302

34. ப. பாலை. 1–5

35. அகம். பா. 93, 12–14

36. நற். பா. 200, 3–4

37. கலி. பா. 149, 3–9

38. அகம். பா. 389, 11–12

39. புறம். பா. 189

40. புறம். பா. 358, 6–7

41. கலி. 14, 3–4

42. கலி. 21, 10–11

43. அபிதான சிந்தாமணி, ப. 63

44. குறும். பா. 61, 4–5

45. பொருநர். 248–249

46. புறம். பா. 87, 2–3

47. நெடுநல். 116–123

48. நெடுநல். 206–268

49. புறம். பா. 170, 15–17

50. நற். பா. 273, 1–3

51. கா. சு. பிள்ளை, 'தமிழர் சமயம்', ப.142.

52. புறம். பா. 127, 6–7

53. ஐங்குறு. பா. 203, 4–8

54. நற். பா. 110, 6–10

55. குறுந். பா. 49, 4–6

56. பெரும்பாண். 168–169

57. குறிஞ்சிப்பாட்டு, 206–208

58. புறம். பா. 26, 6–9

59. ப. பத்து 74, 1–2

60. ப. பத்து 70, 17–19

61. ம. கா. 753–760

62. புறம். பா. 224, 7–9

63. புறப்பொருள் வெண்பாமாலை, வாகை படலம் 30

64. குறுந். பா. 128

65. குறுந். பா. 229

66. புறம். பா. 192, 9–11

67. புறம். பா. 236, 9–10

68. தொல். புறத்திணை இயல் 2

69. அகம். பா. 35, 8–9

70. அகம். பா. 67, 10–11

71. புறம். பா. 231, 1–2

72. புறம். பா. 256.

73. புறம். பா. 280, 6–7

74. குறும். பா. 218, 1–3

75. மலைபடுகடாம். வரி 64–66

76. குறும். பா. 140, 1–3

77. ஐங்குறு. பா. 218, 5–10

78. நற். பா. 40, 4–1

79. நற். பா. 98, 1–7

80. குறும். பா. 210, 7

81. கே. கே. பிள்ளை, 'தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்' ப. 216

82. அகம். பா. 382, 3–7

83. பரி. பாடல். 11, 96–100

84. குறும். பா. 178, 5–7

85. குறும். பா. 307, 6–8

86. க. காந்தி, 'தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்', ப. 50

87. கார்நாற்பது. பா. 26

88. நற். பா. 68, 1–3

89. குறும். பா. 326, 7–9

90. குறும். பா. 364, 6–8

91. இரா. பி. சேதுப்பிள்ளை, 'தமிழ் இன்பம்', ப. 246

92. நெடுநல். 111–114

93. புறம். பா. 31, 1–2

94. அகம். பா. 29, 19–22

95. புறம். பா. 312,

96. புறம். பா. 279, 7–10

97. புறம். பா. 86, 4–6

98. புறம். பா. 278, 4–9

99. புறம். பா. 9, 1–5

100. நெடுநல். பா. 269

101. திருக்குறள். 230

102. திருக்குறள். 110

# முடிவுரை

உலக அளவில் நாகரிகத்திலும், பண்பாட்டிலும் வீரத்திலும், மானத்திலும் உயர் கொள்கைகளைப் பெற்ற இனம் தமிழினம். இலக்கண இலக்கியச் சிறப்புகளைப் பெற்று நாகரிகத் தொட்டிலாக விளங்குவது பண்டைத் தமிழகம்.

ஆழ்கடலில் சென்று முத்துக் குவியல் தேடுதல் போன்று நம் பண்டைய சங்க இலக்கியங்கள் வழியே பல அரிய பண்பாட்டுச் சிறப்புகளையும், வாழ்க்கை முறைமைகளையும், நாகரிகச் சிறப்பு களையும் விரிவாக ஆய்ந்து தெளியும் இலக்கண இலக்கியங்களும், முச்சங்க வரலாற்றையும் முழுமை படுத்தும் சங்ககால இலக்கியங்களும், சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய காப்பியங்களும் இம்மண்ணுலகில் நிலைத்து நின்று பழந்தமிழகத்தின் பெருமையை எடுத்துக் காட்டுகின்றன.

காலங்களையெல்லாம் கடந்து இறவாப் புகழுடையதாய் என்றும் இனிமை பயப்பன நம் இலக்கியங்கள். நாம் இலக்கியங்கள் வழியில் தான் பண்டைக்கால நாகரிகப் பண்பாட்டு உறவுகளை அறியமுடியும்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் வணிகத்திலும், ஏற்றுமதியிலும் உயர்ந்து விளங்கியதற்கு மூவேந்தர்களின் துறைமுகங்களே அடிப்படைச் சான்றுகளாகும். பட்டணங்கள் சிறப்புற்றமைக்கு வெளிநாட்டினரின் குறிப்புகளும், இலங்கியங்களும் புறச் சான்றுகளாகும்.

கடல் வழி வாணிகத்தில் சிறந்திருந்த நாம் பொருளாதார முன்னேற்றம் கண்டு பயிர்த்தொழிலிலும், விளைபொருள் உற்பத்தியிலும், வேளாண்மைப் பெருக்கத்திலும் தன்னிறைவு பெற்றிருந்தோம்.

நாட்டகப்பட்டினங்களும், துறைமுகப்பட்டினங்களும் சிறப்புற்று விளங்கியதால் ஊரக வாழ்க்கையும் நகரிய வாழ்க்கையும் நாகரிகத்திலும் பண்பாட்டிலும் உயர்நிலை பெற்றிருந்தது.

இயல் **ஒன்றில்** முன்னுரையில் ஆய்வின் தலைப்புத் தேர்வு முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள், ஆய்வின் நோக்கம், ஆய்வுத்திட்டம் ஆகியன விரிவாக ஆயப்பெற்றுள்ளன.

**இயல் இரண்டில்** சங்கத் தமிழக நகரங்களில், தலைநகரங்களாக விளங்கிய நகரங்கள் நாட்டகப்பட்டணங்கள் என்று ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. ஒரு நாட்டின் வளர்ச்சிக்குக் காரணமாக உள்ள தலைநகரங்களுக்கு உரிய பண்புகளைப் பெற்று அந்நாட்டின் நடுவில் அமைந்துள்ள பட்டணம் நாட்டகப்பட்டணம் எனக் கருதப்பட்டுள்ளது. சேரர்களின் நாட்டகப் பட்டணமாக வஞ்சியும், சோழர்களின் நாட்டகப்பட்டணமாக உறந்தையும், பாண்டியர்களின் நாட்டகப்பட்டணமாக மதுரையும் சங்க காலத்தில் சிறந்து விளங்கியுள்ளன. சங்கத் தமிழக நகரங்களில் பட்டணம், பட்டினம் எனும் இருவகையின, அவை நாட்டகப்பட்டணமாகவும் துறைமுகப் பட்டினமாகவும் ஆராயப்பட்டுள்ளன.

**இயல் மூன்றில்** சங்க கால துறைமுகப்பட்டினங்களுள், சேரர்களின் துறைமுகப்பட்டினங்களாக, முசிறி, தொண்டி, மாந்தை எனமூன்றும், சோழர்களின் துறைமுகப்பட்டினமான காவிரிபூம்பட்டினமும், பாண்டியர்களின் துறைமுகப்பட்டினங்களில் கொற்கையும் காயலும் சிறந்து விளங்கியுள்ளன.

துறைமுகப்பட்டினங்களால் நாட்டின் பொருளாதாரம் உன்னத நிலையினை அடைந்துள்ளது. கடல் வழிப் போக்குவரத்து இருக்கும் பொழுது நமக்குச் செல்வாக்கு அதிகமாகவும், கடல்வழிப் போக்குவரத்து குறையும் பொழுது வடக்கே செல்வாக்கு அதிகமாகவும் காணப்பட்டது.

**இயல் நான்கில்** சங்ககால வாழ்க்கை முறையை, ஊரக வாழ்க்கை முறை நகரிய வாழ்க்கை முறை எனப் பிரித்துப் பார்க்கும் பொழுது நகரிய வாழ்க்கை முறையை விட ஊரக வாழ்க்கை முறையே சிறந்து விளங்கியுள்ளமை அறியப்படுகிறது.

குடும்பக் கட்டுக் கோப்பு ஊரக வாழ்க்கை முறையில் கடைபிடிக்கப்பட்டுக் கூட்டுக் குடும்ப வாழ்க்கை பேணப்பட்டுள்ளது. குடும்பத்தில் ஒரே தொழில் தந்தை வழித் தொழிலாகச் செய்யத் தலைப்படுவதும் கூட்டுக் குடும்பத்திற்குக் காரணமாக அமைந்தது. நகரிய வாழ்க்கையில், அரண்மனை, துறைமுகம், வாணிகம் சார்ந்த பலப்பல தொழில்கள் காணப்பட்டதால் கூட்டுக் குடும்ப வாழ்க்கை கடைபிடிக்க இயலாத சூழ்நிலை உருவாகியுள்ளது. பன்மொழி பேசும் பலதரப்பட்டமக்கள் கலந்து வசிக்கும் நகரிய வாழ்க்கை நாகரிகத்தின் உச்சக்கட்டத்திற்கும் பண்பாட்டுச் சிதைவுக்கும் காரணமாக அமைந்துள்ளது. ஊரக வாழ்க்கை முறையில் காணப்படாத பரத்தையர் செல்வாக்கு நகரிய வாழ்க்கையில் அதிகமாகக் காணப்பட்டுள்ளது. ஊரக வாழ்க்கைமுறை, நகரிய வாழ்க்கை முறையை விடப் பல வகையிலும் சிறந்து காணப்பட்டுள்ளதை இவ்வியல் உறுதி செய்துள்ளது.

**இயல் ஐந்தில்** தமிழர் வாழ்க்கையின் பொற்காலமாகக் கருதப்பட்ட சங்க காலத்தில் மக்களின் நாகரிகமும் பண்பாடும் எங்ஙனம் வெளிப்பட்டன என்பதும் சங்ககால மக்களின் அன்றாட வாழ்க்கை முறை, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், பொழுதுபோக்குகள், விளையாட்டுகள் போன்றவையும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

**இயல் ஆறில்** சங்கத் தமிழக நகரங்கள் என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வின் மூலம் கிடைத்தச் செய்திகளின் சுருக்கம் இயல்களின் முடிவில் முடிவுரையாகத் தரப்பட்டுள்ளன.

பின்னிணைப்பில்,

1. உசாத்துணைக் குறிப்பு அகரநிரல்
2. நிழற்படங்கள்
3. அட்டவணைகள்
4. வரைபடங்கள்

ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன.

## எதிர்கால ஆய்விற்கு

இன்றைய காலக்கட்டத்தில் அகழாய்வு வளரும் வாய்ப்பு அதிகமாக உள்ளதால், சங்க இலக்கியங்கள் காட்டும் நகரங்கள் அனைத்தையும் அகழாய்வின் மூலம் விரிவாக ஆராயலாம். அகழாய்வும் கடல்வழி அகழாய்வும் சேரும் பொழுது ஆய்வு செழுமை அடையும். அவ்வகையில் நகரங்கள் பற்றிய ஆய்வினை மேற்கொண்டால் இந்திய வரலாற்றினையே உரிய முறையில் மீட்டுருவாக்கம் செய்ய வேண்டிய தேவை ஏற்படலாம்.

# உசாத்துணைக்குறிப்பு அகரநிரல்


1. அப்பாதுரை, கா., ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், கழகம் 1962.

2. தென்னாடு, பூம்புகார், சென்னை, 2003.

3. அருணாசலம், அ., தமிழர் வீரவிளையாட்டுகள், கழகம், சென்னை, 2002

4. அருணாசலம், கு பண்டைத் தமிழக வேளாண்மை வணிக வாரியங்கள்,

5. ஆளவந்தார், ஆர்., இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

6. இராகவன், அ., நம்நாட்டுக் கப்பற்கலை, தமிழ்ப் புத்தகாலம், 1968.

7. கோநகர் கொற்கை, தமிழ்ப் புத்தகாலயம், 1971.

8. ஜெயக்குமார், பா., தமிழகத் துறைமுகங்கள், சென்னை, 2001.

9. கணபதிப்பிள்ளை, மு., மொழியும் மரபும், அருள்நிலையம், சென்னை, 1967.

10. கந்தையா, ந.சி., தமிழர் பண்பாடு, காமராஜ் பதிப்பகம், சென்னை, 1966.

11. கல்லாடன் வரலாற்றுச் சுடர்கள், குழலி பதிப்பம், பாண்டிச்சேரி, 2003.

12. காந்தி, கி., தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980.

13. கோதண்டராமன், பொன், (பொற்கோ) உலக நாடுகளின் தமிழர்கள், ஐந்தாம் உலகத் தமிழ்மாநாடுவிழா மலர், மதுரை, 1981.

14. சக்திவேல், சு., நாட்டுப்புற இயல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1983.

15. சசிவல்லி, வி.சி., பண்டைத் தமிழர் தொழில்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1989.

16. சமணமுனிவர்கள் நாலடியார், கழகம், மதராஸ், 1957.

17. சாம்பசிவன், ச., மாநகர் மதுரை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1960.

18. சுப்பிரமணியன், கா., சங்க காலச் சமுதாயம், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, 1987.

19. சுப்பிரமணிய பிள்ளை, கா., தமிழர்சமயம், சைவத்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2004.

20. செந்துறைமுத்து., தமிழர் வாழ்வியல், நாதன் பதிப்பகம், சென்னை, 1999.

21. சேதுப்பிள்ளை, ரா.பி., ஊரும்பேரும், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1997.

22. தமிழ் இன்பம், பழனியப்பா பிரதர்ஸ்,

23. தமிழகம்—அலையும் கலையும், பழனியப்பா, பிரதர்ஸ், மதராஸ், 1958.

24. சோமலெ, தமிழநாட்டு மக்களின் மரபும் பண்பாடும் நேசனல் புக் டிரஸ்ட் இந்தியா, பாரி நிலையம், சென்னை, 1974.

25. தமிழ்நாட்டு அரசு, தமிழ் நாட்டு வரலாறு—தொல் பழங்காலம், தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, சென்னை, 1975.

26. தேவநேயன், ஞா., தமிழர் திருமணம், திருவள்ளுவர் தவச்சாலை, திருச்சிராப்பள்ளி, 1997.

27. பகவதி, கு., தமிழக ஊர்ப் பெயர்கள், உலகத் தமிழ்க்கல்வி இயக்கம், சென்னை, 1986.

28. பிச்சை, அ., தமிழர் பண்பாட்டில் விளையாட்டுகள், காலன் பதிப்பகம், சென்னை, 1983.

29. பிள்ளை, கே.கே., தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், தமிழ்நாட்டு பாடநூல் நிறுவன வெளியீடு, 1972.

30. இராசமாணிக்கனார், மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சென்னைப்பல்கலைக் கழகம், சென்னை, 1970.

31. வரதராசனார், மு., தமிழிலக்கிய வரலாறு, புதுடெல்லி, 1972.

32. வானமாமலை, நா., கலைகளின் தோற்றம், 1971.

33. வெங்கட்ராமன், ஆர்., இந்தியக் கோவில் கட்டிடக்கலை வரலாறு, என்னெஸ் பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1983.

34. வேங்கடசாமி, மயிலை. சீனி., அழகுக்கலைகள், பாரிநிலையம், மதராஸ், 1956.

35. சங்க காலத் தமிழக வரலாறு, தமிழ் வளர்ச்சிப் பேரவை, சென்னை, 2003.

36. பழங்காலத் தமிழர் வாணிகம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1974.




**நன்றி : மயிலை சீனி. வேங்கடசாமி, 'சங்காலத் தமிழக வரலாறு'.**




நன்றி : மயிலை சீனி. வேங்கடசாமி, 'சங்காலத் தமிழக வரலாறு'.

# சங்க காலப் பாண்டிய நாடு




நன்றி : மயிலை சீனி. வேங்கடசாமி, 'சங்காலத் தமிழக வரலாறு'.





படகுத்துறை – காவிரிப்பும்பட்டினம்



நன்றி : பா. ஜெயக்குமார், 'தமிழகத் துறைமுகங்கள்'

# எட்டுத் தொகை




1 மதுரை
2 உறையூர்
3 தொண்டி
4 கொற்கை
5 முசிறி
6 வஞ்சி
7 புகார்
8 மாந்தை

## எட்டுத்தொகையில் - பிறஊர்கள்

1. காஞ்சி
2. எருமையூர்
3. பாரம்
4. குறும்பூர்
5. தேனூர்
6. கழார்
7. மருங்கூர்ப் பட்டினம்
8. போவூர்
9. சாய்க்காடு
10. கோயில் வெண்ணி
11. பாடலிபுத்திரம்
12. தகடூர்
13. தில்லைபேலி
14. வியலூர்
15. பூழிநாடு
16. மோகூர்
17. காமூர்
18. குடநாடு
19. கொங்குநாடு
20. நறவு
21. கொடுமணம்
22. பந்தர்
23. மருங்கை
24. குடந்தைவாயில்
25. குன்றூர்
26. ஆர்க்காடு
27. கோட்டூர்
28 துரைநாடு
29 குறுக்கை
30 விளங்கில்
31. செல்லூர்
32. ஒங்காடு
33. பருவூர்
34. கழுமலம்
35. அழும்பில்
36. வாகையூர்
37. வீரை
38. வெண்மணிவாயில்
39. அழுந்தூர்
40. கள்ளூர்
41. அரிமணவாயல்
42. உறந்தூர்
43. சீரலவாய்
44. மாங்காடு
45. வல்லம்
46. புனல்நாடு
47. நெய்தலங்கானல்
48. துறையூர்
49. நல்லூர்
50. மாவிலங்கை
51. ஈர்ந்தை
52. வல்லூர்
53. சிறுதடி
54. இடையாற்று மங்கலம்
55. பெருந்துறை
56. அட்டவாயில்
57. முள்ளூர்
58. இருப்பையூர்
59. பாழி
60. ஆமூர்
61. இரவை
62. ஒகந்தூர்

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (1)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| காஞ்சி | – | 10–4–காஞ்சி | 1–4–காஞ்சி | – | – | – | – | |
| | – | – | மரம்நிரம்பிய ஊர் | – | – | 4–5–காஞ்சி | – | – |
| | – | 127–4–காஞ்சி | – | – | – | – | – | – |
| எருமையூர் | – | – | – | – | – | – | 36–17–எருமையூர் | – |
| பாரம் | 265–5–பாரம் | – | – | – | – | – | – | – |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (2)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| **குறும்பூர்** | – | 328–8–குறும்பூர் | – | – | – | – | 89–16–குறும்பூர் | – |
| **தேனூர்** | – | – | 54–3–தேனூர்<br>57–2–தேனூர் | – | – | – | 36–17–எருமையூர் | – |
| **கழார்** | 281 –3 – கழார் | – | 281 –3 – கழார் | – | – | – | 6 –20– கழார்<br>226–8–கழார் | – |
| **மருங்கூர்ப் பட்டினம்** | 258–8 –மருங்கூர் | – | – | – | – | – | 227–20–மருங்கூர் | – |
| **போவூர்** | 10–7–போவூர் | – | – | – | – | – | 326–11–போவூர் | |
| **சாய்க்காடு** | 73–9–சாய்க்காடு | – | – | – | – | – | – | – |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (3)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| மாந்தை | 35–7–மாந்தை<br>395–9–மாந்தை | 34–6–மாந்தை<br>166–3–மாந்தை | – | 9ம்–பத்து<br>86–28–மாந்தை | –<br>– | –<br>– | 376(15–18)<br>127–6–மாந்தை | – |
| கோயில் வெண்ணி | 390–3–கோயில் வெண்ணி | –<br>– | –<br>– | – | –<br>– | – | 66–6–கோயில் வெண்ணி | –<br>– |
| பாடலிபுத்திரம் | பாடலிபுத்திரம் | 75–4–பாடலி புத்திரம் | – | – | – | – | 265–20–பாடலி புத்திரம் | – |
| இரவை | 91–7–இரவை | | | | | | | |
| தில்லைவேலி | – | – | 131–2–தில்லை வேலி | | | | | |
| தகடூர் | – | – | | 8ம்–பத்து<br>78–9–தகடுர் | – | – | – | – |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (4)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| வியலூர் | – | – | – | 5 ஆம்பத்து<br>பதிகம்–11 | – | – | –<br>97–13–வியலூர் | – |
| பூழிநாடு | – | – | – | 3 ஆம்பத்து<br>21–23பூழிநாடு<br>4 ஆம்பத்து<br>பதிகம்–6பூழிநாடு<br>8ஆம்பத்து<br>73–11–பூழிநாடு<br>9ஆம்பத்து<br>84–7–பூழிநாடு<br>90–27–பூழிநாடு | – | – | –<br>6–8–பூழிநாடு | –<br>387–28–பூழிநாடு |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (5)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| **மோகூர்** | – | – | – | 5 ஆம் பத்து<br>44–14 மோகூர்<br>49–8 மோகூர் | – | – | 251–10–மோகூர் | |
| **குடநாடு** | – | – | – | 6 ஆம் பத்து<br>பதிகம்–5<br>55–9–குடநாடு<br>9ஆம் பத்து<br>பதிகம்–1<br>90–26–குடநாடு | – | – | –<br>6–8–குடநாடு<br>91–17–குடநாடு<br>115–5–குடநாடு | –<br>17–40–குடநாடு<br>177–12–குடநாடு<br>373–26–குடநாடு |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (6)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| கொங்குநாடு | –<br>– | –<br>– | –<br>– | 3 ஆம் பத்து<br>22–15–கொங்குநாடு<br>6 ஆம் பத்து | –<br>– | –<br>– | –<br>– | 130–5–கொங்குநாடு<br>373–9–கொங்குநாடு<br>– |
| நறவு | | | | 60–10–நறவு | | | | |
| ஒகந்தூர் | – | – | – | 9 ஆம் பத்து<br>85–8–ஒகந்தூர் | – | – | – | – |
| கொடுமணம் | – | – | – | 7 ஆம் பத்து<br>பதிகம்–9<br>87–1–கொடுமணம்<br>74–5–கொடுமணம் | – | – | – | – |
| பந்தர் | – | – | – | 7 ஆம் பத்து<br>67–2–பந்தர்<br>74–6–பந்தர் | – | – | – | – |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (7)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| பாடலிபுத்திரம் | 75–4<br>பாடலிபுத்திரம் | – | – | – | – | – | 265–20–<br>பாடலிபுத்திரம் | –<br>– |
| மருங்கை | 358–10–மருங்கை | – | – | – | – | – | – | – |
| குடந்தை வாயில் | 379–7–குடவாசல் | – | – | – | – | – | 44–18–குடவாசல்<br>60–13–குடவாசல் | – |
| குன்றூர் | – | 164–3–குன்றூர் | – | – | – | – | – | 389–10–குன்றூர் |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (8)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| ஆர்க்காடு | 19–6–ஆர்க்காடு<br>227–6–ஆர்க்காடு | 258–7–ஆர்க்காடு | – | – | – | – | – | –<br>– |
| துளுநாடு | 15–5–துளுநாடு | – | – | – | – | – | – | – |
| குறுக்கை | - | - | - | - | - | - | 45–9–குறுக்கை<br>145–11–குறுக்கை | – |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (9)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| விளங்கில் | – | – | – | – | – | – | 81–13–விளங்கில் | – |
| செல்லூர் | – | – | – | – | – | – | 90–9–செல்லூர் | – |
| ஓங்காடு | – | – | – | – | – | – | 91–12–ஒங்காடு | – |
| பருவூர் | - | - | - | - | - | - | 96–14–பருவூர் | - |
| கழுமலம் | – | – | – | – | – | – | 44–13–கழுமலம் | – |
| அழும்பில் | – | – | – | – | – | – | 44–15–அழும்பில்<br>283–5–அழும்பில் | – |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (10)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| வாகையூர் | – | – | – | – | – | – | 125–18–வாகையூர் | 351–6–வாகையூர் |
| அழுந்தூர் | – | – | – | – | – | – | 168–5–அழுந்தூர்<br>196–11–அழுந்தூர்<br>246–14–அழுந்தூர் | |
| வீரை | – | – | – | – | – | – | 206–12–வீரை | – |
| வெண்மணி வாயில் | – | – | – | – | – | – | 211–14–வெண்மணிவாயில்<br>246–9–வெண்மணிவாயில் | 66–6–வெண்மணிவாயில் |
| கள்ளூர் | – | – | – | – | – | – | 256–15–கள்ளூர் | – |
| அரிமணவாயில் | – | – | – | – | – | – | 44–15–அரிமண வாயில் | |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (11)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| உறத்தூர் | – | – | – | – | – | – | 266–20–உறத்தூர் | – |
| சீரலவாய் | – | – | – | – | – | – | 271–12–சீரலவாய் | – |
| மாங்காடு | – | – | – | – | – | – | 336–21–மாங்காடு | – |
| வல்லம் | – | – | – | – | – | – | 356–13–வல்லம் | – |
| புனல் நாடு | - | - | - | - | - | - | 396–2–புனல் நாடு | |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (12)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| நெய்தலங் கானல் | – | – | – | – | – | – | – | 10–12–நெய்தலங் கானல் |
| துறையூர் | – | – | – | – | – | – | – | 136–25–துறையூர் |
| நல்லூர் | – | – | – | – | – | – | – | 144–14–நல்லூர் |
| மாவிலங்கை | – | – | – | – | – | – | – | 176–6–மாவிலங்கை<br>379–6–மாவிலங்கை |
| ஈர்ந்தை | – | – | – | – | – | – | – | 180–7–ஈர்ந்தை |
| வல்லூர் | – | – | – | – | – | – | – | 181–6–வல்லூர் |
| சிறுகுடி | 386–9–சிறுகுடி<br>367–6–சிறுகுடி<br>340–9–சிறுகுடி | – | – | – | – | – | 54–4–சிறுகுடி<br>117–18–சிறுகுடி<br>118–4–சிறுகுடி<br>204–12–சிறுகுடி<br>269–22–சிறுகுடி | 70–13–சிறுகுடி |

## எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (13)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| இடையாற்று மங்கலம் | – | – | – | – | – | – | 141–13–இடையாற்று மங்கலம் | – |
| பெருந்துறை | – | – | – | – | – | – | 199–19–பெருந்துறை | – |
| அட்டவாயில் | – | – | – | – | – | – | 326–5–அட்டவாயில் | – |

# எட்டுத்தொகையில் - பிற ஊர்கள் (14)

| ஊர்பெயர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் | பாடல்–வரி–ஊர் |
| முள்ளூர் | 170–6–முள்ளூர் | 198–6–முள்ளூர் | – | – | – | – | 209–12–முள்ளூர் | 123–5–முள்ளூர் |
| | 291–7–முள்ளூர் | 312–3–முள்ளூர் | – | – | – | – | – | 126–8–முள்ளூர் |
| | | | | | | | | 174–13–முள்ளூர் |
| இருப்பையூர் | 260–6–இருப்பையூர் | – | 58–2–இருப்பையூர் | – | – | – | – | 181–5–இருப்பையூர் |
| | 350–4–இருப்பையூர் | | | | | | | |
| பாழி | – | – | – | – | – | – | 15–11–பாழி | – |
| | – | – | – | – | – | – | 142–9–பாழி | – |
| | – | – | – | – | – | – | 152–13–பாழி | – |
| | – | – | – | – | – | – | 208–6–பாழி | – |
| | – | – | – | – | – | – | 258–1–பாழி | – |
| | – | – | – | – | – | – | 372–3–பாழி | – |
| | – | – | – | – | – | – | 375–13–பாழி | – |
| | – | – | – | – | – | – | 395–3–பாழி | – |
| ஆமூர் | – | – | – | – | – | – | 159–19–ஆமூர் | 80–1–ஆமூர் |
| | | | | | | | | 85–5–ஆமூர் |

# சங்கத் தமிழக நகரங்கள்

முனைவர் (பி.எச்.டி) பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு



ஆய்வாளர்
திருமதி. **கி. துர்காதேவி,** எம்.ஏ., எம்ஃபில்.,

மேற்பார்வையாளர்
முனைவர் **பொன். கோதண்டராமன்**
முன்னைத் துணைவேந்தர்
சென்னைப் பல்கலைக் கழகம்

இணைமேற்பார்வையாளர்
முனைவர் **வீ. அரசு**
பேராசிரியர் – தலைவர்.
சென்னைப் பல்கலைக் கழகம்

**தமிழ் இலக்கியத்துறை**
சென்னைப் பல்கலைக்கழகம்
மெரினா வளாகம்
சென்னை – 600 005,

சனவரி – 2006.

## முடிவுரை

உலக அளவில் நாகரிகத்திலும், பண்பாட்டிலும் வீரத்திலும், மானத்திலும் உயர் கொள்கைகளைப் பெற்ற இனம் தமிழினம். இலக்கண இலக்கியச் சிறப்புகளைப் பெற்று நாகரிகத் தொட்டிலாக விளங்குவது பண்டைத் தமிழகம்.

ஆழ்கடலில் சென்று முத்துக் குவியல் தேடுதல் போன்று நம் பண்டைய சங்க இலக்கியங்கள் வழியே பல அரிய பண்பாட்டுச் சிறப்புகளையும், வாழ்க்கை முறைமைகளையும், நாகரிகச் சிறப்பு களையும் விரிவாக ஆய்ந்து தெளியும் இலக்கண இலக்கியங்களும், முச்சங்க வரலாற்றையும் முழுமை படுத்தும் சங்ககால இலக்கியங்களும், சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய காப்பியங்களும் இம்மண்ணுலகில் நிலைத்து நின்று பழந்தமிழகத்தின் பெருமையை எடுத்துக் காட்டுகின்றன.

காலங்களையெல்லாம் கடந்து இறவாப் புகழுடையதாய் என்றும் இனிமை பயப்பன நம் இலக்கியங்கள். நாம் இலக்கியங்கள் வழியில் தான் பண்டைக்கால நாகரிகப் பண்பாட்டு உறவுகளை அறியமுடியும்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் வணிகத்திலும், ஏற்றுமதியிலும் உயர்ந்து விளங்கியதற்கு மூவேந்தர்களின் துறைமுகங்களே அடிப்படைச் சான்றுகளாகும். பட்டணங்கள் சிறப்புற்றமைக்கு வெளிநாட்டினரின் குறிப்புகளும், இலங்கியங்களும் புறச் சான்றுகளாகும்.

கடல் வழி வாணிகத்தில் சிறந்திருந்த நாம் பொருளாதார முன்னேற்றம் கண்டு பயிர்த்தொழிலிலும், விளைபொருள் உற்பத்தியிலும், வேளாண்மைப் பெருக்கத்திலும் தன்னிறைவு பெற்றிருந்தோம்.

நாட்டகப்பட்டினங்களும், துறைமுகப்பட்டினங்களும் சிறப்புற்று விளங்கியதால் ஊரக வாழ்க்கையும் நகரிய வாழ்க்கையும் நாகரிகத்திலும் பண்பாட்டிலும் உயர்நிலை பெற்றிருந்தது.

இயல் ஒன்றில் முன்னுரையில் ஆய்வின் தலைப்புத் தேர்வு முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள், ஆய்வின் நோக்கம், ஆய்வுத்திட்டம் ஆகியன விரிவாக ஆயப்பெற்றுள்ளன.

இயல் இரண்டில் சங்கத் தமிழக நகரங்களில், தலைநகரங்களாக விளங்கிய நகரங்கள் நாட்டகப்பட்டணங்கள் என்று ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. ஒரு நாட்டின் வளர்ச்சிக்குக் காரணமாக உள்ள தலைநகரங்களுக்கு உரிய பண்புகளைப் பெற்று அந்நாட்டின் நடுவில் அமைந்துள்ள பட்டணம் நாட்டகப்பட்டணம் எனக் கருதப்பட்டுள்ளது. சேரர்களின் நாட்டகப் பட்டணமாக வஞ்சியும், சோழர்களின் நாட்டகப்பட்டணமாக உறந்தையும், பாண்டியர்களின் நாட்டகப்பட்டணமாக மதுரையும் சங்க காலத்தில் சிறந்து விளங்கியுள்ளன. சங்கத் தமிழக நகரங்களில் பட்டணம், பட்டினம் எனும் இருவகையின, அவை நாட்டகப்பட்டணமாகவும் துறைமுகப் பட்டினமாகவும் ஆராயப்பட்டுள்ளன.

இயல் மூன்றில் சங்க கால துறைமுகப்பட்டினங்களுள், சேரர்களின் துறைமுகப்பட்டினங்களாக, முசிறி, தொண்டி, மாந்தை எனமூன்றும், சோழர்களின் துறைமுகப்பட்டினமான காவிரிபூம்பட்டினமும், பாண்டியர்களின் துறைமுகப்பட்டினங்களில் கொற்கையும் காயலும் சிறந்து விளங்கியுள்ளன.

துறைமுகப்பட்டினங்களால் நாட்டின் பொருளாதாரம் உன்னத நிலையினை அடைந்துள்ளது. கடல் வழிப் போக்குவரத்து இருக்கும் பொழுது நமக்குச் செல்வாக்கு அதிகமாகவும், கடல்வழிப் போக்குவரத்து குறையும் பொழுது வடக்கே செல்வாக்கு அதிகமாகவும் காணப்பட்டது.

இயல் நான்கில் சங்ககால வாழ்க்கை முறையை, ஊரக வாழ்க்கை முறை நகரிய வாழ்க்கை முறை எனப் பிரித்துப் பார்க்கும் பொழுது நகரிய வாழ்க்கை முறையை விட ஊரக வாழ்க்கை முறையே சிறந்து விளங்கியுள்ளமை அறியப்படுகிறது.

குடும்பக் கட்டுக் கோப்பு ஊரக வாழ்க்கை முறையில் கடைபிடிக்கப்பட்டுக் கூட்டுக் குடும்ப வாழ்க்கை பேணப்பட்டுள்ளது. குடும்பத்தில் ஒரே தொழில் தந்தை வழித் தொழிலாகச் செய்யத் தலைப்படுவதும் கூட்டுக் குடும்பத்திற்குக் காரணமாக அமைந்தது. நகரிய வாழ்க்கையில், அரண்மனை, துறைமுகம், வாணிகம் சார்ந்த பலப்பல தொழில்கள் காணப்பட்டதால் கூட்டுக் குடும்ப வாழ்க்கை கடைபிடிக்க இயலாத சூழ்நிலை உருவாகியுள்ளது. பன்மொழி பேசும் பலதரப்பட்டமக்கள் கலந்து வசிக்கும் நகரிய வாழ்க்கை நாகரிகத்தின் உச்சக்கட்டத்திற்கும் பண்பாட்டுச் சிதைவுக்கும் காரணமாக அமைந்துள்ளது. ஊரக வாழ்க்கை முறையில் காணப்படாத பரத்தையர் செல்வாக்கு நகரிய வாழ்க்கையில் அதிகமாகக் காணப்பட்டுள்ளது. ஊரக வாழ்க்கைமுறை, நகரிய வாழ்க்கை முறையை விடப் பல வகையிலும் சிறந்து காணப்பட்டுள்ளதை இவ்வியல் உறுதி செய்துள்ளது.

இயல் ஐந்தில் தமிழர் வாழ்க்கையின் பொற்காலமாகக் கருதப்பட்ட சங்க காலத்தில் மக்களின் நாகரிகமும் பண்பாடும் எங்ஙனம் வெளிப்பட்டன என்பதும் சங்ககால மக்களின் அன்றாட வாழ்க்கை முறை, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், பொழுதுபோக்குகள், விளையாட்டுகள் போன்றவையும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

இயல் ஆறில் சங்கத் தமிழக நகரங்கள் என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வின் மூலம் கிடைத்தச் செய்திகளின் சுருக்கம் இயல்களின் முடிவில் முடிவுரையாகத் தரப்பட்டுள்ளன.

பின்னிணைப்பில்,

1. உசாத்துணைக் குறிப்பு அகரநிரல்
2. நிழற்படங்கள்
3. அட்டவணைகள்
4. வரைபடங்கள்

ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன.

## எதிர்கால ஆய்விற்கு

இன்றைய காலக்கட்டத்தில் அகழாய்வு வளரும் வாய்ப்பு அதிகமாக உள்ளதால், சங்க இலக்கியங்கள் காட்டும் நகரங்கள் அனைத்தையும் அகழாய்வின் மூலம் விரிவாக ஆராயலாம். அகழாய்வும் கடல்வழி அகழாய்வும் சேரும் பொழுது ஆய்வு செழுமை அடையும். அவ்வகையில் நகரங்கள் பற்றிய ஆய்வினை மேற்கொண்டால் இந்திய வரலாற்றினையே உரிய முறையில் மீட்டுருவாக்கம் செய்ய வேண்டிய தேவை ஏற்படலாம்.